494.8045
NO

# இலக்கணச் சூடாமணி

ALAGAPPA UNIVERSITY, KARAIKUDI
CENTRAL LIBRARY
Accession No. 36308
Date of purchases:
Call Number: 499.8045 NO

பொதுப்பதிப்பாசிரியர்

முனைவர் த.கோ. பரமசிவம்

தலைவர், ஓலைச்சுவடித்துறை




குறிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி

விரிவுரையாளர் ஓலைச்சுவடித்துறை






தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு: 127 ISBN 81-7090-159-6

திருவள்ளுவர் ஆண்டு - 2021 சித்திரைத் திங்கள் - ஏப்ரல் 1990

| | |
|---|---|
| நூல் | இலக்கணச் சூடாமணி |
| பொதுப்பதிப்பாசிரியர் | முனைவர் த.கோ.பரமசிவம் |
| குறிப்பாசிரியர் | முனைவர் சா.கிருட்டிணமூர்த்தி |
| பதிப்பு | முதற்பதிப்பு |
| விலை | உரூ. 45/- |
| அச்சு | சர்மாஸ் சானடோரியம் அச்சகம், புதுக்கோட்டை. |

இந்நூல் மைய அரசின் தில்லி தேசிய ஆவணக்காப்பகம் வழங்கிய நல்கையின்வழி வெளியிடப்படுகிறது.

Published with the financial assistance of National Archives, Govt. of India, NewDelhi.

# உள்ளுறை

## தேசிய ஆவணக்காப்பக நல்கைத் திட்டம்

## 1988 - 89

### இத்திட்டத்தில் பணியாற்றியோர்

1. முனைவர் த.கோ.பரமசிவம்

   *தலைவர், ஓலைச்சுவடித்துறை*

2. முனைவர் சா.கிருட்டிணமூர்த்தி

   *விரிவுரையாளர்*

3. புலவர் ப.வெ.நாகராசன்

   *தொழில் நுட்ப உதவியாளர்*

4. திரு சி.இலட்சுமணன்

   *தொழில் நுட்ப உதவியாளர்*

5. புலவர் வீ.சொக்கலிங்கம்

   *திட்ட உதவியாளர்*

6. புலவர் ப. கண்ணையன்

   *திட்ட உதவியாளர்*

7. திரு ஆர். கிருட்டிணன்

   *திட்ட உதவியாளர்*

8. திருமதி ர. ஜெயலட்சுமி

   *திட்ட உதவியாளர்*

# பதிப்புரை

இலக்கணச் சூடாமணி என்னும் இவ்விலக்கண நூல் முதன் முறையாக ஓலைச் சுவடியினின்று வெளிவரும் சுவடிப்பதிப்பாகும். யாப்பிலக்கணம் பற்றிய இவ்விலக்கண நூலில் நூற்பா, பழைய உரை, புதிய குறிப்புரை ஆகியவற்றுடன் ஆய்வுரை, இயல்விளக்கக் கட்டுரைகள், பின் இணைப்புகள் போன்ற பகுதிகளும் முறையாகஇடம்பெற்றுள்ளன. தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச் சுவடித்துறை வெளியீடாக வெளிவரும் இந்நூல், இங்குள்ள சுவடிநூலகத்தின் சுவடி ஒன்றை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப்பெற்றதாகும்.

இலக்கணச்சூடாமணி எனப் பெயரிடப் பெற்ற அச்சுவடி (சுவடி எண். 1452) 108 ஏடுகளைக் கொண்டது. அது வெண்பா வடிவிலான 58 நூற்பாக்களையும் அவற்றுக்குரிய பழைய உரையையும் பெற்றது. நூல் தோன்றிய காலத்தையும் உரை தோன்றிய காலத்தையும் அச்சுவடியின்வழி அறியக் கூடவில்லை. ஆயின், சுவடியின் இறுதியில் பிற்குறிப்பு காணப்படுகிறது. அதில் சுவடி எழுதப்பெற்ற காலம் குறிக்கப்பட்டுள்ளது.

> துந்துபி ஞூ தை மீ ய கூ சுக்கிற வாறனாள் அனுடடமி அஞ்சறை னாழிகைக்கி ரெபதி நஷெத்திரம் சுகறமநாமயொகம் ய ச வ வச்சிர நாமயொகம் மூணெகால் இலக்கண சூடாமணிமுற்று (இது ஏட்டுவடிவம்)
>
> இதன் திருந்திய வடிவம்:
>
> துந்துபி வருடம் தை மாதம் 19 சுக்கிர வார நாள், அனுட்டமி ஐந்தரை நாழிகைக்கு ரேவ்தி நட்சத்திரம் சுகர்ம நாம யோகம் 14 வச்சிரநாம யோகம் மூன்றே கால் இலக்கணச் சூடாமணி முற்று.

இக்குறிப்பை ஆய்வு செய்யும்போது, 30-1-1863ல் அச்சுவடி எழுதப்பெற்றமை புலப்படும். ஆக, அச்சுவடி இற்றைக்கு 125 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பெற்றது எனலாம். பிற சுவடி நூலகங்களில் காணப்படும் (டாக்டர் உ.வே.சா.; பேரூர்) இலக்கணச்சூடாமணிச் சுவடிகளில் இவ்வகைக் குறிப்பு ஏதும் காணப்பெறவில்லை என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கதாம்.

இந்நூல் யாப்பிலக்கணம் கூறுவதோடு மட்டும் நில்லாமல் பிரபந்தங்களுக்கும் இலக்கணம் சுட்டுகிறது. உறுப்பியல், பாவியல், பாவினவியல், பிரபந்தவியல், ஒழிபியல் என்னும் ஐந்து இயல்களால் நடைபெறுகிறது. சிந்துப் பாடல்களுக்கு முதன்முதலாக இலக்கணம் வரையறுத்துக் காட்டும் நிலையில் இந்நூல் தனிப்பட எண்ணத்தக்க சிறப்புடையதாம். இத்தகைய அரிய புதிய நூலை வெளியிடுவதில் தமிழ்ப் பல்கலைக்கழகம் பெருமையடைகிறது.

## தேசிய ஆவணக்காப்பக நல்கை

தில்லி தேசிய ஆவணக்காப்பகம் சுவடிகளைப் பாதுகாப்ப தற்கும் அவற்றை முறையே பதிப்பித்து வெளியிடுவதற்கும் ஆண்டுதோறும் சுவடி நிறுவனங்களுக்கு நல்கைகள் வழங்கி ஊக்குவித்து வருகின்றது. அந்தவகையில், தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ஓலைச்சுவடித்துறையும் திட்டங்களைத் தயாரித்தனுப்பி ஆண்டுதோறும் நல்கைகளைப் பெற்று உரிய வகையில் அவற்றை நிறைவேற்றியும் வருகின்றது. இவ்வாண்டு சுவடிகளைப் பராமரிக்கவும் அரிய நூல்களைச் சுவடியினின்று வெளியிடவும் தேசிய ஆவணக்காப்பகம் ரூ. 1,00,000 நல்கை வழங்கியது.

இந்நல்கைத் திட்டத்தின்கீழ்ச் சுவடிப் பராமரிப்புச் செலவுடன் 3 நூல்களை வெளியிடும் செலவையும் இத்துறை வகுத்தது. தமிழ்ச்சுவடி விளக்கஅட்டவணையின் ஐந்தாம் தொகுதி, இலக்கணச் சூடாமணி, சாந்தாதி அசுவமகம் ஆகிய மூன்று நூல்களே இத் திட்டத்தின் கீழ் வெளிவரும் நூல்கள். இம்மூன்று நூல்களுமே முதன்முறையாக வெளிவரும் சுவடிப் பதிப்புகளாம் என்பதும் ஈண்டு சுட்டத்தகுவதாம். வெளிவராத நூல்களை வெளிக்கொணரத் துணைபுரியும் தேசிய ஆவணக் காப்பகத்தின் நல்கைத் திட்டம் பெரிதும் பாராட்டுக்குரியது என்றால் அது மிகையாகாது.

## இலக்கண வரலாறு

தமிழிலக்கியத்தில் இலக்கிய வரலாறு போன்றே இலக்கணத்தின் வரலாறும் தொன்மையும் தொடர்ச்சியும் கொண்டதாகக் காணப்படுகிறது. தொல்காப்பியம், காக்கை

பாடினியம், யாப்பருங்கலம், காரிகை, நன்னூல் போன்ற பேரிலக்கண நூல்கள் தோன்றிய பின்னரும் அவற்றைத் தொடர்ந்து எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி போன்ற அதிகாரங்களில் பிற்காலத்தும் பலநூல்கள் தோன்றலாயின. ஒவ்வொரு நூலும் தொல்காப்பிய மரபையும் மாண்பையும் பின்பற்றிய நிலையிலேயே எழுந்தன. எனினும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் ஒவ்வொரு பொருளில் தனித்துவம் பெற்றதாகவே காணப்படுகின்றன.

தமிழ் இலக்கண வரலாறு குறித்துத் தமிழ் முதறிஞர் செம்மல் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் கூறும் கருத்து ஈண்டு நினைதற்குரியது.

> 'எல்லா மொழிக்கும் இலக்கிய வரலாறு எழுதமுடியும். ஆனால் இலக்கண வரலாறு எழுதும் தகுதிப்பேறு ஒரு கைவிரலிலும் குறைந்த மொழிகட்கே உண்டு. வடமொழியும் தமிழும் இலக்கண வரலாறு எழுதத்தக்க அருட்செல்வமுடையவை. இவ்விரண்டனுள் வடமொழிக்கோ இலக்கண வரலாற்றில் வளர்ச்சியில்லை. வழக்கிலாமொழி வடமொழியாதலின், பழையன கழிதல், புதியன புகுதல் என்ற இலக்கணப் போக்குவரவிற்கு இடனில்லை. அதன் வரலாறு பல நூற்றாண்டுகட்கு முன்பே நடுகல் போல நின்றுவிட்டது. சில இந்திய மொழிகட்கு இலக்கண வரலாறு கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பிந்தியதாகும். ஞாலமொழியுள்ளும் இந்தியமொழியுள்ளும் தொன்மை, புதுமை, இடையறவுபடாத் தன்மை எல்லாம் தழுவிய இலக்கண வரலாறு தமிழ்மொழி ஒன்றுக்கே உரியது' (அணிந்துரை இலக்கண வரலாறு).

தமிழ்மொழியின் இலக்கண வரலாறு இத்தகு தொடர் வரலாறு ஆகும். நமக்குக் கிடைக்கின்ற இலக்கண நூல்களைவிடக் கிடைக்காமல் அழிந்தொழிந்த நூல்கள் பலவாகும். கிடைக்கின்ற நூல்களை மேலோட்டமாகக் காணும்போதே தமிழிலக்கண வளர்ச்சியிலும் வாழ்விலும் தமிழறிஞர் கொண்டிருந்த பற்று நமக்குத் தெற்றெனப் புலனாவதாகும்.

தொல்காப்பியத்தைத் தொடர்ந்து வந்த நூல்கள் சில அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடைத்தனவேயன்றி முழுமை

யாகக் காணக்கிடைக்கவில்லை. அவிநயம், காக்கைபாடினியம், சங்கயாப்பு சிறுகாக்கைபாடினியம், நத்தத்தம், பல்காயம், இந்திரகாளியம், பன்னிருபடலம், மயேச்சுரம் போன்ற நூல்கள் அத்தகையன. அண்மையில் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் தம் நுண்மாண் நுழைபுலத்தால் காக்கைபாடினியத்தை மீட்டுருவாக்கம் செய்து வெளியிட் டுள்ளார்கள் என்பது இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாம். பிற நூல்களும் இவ்வாறு வெளிவரின் தமிழ்மொழி மேலும் வளம்பெறுவதாகும்.

தொல்காப்பியத்தைத் தொடர்ந்த நூல்களில் இடையறவு காணப்படினும் யாப்பிலக்கணம் தொடர்பாக மட்டும் இன்று நமக்குக் கிடைக்கும் நூல்கள் முப்பதுக்கும் மேற்பட்டன என்பதை நினையும் போது பெருமையாகவும் பூரிப்பாகவும் இருக்கிறது. தொல்காப்பியம் செய்யுளியல் நூற்பா வடிவினது. இதை அடுத்துக் கிடைக்கும் யாப்பருங்கலம் அவ்வடிவத்தையே ஏற்று, யாப்பு வளர்ச்சியைப் பதிவு செய்தது. அதன்பின் மலர்ந்த யாப்பருங்கலக்காரிகையும் வீரசோழியமும் கட்டளைக் கலித் துறையைத் தம் வடிவமாகக் கொண்டன.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் மலர்ந்த வச்சணந்தி மாலை என்பது வெண்பா வடிவம் கொண்டது. இதனை வெண்பாப் பாட்டியல் என்றும் கூறுவர். அந்தாதி முறையில் அமைந்த இந்நூல் 100 வெண்பாக்களைக் கொண்டது. இது, யாப்பருங்கலத்தும், காரிகையிலும் காணாத பத்துப் பொருத்தங்களையும் பாக்களின் சாதி, இராசி, தேவதை, பாடும்விதம், நல்லவை, தீயவை போன்ற இயல்புகளையும் விளக்கி நிற்கிறது.

சற்றேறக்குறைய இதே காலத்து மலர்ந்த தண்டியலங்காரம் செய்யுள்களில் பயின்றுவரும் அணிகளை விளக்க வந்த நூலாகக் காட்சிதருகிறது. நூற்பா யாப்பினால் இயன்ற இந்நூல் 125 நூற்பாக்களைக் கொண்டதாகும். இந்நூல் மடக்கின் இலக்கணம், அவற்றின் வகைகள், சித்திரக் கவிகளின் இலக்கணம் போன்றவற்றைத் தெளிவு பெறும் வண்ணம் எடுத்துக் காட்டுகளுடன் தருகின்றமை குறிப்பிடத்தக்கதாம்.

ஏறக்குறைய 14ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட பன்னிருபாட்டியல் என்னும் நூல் 360 நூற்பாக்களில் எழுத்தியல்

சொல்லியல் இனவியல் ஆகிய பொருள்களை விரித்துரைக்கும் யாப்பு நூலாகக் காணப்படுகிறது. சிற்றிலக்கிய வகைகளை அறுபத்தாறாகக் காட்டும் இந்நூல் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு எனத் தொகை நூல்களுக்கும் விளக்கம் தந்திருக்கின்றது.

இக்காலத்தை ஒட்டித் தோன்றிய நவநீதப்பாட்டியல் கட்டளைக் கலித்துறை யாப்பால் இயற்றப்பட்டது. 105 பாடல்களையுடைய இந்நூல் பன்னிருபாட்டியலை ஒத்ததாகக் காணப்படுகிறது. பொருத்தவியல், செய்யுள் மொழியியல், பொதுமொழியியல் என்னும் மூன்றியல்களையுடைய இந்நூல் எழுதப் பயன்படும் ஓலையது இலக்கணத்தையும் கூறுதல் காணலாம்.

நான்கு வருணங்களும் அவற்றின் ஆட்சியும் எவ்வாறெல்லாம் செல்வாக்குற்றிருந்தன என்பதற்குக் கீழ்வரும் பாடல் சான்றாதல் காணலாம்.

'ஓலைய திலக்கணம் உரைக்கும் காலை
நாலாறு விரலாம் நான்மறை யோர்க்கே
பாருடை யோர்க்குப் பதிற்றி ரண்டாகும்
வணிகர்க் கிரெண் விரலா கும்மே
சாணென மொழிப சூத்திரர்க் களவே.!

அந்தணர்க்கு 24 விரலளவு அரசர்க்கு 20 விரலளவு வணிகர்க்கு 16 விரலளவு சூத்திரர்க்கு 9 விரலளவு என வேறுபட்ட அளவுகளில் ஓலைகளை எடுக்கவேண்டும் என்று இலக்கணம் கூறுகின்ற அளவுக்குச் சாதிவேறுபாடும்! ஆட்சியும்!

பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதியாரால் இயற்றப்பட்ட சிதம்பரப்பாட்டியல் 47 எண்சீர் விருத்தத்தால் யாப்பிலக்கணத்தையும் பாட்டியல் இலக்கணத்தையும் ஒரு சேரத் தருகின்றது. இக்காலத்தே மலர்ந்த மாறன் அலங்காரம் என்னும் அணி நூல் நூற்பா, அகவல், வெண்பா எனப்பல்வேறு பாவகையில் 326 நூற்பாக்களையுடையது. தண்டியலங்காரத்தைவிட இந்நூல் விரிவுடையது.

இக்காலத்தே இலக்கியம் காட்டி, இலக்கணம் சுட்டும் நிலையில் இரண்டு நூல்கள் தோன்றின. அவற்றுள் முதலாவது பாப்பாவினம்

என்பதாகும். திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பார் செய்த இந்நூல், வெண்பா, வெண்பா இனம்; ஆசிரியப்பா ஆசிரியப்பாவினம்; கலிப்பா, கலிப்பாவினம்; [வஞ்சிப்பா, வஞ்சிப்பாவினம்; மருட்பா எல்லாவற்றுக்கும் இலக்கியம் காட்டி இலக்கணம் கூறுகின்ற நிலையில் காணப்படுகிறது. இரண்டாவது நூல் சிதம்பரச் செய்யுட்கோவையாகும். முந்திய பாப்பாவினம் வைணவச் சார்புடையது. குமரகுருபரர் இயற்றிய இதுவோ சைவசமயத்தைச் சார்ந்தது என்பது நூலின் பெயராலேயே உணரப்படுவதாம். இவை இரண்டும் செய்யுளியலில் குறிப்பிடத் தக்க சிறப்பிடத்தைப் பெற்றனவாம்.

பதினேழாம் நூற்றாண்டில் வைத்தியநாத தேசிகரால் செய்யப்பட்ட இலக்கணவிளக்கம், பதினெட்டாம் நூற்றாண்டின் சிவஞான முனிவரால் இயற்றப்பட்ட இலக்கண விளக்கச் சூறாவளி போன்றன செய்யுளியலில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியைக் காட்டவில்லை எனலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழகம் வந்த வீரமாமுனிவர் என்னும் இத்தாலியரும் தமிழிலக்கண நூல் செய்துள்ளார். தொன்னூல் விளக்கம் என்னும் இந்நூல் 370 நூற்பாவால் ஐந்திலக்கணம் உணர்த்துவதாம். (இவர் அந்தணரை வன்னியர் என்று குறித்துள்ளார். வன்னி_நெருப்பு தீ வளர்த்து வேள்விபுரிவோர் என்னும் பொருளில்) செய்யுளியலில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏதும் இல்லை. இவ்வாறே ஐந்திலக்கணம் கூறும் நூல்களுள் 19ம் நூற்றாண்டில் மலர்ந்த முத்து வீரியமும் குறிப்பிடத்தக்கதாம், இது செய்யுளியலில் சவலை வெண்பா என்னும் ஒன்றையும் கூறுகிறது. (சிதம்பரச் செய்யுட்கோவையும் பாப்பாவினமும் இது பற்றிக் கூறுகின்றன) இக்காலத்து மலர்ந்ததே சுவாமிநாதம். இதுவும் ஐந்திலக்கணம் கூறுவதாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய தண்டபாணி சுவாமிகள் பல்வேறு வகைப்பட்ட பாக்களில் ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடிய இலக்கியப் புலவராகவும் விளங்கினார்கள். வண்ணங்களைப் பாடி வளர்த்தமையின் அவரை வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் என்றே அழைத்தனர். அவர்தம் அறுவகையிலக்கணம் 786 பாடல்கள் கொண்டதாம். இதன் யாப்பிலக்கணத்தில் வண்ணவியல்பு மோனை, எதுகை,


Alagappa university
Central Library
36308



நா[illegible] பல்பு ஆகியன சிறப்பு விளக்கங்களைப் பெற்றிருக்கின்றன.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் (1938) வழக்குரைஞர் வீரபத்திர முதலியார் என்பவர் விருத்தப்பாவின் வளர்ச்சியை மட்டும் சிறப்பாகக் குறித்திருக்கின்றார். 12 படலங்களில் விருத்தப்பாவியல் என்னும் பெயரில் விளக்கி எழுதப்பெற்ற அந்நூலில் விருத்தப்பாவின் வளர்நிலையைத் தெளிவாக உணரலாம். இவ்வாறே யாப்பு நூல் (சரவணத் தமிழன்) என்ற இலக்கண நூல் (193 நூற்பா- உரையாசிரியரும் நூலாசிரியரே) ஒன்றும் இந்நூற்றாண்டில் மலர்ந்திருக்கக் காணலாம்.

இவையேயன்றி உரைநடையமைப்பிலும் செய்யுளிலக்கணம் (1893 கலியாண சுந்தரயதீந்திரர்) சித்திரகவி விளக்கம் (1898 சூரிய நாராயண சாத்திரியார்) போன்ற நூல்கள் தோன்றியுள்ளன.

யாப்பிலக்கணம் கூறாமல் இலக்கிய வகைகளை மட்டும் கூறும் நூல்களும் சில தோன்றியுள்ளன. நூற்பா வகையில் தோன்றிய பிரபந்ததீபம் என்னும் நூல் 97 வகை சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணம் கூறுவதாக உள்ளது. பிரபந்தத் திரட்டு என்னும் நூல் ஒன்று 96 வகைப் பிரபந்தங்களையும் பட்டியலிட்டுக்காட்டுகிறது. 71 வெண்பாக்களைக் கொண்ட இந்நூல் காட்டும் சில பெயர்கள் (வாடாதமலர், பண்ணை விசித்திரம், களவு கன்னி, இந்திரசாலம், திருவடிச் சுவடு, காதல் எதிர்மொழி போன்றன) புதுமையாகக் காணப்படுகின்றன. சிலவற்றுக்கு உரிய இலக்கிய நூல்கள் இன்னும் கிடைக்கவில்லை.

தமிழ்மொழியின் யாப்பிலக்கண வளர்ச்சி-வரலாறு இத்தகு நூல்களால் தொடர்ந்து காணப்படுகிறது. இவ்வாறே பிற எழுத்து, சொல், அணி இலக்கண நூல்களும் தொடர்ந்து மலர்ந்தன. தமிழ்மொழிக்கு இத்தகு நூல்கள் சிறந்த அணிகலன்களாக அமைவதோடு, மொழி வளர்ச்சியை, மாற்றத்தைப் பதிவு செய்த காலச் சுவடுகளாகவும் அமைந்துவிட்டமை பெருமைக்குரிய செய்தியாகும்.

அ

## கிடைத்தற்கரிய நூல்கள்

தனி நூலாகவும், பிறநூல்களில் எடுத்தாளப்பெற்ற நூலாகவும், முழுமையாகவும் கிடைத்த நூல்களேயன்றிக் கிடைக்கா தொழிந்த நூல்களும் பலவாகும். அத்தகு நூல்கள் பற்றிய குறிப்புகள் பிறநூல்களில் காணப்படுகின்றன. உரையாசிரியர், பதிப்பாசிரியர் மேற்கோள்களில் காணப்படுகின்றன. இவ்வாறே அச்சானதாகக் கருதப்பெறும் நூல்களுள் சிலவும் இன்று கிடைத்தற்கரிய நிலையில் உள்ளன. முற்றிலும் அழிந்த நிலையிலோ, வெளிக்கொணர்வார் இன்றி மூலையில் முடங்கிய நிலையிலோ அவை இருத்தல் கூடும். இத்தகு நூல்கள் பலவற்றை இலக்கணவரலாறு எழுதிய (1988) புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் தம் நூலில் தொகுத்துப் பட்டியலிட்டுள்ளார்கள். அப்பட்டியலின் யாப்புத் தொடர்பான நூல்களை இங்கே சுட்டுதல்தகும் என்று நம்புகிறேன்.

| | |
|---|---|
| அகத்தியர் பாட்டியல் | சிதம்பரப் பாட்டியலுரை |
| அடிநூல் | நக்கீரர்; யாப்பருங்கல விருத்தியுரை |
| அணியியல் | யா.வி. |
| அவிநயனார் கலாவியல் | நவநீதப் பாட்டியலுரை |
| ஆனந்த வோத்து | நவநீதப் பாட்டியலுரை |
| இலக்கணக் களஞ்சியம் | வேதகிரி முதலியார் |
| இலக்கணக் கோவை | காமக்கூர் சுந்தர முதலியார் |
| இலக்கணச் சந்திரிகை | அ.குமாரசாமிப்பிள்ளை |
| இலக்கணச் சுருக்கம் | வாசுதேவ முதலியார் |
| இலக்கண சாரம் | வேலாயுத முதலியார் |
| இலக்கண சிந்தாமணி | சகராவு முதலியார் 1880 |
| இலக்கணச் சூடாமணி | கிருட்டிணபிள்ளை; 1883 |
| இலக்கணத் திரட்டு | வேதகிரி முதலியார் |
| இலக்கண தீபம் | கையெழுத்து நூலகம் |
| இலக்கண நூலாதாரம் | புதுச்சேரி; 1849 |
| இலக்கணம் | சௌந்திரராச ஐயங்கார் |
| இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு | சபாபதி நாவலர் |
| இலக்கண வினாவிடை | ஆறுமுக நாவலர் |
| இலக்கண வினாவிடை | தாண்டவராய முதலியார் |
| இலக்கண வினாவிடை | போப்பையர் |

| இளந்திரையம் | மயிலை நாதருரை |
|---|---|
| இன்மணியாரம் | நவநீதப் பாட்டியலுரை |
| கடிய நன்னியார் | |
| கைக்கிளைச் சூத்திரம் | யா.வி. |
| கவிசாகரம் | வேதகிரி முதலியார் |
| கவிமயக் கறை | யா. வி. |
| கிரணியம் | யா. வி. |
| கையனார் யாப்பியல் | யா.வி. |
| கொடுந்தமிழ் | வீரமா முனிவர் |
| கோவை சாரம் | கையெழுத்து நூலகம் |
| சயந்தம் | அடியார்க்கு நல்லாருரை |
| சாதவாகனம் | மயிலை நாதருரை |
| சித்திரகவி(உரையுடன்) | கையெழுத்து நூலகம் |
| சிற்றட்டகம் | யா.வி. |
| செய்யுளியல் | யா.வி. |
| செய்யுள் வகைமை | நவநீதப் பாட்டியல் |
| செயிற்றியம் | யா. வி. |
| தக்காணியம் | யா.வி. |
| தத்தாத்திரேயப் பாட்டியல் | சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும் |
| திணை நூல் | யா.வி. |
| திருப்பிரவாசிரியர் | |
| தூக்கியல் | நவநீதப் பாட்டியலுரை |
| தொனி விளக்கு | பி. சுப்பிரமணிய சாத்திரி |
| நக்கீரர் நாலடி | யா.வி. |
| நல்லாறன் மொழிவரி | யா.வி. |
| பரிப்பெருமாள் | |
| இலக்கண நூல் | திருக்குறள் உரைப்பாயிரம் |
| பரிமாணனார் | |
| யாப்பிலக்கணம் | யா.வி. |
| பருணர் பாட்டியல் | நவநீதப் பாட்டியலுரை |
| பல்காப்பியம் | யா.வி. |
| பல்காப்பியப் புறனடை | யா.வி. |
| பனம்பாரம் | யா.வி. |
| பாட்டியல் மரபு | யா.வி. |
| பாடலம் | யா.வி. |
| பிரபந்த மரபியல் | இலக்கிய அகராதி |

| | |
|---|---|
| புணர்பாவை | யா.வி. |
| பூத புராணம் | நச்சினார்க்கினியருரை; இறையனார் களவியலுரை |
| பெரியமுப்பழம் | யா.வி. |
| பெரும் பொருள் விளக்கம் | நச்சினார்க் கினியருரை |
| பெருவள நல்லூர் பாசண்டம் | யா.வி. |
| பொய்கையார் கலாவியல் | ந.பா. |
| பொய்கையார் பாட்டியல் | ந.பர். |
| போக்கியம் | யா.வி. |
| மாபுராணம் | இறையனார் களவியலுரை |
| முள்ளியார் கவித்தொகை | ந.பா. |
| யாப்பியல் | யா.வி. |
| யாப்பிலக்கணம் | சரவணப் பெருமாளையர் |
| லோக விலாசனி | யா.வி. |
| வண்ணத்தியல்பு | வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் |
| வாருணப் பாட்டியல் | சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும் |

இப்பட்டியலில் இடம்பெற்ற நூல்களுள் ஒன்றே இலக்கணச் சூடாமணி. இவ்வரிய பட்டியலுக்கும் நூலுக்குமாக, புலவர் இரா. இளங்குமரன் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அவர்களுக்கு ஓலைச் சுவடித்துறை பெரிதும் நன்றி பாராட்டுகின்றது.

## இலக்கணச்சூடாமணி

பாட்டியல் நூல்களும் அவை காட்டிய இலக்கிய வகைகளும் நாளுக்கு நாள் பெருகத் தொடங்கிய காலத்தும் அவற்றுக்குப் பின்னரும் தொடர்ந்த இலக்கண நூல்களில் பல்வேறு வகைப்பட்ட புதுச் செய்திகளும் இடம்பெறலாயின. இந்த வகையில் 17ம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் இலக்கணச் சூடாமணியும் புதிய செய்திகளைத் தாங்கிய வண்ணம் மலர்ந்தது. தமிழ்ப் பல்கலைக்கழகம் பெருமையுடன் வெளியிடும் இந்நூல், தமிழ் இலக்கண வரலாற்றில் இடம்பெறத்தக்க சிறப்புடைய இலக்கண நூலாகத் திகழும் என்னும் நம்பிக்கையில் இன்று வெளிவருகிறது.

இலக்கணச்சூடாமணி நூலும் பழைய உரையுமாகச் சுவடியில் காணப்பட்டது. இதனைப் பதிப்புக்கு எடுத்துக்கொண்ட போது, எவ்வாறெல்லாம் இதனை மேலும் அழகு செய்து வெளியிட முடியும் என்பது குறித்து விரிவாக ஆய்வு செய்யப்பெற்றது. இத்துறையின் பாடத்திட்டக்குழு உறுப்பினர்களின் கருத்துரைகளுடன் முன்னாள் சுவடிப் புலத் தலைவர் பேரா. மு. சண்முகம்பிள்ளை, மாண்புநிறை துணைவேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் ஆகியோரின் கருத்துரைகளும் இந்நூலின் அமைப்புக்குத் துணைநின்றன. இந்நூலைப் பதிப்புக்கு எடுத்துக்கொண்டு குறிப்புரை வரைந்த முனைவர் சா. கிருட்டிணமூர்த்தியவர்கள் அக்கருத்துரைகளின் வண்ணம் பின்வருமாறு இந்நூலை அடைவு செய்துள்ளார்கள்.

1. நூலும் உரையும் (அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் தருதல்)
2. குறிப்புரை (குறிப்புரையாசிரியரின் சிறப்பு விளக்கங்கள்)
3. நூற்செய்யுள் முதற்குறிப்பு அகரநிரல்
4. உதாரண முதனினைப்புக் காரிகை அகரநிரல்
5. நூற்செய்யுள் சொல்லகரநிரல்
6. உரைச்சொல் தொடர் அகரநிரல்
7. இலக்கண மேற்கோள் அகரநிரல்
8. இலக்கிய மேற்கோள் அகரநிரல்

இவற்றுடன் அறிமுக உரையாகவும் ஆய்வுரையாகவும் அவர்கள் இரு கட்டுரைகள் இந்நூலின் முதற்கண் சேர்த்துள்ளார்கள். இந்நூலை ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட வரலாறு, சுவடிகளின் நிலை, மாற்றுச் சுவடிகளின் வரலாறு, நூலமைப்பு நூலாராய்ச்சி, ஆசிரியர் வரலாறு, நூற்சிறப்பு, உரைச்சிறப்பு போன்ற செய்திகளைத் தொகுத்து ஆய்வுரை என்னும் பகுதியில் அறிமுகமாகத் தந்துள்ளார்கள். நூலறிமுகத்துக்கு மட்டுமல்லாமல் நூலாய்வுக்கும் துணைசெய்யும் சிறந்த ஆய்வாக அது விளங்குதல் காணலாம்.

அடுத்து அவரே இயல்விளக்கக் கட்டுரைகள் என்னும் தலைப்பில் நூற்பொதி செய்திகளை விளக்கமாக (5 கட்டுரைகளில்) இந்நூலில் இணைத்திருக்கிறார்கள். இவை இந்நூலில் அடங்கியுள்ள இயல்களைப் பற்றிய தனித்தனி ஆய்வுக் கட்டுரை களாக விளங்குகின்றன. உறுப்பியல், பாவியல், பாவினவியல், பிரபந்தவியல், ஒழிபியல் ஆகிய ஐந்து இயல்களிலும்

காணப்பெறும் செய்திகளை முறையாகத் தொகுத்தும் விளக்கியும் அக்கட்டுரைகளில் குறித்துள்ளார்கள்.

இவ்விரு ஆய்வுப் பகுதிகளும் நூலுள் புகுவார்க்குச் சிறந்த அறிமுகத்தையும் நூலைக் கற்கவேண்டும் ஆர்வத்தையும் தூண்டவல்லன என்னும் ஏதுவால் நூலுக்கு முன்பாகவே இணைத்து அச்சிடப்பெற்றுள்ளன.

## நூலும் உரையும்

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சுவடி நூலகத்திலுள்ள இலக்கணச் சூடாமணி சுவடியில் நூலும் உரையும் இணைந்து காணப்பட்டன. ஆதலின் அதனை அடிப்படை ஆதாரச் சுவடியாகக் கொண்டு வெளிவரும் இப்பதிப்பும் நூலும் உரையுமாகவே வெளிவருகின்றது என்னும் செய்தியுடன் நூலுள் செல்வோம்.

இலக்கணச் சூடாமணி என்னும் இந்நூல் யாப்பிலக்கணம் உணர்த்துதலின் இலக்கண நூல் என்னும் பெயர் பெற்றது. ஆயின், சூடாமணி என்பது எதைக் குறிக்கிறது? நூலுக்குப் பெயரிட்ட நூலாசிரியரின் கருத்து யாது? ஒன்றும் புலப்படவில்லை. ஆயின், தமிழிலக்கிய இலக்கண வரலாற்றை நோக்கும்போது சிறந்த நூல்களுக்குச் சிறப்புநிலை உணர்த்தும் பின்னொட்டாகச் சூடாமணி யென்னும் பெயரை இணைத்துவைக்கின்ற மரபை நாம் உணரமுடிகின்றது. சூடாமணி நிகண்டு, மகாபாரத சூடாமணி, வேதாந்த சூடாமணி, பரத சூடாமணி, நியாய சூடாமணி, சூடாமணி உள்ளமுடையான் எனத் தொடரும் நூற் பெயர்களை நாம் காணலாம்.

சூடாமணி என்பதற்குப் பொருள் கூறும் தமிழ்ப் பேரகராதி, 'முடிமணி', தெய்வமணி வகை என்று கூறுகிறது. இது தொடர்பான சொற்கள் சிலவற்றைக் காணும்போது உச்சியில் சூடுகின்ற மணி என்ற பொருளே முன்னிற்றல் காணலாம். (கம்பரின் சூடாமணிப்படலம் காட்டும் செய்தியும் ஈண்டு ஒப்புநோக்கற் குரியது).

சூட்டு–தூணின் தலைக்கல்; சூடாலம்-தலை; சூடிகை-பாம்பின் படத்திலுள்ள அரதனமணி; சூட்டு – நெற்றிப்பட்டம், நுதலணி, உச்சிக் கொண்டை, பாம்பின் படம்; சூடம் – தலையின் உச்சி;

சூடாகரணம் – குடுமிவைக்கும் சடங்கு; சூடு – உச்சிக் கொண்டை, குடுமி அரிக்கட்டு; சூடை – தலை.

இச் சொற்பொருள்களையெல்லாம், இலக்கிய வழக்குகளை யெல்லாம் தொகுத்துக் காணும்போது சூடாமணி என்பது தலையில் சூடும் உயர்ந்தமணி, உச்சியில் வைத்து மெச்சுதற்குரிய மணி என்ற உயர்வைத் தருதல் காணலாம். எனவே இலக்கணச்சூடாமணி என்னும் பெயரும் இலக்கண நூல்களுள் உயர்ந்தது என்ற பொருளையோ இலக்கணமாகிய சூடாமணி என்ற பொருளையோ தருவது போன்று காணப்படுகிறது எனலாம். நூலாசிரியர் இந்நூல் உயர்வானது என்னும் துணிபுடன் இப்பெயரைச் சூட்டியிருத்தல்கூடும்.

சூளாமணி என்றொரு நூல் தமிழிலக்கியத்துள் காணப்படும் சமண நூலாகும். (நாகப்பட்டினத்தில் முதலாம் இராசராசன் காலத்து எடுப்பித்த சூளாமணி பன்மவிகாரமும் இங்கு நினைவு கூரத்தகும்) சூளாமணிக்குப் பொருள் கூறும் தமிழ்ப் பேரகராதி முடிமணி, இந்திரன் அணியும் மணி என்பனவற்றைக் கூறுகிறது.

'மஞ்சுசூழ் மலைக்கோர் சூளாமணியெனக் கருதுமன்னா'
சூளாமணி 329
உலகின் முடிக்கோர் சூளாமணி யானான்–சூளாமணி 2123
சூளிகை–செய்குன்று; சூழியம்–உச்சிக் கொண்டை, உச்சிக் கொண்டை ஆபரணம்; சூழி–உச்சி, மேலிடம்
(ட ள ழ மாற்றெழுத்துகளாக வருவதுண்டு என்னும் வழக்கையும் ஒப்பிட்டுக் காணலாம்)

கம்பர் இதனைச் சூடையின்மணி என்று கூறுகின்றார். ஆயின் படலத்துக்குச் சூடாமணிப்படலம் என்று பெயர் சூட்டியுள்ளார்.

'சூடையின் மணிகண் மணிஒப்பது தொல்நாள்'
சுந். சூடாமணிப்படலம், 83,
முகில்மேல் எழுகோளின் வேந்தன் அன்னது (சூரியனுக்கு ஒப்பானது)
சுந். சூடாமணிப்படலம், 82.
'வைத்தபின் துகிலின் வைத்த மாமணிக்கு அரசைவாங்கி'
சுந். திருவடிதொழுதபடலம், 46.

இங்கெல்லாம் இது உயர்வானது என்னும் பொருளைத் தருதல் காணலாம்.

'தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்'

என்னும் அப்பர் தேவாரத்திலும் (6:23:1) சூளாமணி உயர்வான மணியாகக் கருதப்படுகிறது. இதற்குச் சூடாமணி என்றொரு பாடமும் உள்ளது. எனவே சூடாமணி சூளாமணி இரண்டு சொற்களும் ஒருபொருள் குறித்தனவாகக் காணப்படினும் சூடு, சூடை, சூடாலம் ஆகிய தமிழ்ச் சொற்களைக் காணும்போது சூடாமணி என்னும் பெயரே சரியான வடிவம் கொண்டது எனவும் தமிழ்ப்பெயர் எனவும் தோன்றுதல் காணலாம்.

'மலைமாது போற்ற டிலர்மாது வாழ்த்தும்
கலைமாதை நெஞ்சிற் கருதி-(நலமார்)
இலக்கணச்சா ரத்தை எடுத்தியம்பு கின்றேன்
இலக்கணச்சூ டாமணியீ தென்று'

என்னும் வெண்பா இந்நூலின் முதற்பாடலாக பாயிரமாகக் காணப்படுகிறது. இப்பாடலிலும் இறுதியில் வரும் பாடலிலும் இந்நூலின் பெயர் 'இலக்கண சூடாமணி' என்றுதான் காணப்படுகிறது. அதாவது வல்லெழுத்து மிகாமல் ( இலக்கண சூடாமணி) தான் காணப்படுகிறது. ஆயின், தமிழ்ச் சொல்லமைப்பும், சொற்றொடரமைப்பும் வல்லெழுத்து மிகுத்து வரவேண்டும் என்னும் மரபை உணர்த்துகின்றன. ஏடெழுதுவோர் ர, ற; ன, ண; ல, வ; ழ ள வேறுபாடின்றிப் பிறழ எழுதுவதும் சந்திப்பிழைகளுடன் எழுதுவதும் சுவடிகளில் பொதுவாகக் காணப்படும் மரபாகும். இச்சுவடியிலும், பிழைபட்ட வடிவங்கள், சொற்கள், மரபுகள் சில காணப்படுகின்றன.

| சரியானவடிவம் | சுவடி வடிவம் |
| --- | --- |
| இலக்கணச் சாரம் | இலக்கண சாரம் |
| இலக்கணச் சூடாமணி | இலக்கண சூடாமணி |
| தழைக்கவும் | தளைக்கவும் |
| பருவமாய் | பறுவமாய் |
| ஆழத்து | ஆளத்து |
| தவளத்தாமரை | தவழத் தாமரை |

| | |
|---|---|
| தமிழ்க் குறித்தே | தமிள் குரித்தே |
| நெறியளவும் | நெரியளவும் |
| வருமாறு | வருமாரு |
| வெண்பாவுரிச்சீர் | வெண்பாவுருச்சீர் |
| கனைதுணை | களைதுணை |
| பிறிதின்றிப்புலம்பல் | பிரிதின்றி புலம்பல் |
| கட்டுரை | கட்டுறை |
| திகழொளி | திகளொழி |
| துந்துபி | துந்துமி |

இத்தகு பிழைகள் மலிந்து காணப்படும் இவ்வேட்டில் நூற்பெயரும் சந்தி குறைந்து காணப்படுதல் இயல்பாகவே தோன்றுகிறது. எனவே, ஏடெழுதியோரின் தவறாகக் கருதி, இலக்கண சூடாமணி என்னும் ஏட்டுவடிவத்தை இலக்கணச் சூடாமணி என்னும் வடிவமாக பெயராக இப்பதிப்பு கொண்டுள்ளது.

இந் நூலில் காணப்பெறும் நூற்பா, உரை ஆகியவற்றிலும் ஏடெழுதியோரின் இத்தகு பிழைகளெல்லாம் செம்மைப்படுத்தப் பெற்றுள்ளன; திருந்திய வடிவமே மேற்கொள்ளப்பெற்றது. சுவடிப் பிழையையும், கைப்பிசகாக, வட்டார வழக்காக இடம்பெறும் பிழைகளையும் அப்படி அப்படியே பதிப்பது அறமாகாது என்பதை சான்றோர் ஒப்புவர். நூற் கருத்துக் கொவ்வாத பாடத்தைப் புகுத்துவது, திருத்துவது ஆகியஅபதிப்புக் குற்றங்களே. எனினும் இங்கே இடம் பெற்றுள்ள செப்பம் அத்தகு குற்றமாகாது என்பது துணிபு. இலக்கண நூலில் சொற்பிழைகளும், எழுத்துப் பிழைகளும் இடம் பெற்றால் மொழியின் தரமே தாழ்ந்து விடாதா?

தமிழ்த் தாத்தா டாக்டர் உவே. சாமிநாதையரின் பதிப்புக் கொள்கையை ஈண்டு நினைத்துப் பார்த்தல் தகும் என்று கருதுகிறேன்.

'ஏட்டுச் சுவடிகளிற் கண்ட பாடங்களின் வேறுபாட்டைக் கண்டு கண்டு என் மனம் புண்ணாகியிருந்தது. இன்னபடி இருந்தால் பொருள் சிறக்கு மென்று எனக்குத் தோற்றின இடங்களிலும், பிரதியில் உள்ளதையே பதிப்பித்தேன். என்னுடைய கருத்தையோ, திருத்தத்தையோ சிந்தாமணியில் ஏற்றாமல் மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துப் பதிப்பித்தேன். பதிப்பிக்கத் தொடங்கிய நூல் எனக்கு ஒரு

தெய்வ விக்கிரகம் போல இருந்தது. அதன் அழுக்கைத் துலக்கிக் கவசமிட்டுத் தரிசிக்க வேண்டுமென்பதே என் ஆசை; 'கைகோணி இருக்கிறது. வேறு விதமாக அமைக்கலாம்; நகத்தை மாத்திரம் சிறிது திருத்தலாம்' என்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. அதன் ஒவ்வோரணுவிலும் தெய்விக அம்சம் இருக்கிறதென்றே நம்பினேன். அழுக்கை நீக்கி விளக்குவதற்கும் அங்கத்தையே வேறு படுத்துவதற்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாக அறிந்திருந்தேன். இக் கருத்தை, புராதனமான தமிழ் நூல்களும் உரைகளும் பண்டை வடிவம் குன்றாதிருத்தல் வேண்டும் என்பதே எனது நோக்கமாதலின்' பிரதிகளில் இல்லாதவற்றைக் கூட்டியும், உள்ளவற்றை மாற்றியும், குறைத்தும் மனம் போனவாறு அஞ்சாது பதிப்பித்தேனல்லேன். ஒரு வகையாகப் பொருள்கொண்டு பிரதிகளில் இருந்தவாறே பதிப்பித்தேன். யானாக ஒன்றும் செய்திலேன்'

(என் சரித்திரம். பக். 611-12)

மேலே காட்டிய செப்பமனைத்தும் டாக்டர் உ.வே.சா அவர்களின் இக்கருத்தையடியொற்றிய நிலையிலேயே மிகு கவனத்துடன் மேற்கொள்ளப்பெற்றன. அழுக்கை நீக்கிய நிலைதான் - தூசி துடைத்த நிலைதான் இம் மொழிச் செப்பங்கள் என்றால் அது மிகையாகாது.

துணைத் தலைப்புகளாக இடம் பெறும் நூல், பாயிரம், எழுத்து போன்றன குறிப்பாசிரியரால் கொடுக்கப்பெற்றன. நூற்பாவும் அதற்குரிய உரையும் ஏட்டில் கண்டவண்ணம் தொடர்ந்து பதிப்பிக்கப்பெற் றன. அடிக்குறிப்புகளில் காணப்பெறுவன பிற ஏடுகளில் கண்ட பாடவேறுபாடுகளாகும். பாடவேறுபாடுகளில் செவ்விய வடிவங்கள் மேலே எடுத்துக் கொள்ளப்பெற்றன. நூற்பாவிலும், உரையிலும் காணப்பெறும் [ ] பகர அடைப்புகளும் அவற்றுள் இடம்பெறுவனவும் (சிதைந்த பகுதி களாகக்கருதி சிதைந்த வடிவங்களாகக் கருதப்பெற்றனவற்றை) குறிப்பாசிரியரால் நிறைவு கருதி சேர்க்கப் பெற்றன. உரையில் காணப்பெறும் ( )பிறை அடைப்புகள் அவற்றுள் இடம் பெறும் செய்திகள் ஆகிய அனைத்தும் குறிப்புரையாசிரியரால் சேர்க்கப்பெற்றனவாகும். அந்த வகையில் இலக்கிய இலக்கண

மேற்கோள்களை இனம் காட்டி, நூல் சுட்டிய கடின உழைப்பைக் குறிப்பாசிரியர் வெளிப்படுத்தியுள்ளார் எனலாம்.

## குறிப்புரை

இந்நூலின் பதிப்புப் பணியை மேற்கொண்டு குறிப்புரை வரைந்திருப்பவர் முனைவர் சா.கிருட்டிணமூர்த்தியவர்கள் ஆவார். இயல்பாகவே, மரபிலக்கணம், உரைகள் ஆகியவற்றில் ஈடுபாடும் ஆய்வும் கொண்டவராக விளங்கும் அவர் இலக்கணச் சூடாமணியை நுண்ணிதின் ஆய்ந்து பிறநூற் கருத்துகளை யெல்லாம்தொல்காப்பியம் முதலாகச் சரவணத் தமிழனின் யாப்பு நூல்வரை (1981), ஒப்பு நோக்கியும் ஆங்காங்கே ஒற்றுமை வேற்றுமைகளைச் சுட்டிக்காட்டியும், மரபு வழுவாமல் குறிப்புரை வரைந்திருக்கிறார் என்றால் அது மிகையாகாது. குறிப்புரையின் சில பகுதிகளை ஈண்டுச் சுட்டுதல் தகும்.

சொற்பொருள் விளக்குமிடத்து அவர், முன்னையோரின் மேற்கோளுடன் நுட்ப உணர்வு தோன்றப்பொருளைப் புலப்படுத்தியிருப்பதும் குறிப்புப்பொருள் தந்திருப்பதும் பயின்று மகிழத்தக்கதாம்.(எண்கள் நூற்பா எண்களைக் குறிப்பதாம்)

02. குறித்த -நோக்கிய, குறித்தமெய் என்றது உயிரெழுத்து களை நோக்கிய மெய்யெழுத்துகள் என்றவாறு, 'கொண்ட கொழுநர்-தம்மை நெஞ்சினுட் கொண்ட கொழுநர்' (சிலப். 2:19:52 அடியார்க்கு நல்லார்) என்றாற் போலக் கொள்க.

03. கற்றவர்கள் -யாப்பிலக்கணம் அறிந்தவர்கள்.

49. பேராறு -மலையில் பிறந்துநேரே கடலில் கலக்கும் நதி.

33. குடிகொள்அளி-(சூடியமலரின் மேலுள்ள விருப்பால் அதனுள் தங்கியிருக்கும்)வண்டு

18. சந்தம் -ஓசை -ஈண்டுச் செப்பலோசையைக் குறித்தது.இது' என்பது வெண்பாவிற்குரிய இலக்கணத்தைக் குறித்தது.

15. சதுக்கம் -ஒருபாவகை, 'சதுஷ்கா' என்னும் வடமொழிச்

சொல்லின் திரிபு; நான்கு கூடியது என்று பொருள். ஒரு சேரடியான் தனித்து வருகின்ற இப்பாவகை தமிழ் யாப்பு நெறியில் இல்லை.

16. வாச்ச -வாய்த்த; எதுகைக்கேற்ப வழக்குச் சொல் பெற்றது. இவ்வாறே குறிப்புரையாசிரியர் தாம் பொருள்விளக்கம் கூறுமிடத்து முன்னை உரையாசிரியர்களின் மேற்கோளையும் உரையாட்சியையும் சுட்டித் தெளிவு படுத்தியிருக்கின்றார். உரை மரபைக் காத்த தன்மையாக இதனைப் போற்றலாம். முன்னைய உரையாசிரியர்களின் பிழிவைப்பயின்ற நிறைவும் கொள்ளலாம்.

52. திருவள்ளுவப் பயன் என்பது திருக்குறள். 'அறம்பற்றி வருதல் திருவள்ளுவப்பயன் முதலிய செய்யுட்களுள் அறப்பகுதியிற் கூறப்பட்டன' (தொல்:இளம்.பொருள். 152) என்றும், 'திருவள்ளுவப் பயனில் வான்சிறப்பென்னும் அதிகாரத்துள்ளும் கண்டுகொள்க' (தக்கயாகப்பரணியுரை கூவா.9) என்றும் பிறரும் உரைத்தல் காண்க.

06. குடிலம் -வாய்ப்பாட்டுத் தொழில்களுள் உள்வாங்கிப் பாடுமுறை. காண்க:

'எடுத்தல்பாட்டுச்சமா மெண்படுத்தல் மந்தம்
தடுத்து நலிதல் சமமாம்-தொடுத்தியன்ற
தள்ளாத கம்பிதம் தானடுக்கற் குடிலம்
உள்வாங்கிப் பாட லுணர் (சீவக. 735, நச். மேற்கோள்)

இதையே, 'கிரியைகள் எட்டாவன: எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என இவை' -அடியார்க்கு நல்லார் (சிலப். 1:3:16) பதினொன்று என்று பஞ்சமரபு கூறும் (நூ.43) இவற்றால் மிக்க சீர்களால் அமைந்த கழிநெடிலடி விருத்தங்கள் இசையோடு பாடுதற்குரியன என்பது பெறும். அறுசீர் எழுசீர்களால் வருவனவற்றை விருத்தமென்றும் பெயரிட்டது குறிப்பிடத் தக்கதாம்' • யாப்பு நூற் கொள்ககளை ஒப்புக்காட்டி உரை வரைவதும், மாறுபட்ட இடங்களிளெல்லாம் ஏது சுட்டலும், உரையாசிரியர் விளக்காது விட்ட இடங்களிளெல்லாம் தெளிவு கருதி எடுத்துக்காட்டுகள் தந்து விளக்கியிருப்பதும்

இக் குறிப்புரையாசிரியரின் உழைப்பைக் காட்ட வல்லன எனலாம்.

36. இந்நூற்பாவின் உரையில், உரையாசிரியர், 'பதின் சீரின்மிக்க சீரான் வருவனவும், சந்தப்பா முதலானவும் வரும் வழிக்கண்டு கொள்க' என்று முடித்துவிட்டார். ஆயின், குறிப்புரையாசிரியரோ, பன்னிருசீர் விருத்தத்திற்கு எடுத்துக் காட்டு தருகிறார். ஆம், முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழின் செங்கீரைப் பருவப் பாடல் 'விரல்சுவை யுண்டு' என்பதை பன்னிருசீர் விருத்தப்பாட்டாக எடுத்துக் காட்டுகின்றார்.

இவ்வாறே 38ம் நூற்பாவில் நேரசைக் கலித்துறைக்கு நிரையசைக் கலித்துறைக்கும் திருக்கோவையாரிவிருந்து (150) தஞ்சைவாணன் கோவையிலிருந்து (133) எடுத்துக்காட்டுகள் தருகிறார்.

நூற்பா 44ல் வண்ணம் குறித்த எடுத்துக்காட்டுகளை உரையாசிரியர் தந்தாரில்லை. குறிப்புரையாசிரியர், வண்ணம், கலை, குழிப்பு, தொங்கல் ஆகியவற்றை விளக்கி, வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் வண்ணத்தியல்பு நூற்பாக்களை மேற்கோள் இலக்கணமாகக் காட்டியுள்ளதுடன் அவர் இயற்றிய வண்ணம் ஒன்றையும் எடுத்துக்காட்டிலக்கியமாகத் தந்துள்ளார்.

இவ்வாறே, சிந்து இலக்கணத்திற்கும் வகைகளுக்கும் உரை கூறாதும் உரிய எடுத்துக்காட்டு தராதும் விடுத்துள்ளார் உரையாசிரியர். குறிப்புரையாசிரியர், 'சிந்து என்பது ஓர் இசைப்பாடல் வகை. இதுபிறகு ஒரு பிரபந்த வகையாகவும் வளர்ந்தது' என்ற விளக்கத்துடன், தொடங்கி, இதன் வகைகளைச் சுட்டி (சமனிலைச் சிந்து, வியனிலைச் சிந்து) மேற்கோள் பாடல்களையும் நூற்பெயர்களையும் எடுத்துக்காட்டித் தெளிவாக்கியுள்ளார்.

யாப்பு நூற் கொள்கையைக் குறிப்பாசிரியர் விளக்கு மிடத்தெல்லாம், பிற யாப்பிலக்கண நூல்களின் கருத்துகளை எடுத்துக்காட்டி ஒப்புமையும் வேற்றுமையும் சுட்டி விளக்கியுள்ள இடங்கள் பலவாகும்.

14. 'வஞ்சிப்பாவிற்கு மூன்றடியே சிறுமையென யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை போன்ற நூல்கள் கூறவும், இந்நூல் இரண்டடி சிறுமையென இலக்கணம் வகுத்துள்ளது.

'வஞ்சிப்பா இரண்டடியானும் வரும்' என உம்மையை இரண்டடியின் மேல் வைத்துக் கூறினார். இலக்கண விளக்க ஆசிரியர் (நூ. 746, உரை)

26. 'பிற இலக்கண நூல்கள் கூறிய வெண்கலிப்பா, கலிவெண்பா ஆகியவற்றின் இலக்கணங்களைத் தொகுத்து அவற்றையெல்லாம் ஒன்றாக்கி வெண்கலிப்பா என உரைத்தார் இவ்வாசிரியர்; இதனால் வெண்கலிப்பா, கலிவெண்பாவிற்கு மயக்கமறுத்தாராயிற்று.

இவர் கூறும் வெண்கலிப்பாக்கள் வெண்டளையானும் கலித்தளையானும் வந்து ஈற்றடி முச்சீராய் வருவது, வெண்டளை தட்டு ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி ஈற்றடி முச்சீராய் வருவது கலித்தளையானும் ஆசிரியத் தளையானும் ஈற்றடி முச்சீராய் வருவது என மூவகைப்படும்.

சுவடிப்பதிப்பை உருவாக்குபவர் பதிப்பறம் சான்றவராதல் வேண்டும். தாம் சரியென்று கருதுபவற்றையோ, தமக்குத் தோன்றியதையோ புகுத்திவிடாமல் ஏட்டில் கண்ட வண்ணம் வெளிப்படுத்துவதே அறமாகக் கொள்ளுதல் வேண்டும். நூலின் ஒட்டுமொத்தப் பார்வைக்கும் பொதுக் கோட்பாட்டிற்கும் முரணாகக் காணப்படும் இடங்களில் மட்டும் தம்யூகத்தைத் தெரிவிக்கலாம். அப்போதும் நூலை, ஏட்டில் கண்ட பாடத்தையே முதற்பாடமாகக் கொண்டுபதிப்பித்தல் வேண்டும். தம் யூகத்தைப் பிறைக்கோடுகளிடையேயும், குறிப்புரைகளிலும் சுட்டிக் காட்டலாம். சுவடி ஆதாரமற்ற எதையும் உரியபாடமாகக் காட்டுவது பதிப்பாசிரியர் அறமாகாது. இதனை நன்குணர்ந்த குறிப்பாசிரியர் இந்நூலுள் சில இடங்களில் அத்தகு பாட வேறுபாடுகள், தவறுகளைச் சுட்டியுள்ளார். நூற்பா 4ன் குறிப்புரையில் 'இவ்வெண்பாவின் ஈற்றடியின் இறுதிச் சீர் ஈரசைச் சீராக உள்ளது. வெண்பாவின் ஈற்றுச்சீர் ஈரசைச் சீராகவும் வரும்

என்னும் இலக்கண மின்மையால் இது பிழைபடவுள்ளது என்றே கொள்ள வேண்டும். இரண்டு சுவடிகளிலும் இந்நிலையிலேயே அமைந்துள்ளதால் அவ்வண்ணமே தரப்பெற்றுள்ளது' என்று அப்பாடத்தின் பிழைத்தன்மையைச் சுட்டியுள்ளார். அத்துடன் அப்பாடம் எவ்வாறு இருக்கமுடியும் என்ற தம் யூகத்தையும் தெரிவித்துள்ளார் குறிப்பாசிரியர்.

'நேர்நிரைசேரப்பொதுவாகும்' என்றோ;

நேர்நிரைசேரப்பொதுவாய் நேர்'

என்றோ கொண்டால் இலக்கணச் சீர்மை எய்தும். இது போன்றே நூற்பா 10, 26 ஆகியவையும் அமைந்துள்ளமை நோக்குக.

நூற்பா 46ன் உரையில் உரையாசிரியர், 'இப்பொழுதுள்ளாரைப் பாடுவதே இலக்கியமாகக் கண்டுகொள்க' என்று சிந்துப்பாடல்களுக்கு இலக்கியம் காட்டுகிறார். ஆயின், குறிப்பாசிரியர் இக்கூற்று தவறாக இருக்குமோ, என்று கருதி, 'இப்பொழுதுள்ளாரைப் பாடுவதே' என்பதை 'இப்பொழுதுள்ளார் பாடுவதே' என்று கொள்ளுதல் பொருந்துவதாகும் என்று துணிகிறார். இவ்வாறு பதிப்பாசிரிய அறத்தினின்று வழுவாது நூலும் குறிப்பும் செல்வது நமக்கு மகிழ்வையும் நம்பிக்கையையும் ஒருசேர ஊட்டுகிறது எனலாம்.

நூலாசிரியர் உரையாசிரியர் பற்றிய ஆய்வுகளில் குறிப்பாசிரியர் தந்துள்ள குறிப்புகள் பாராட்டும் தரத்தனவாகக் காணப்படுகின்றன. நூற்பா 18இன் உரையில் சவலை வெண்பாவுக்கு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு

பல்கோடி நூறாயிரம்'

என்னும் பெரியாழ்வார் திருமொழியையும், நூற்பா 43இன் உரையில் (பிள்ளைத்தமிழ்) 'இதற்கு உதாரணம் அழகர் பிள்ளைத்தமிழ் முதலான இலக்கியங்களில் கண்டுகொள்க' என்று அழகர் பிள்ளைத்தமிழையும் எடுத்தாண்டிருப்பதால் உரையாசிரியர் வைணவராதல் வேண்டும் என்று கருதுகின்றார் குறிப்பாசிரியர். நூற்பா 52இன் உரையில்,

'என்று இத்தொடக்கத்து ஒருசார் வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வந்ததேனும் திருவள்ளுவப் பயன், நாலடி நானூறு முதலான கீழ்க்கணக்குள்ளும் முத்தொள்ளாயிரம் முதலாகிய சான்றோர் செய்யுளகத்துள்ளும் வஞ்சியுரிச்சீர் வந்திலாமை யானும் வேற்றுத்தளையும் வெண்பாவினுள் வருக என்னும் இலக்கணம் இன்மையானும், இத்தொடக்கத்துள் வருதல் குற்றமல்லது குணம் ஆகா என்பதூஉம் தொல்லாசிரியர் முதலாகிய சான்றோரது துணிவு. அதுவே இந்நாலுடை யார்க்கும் உடன்பாடு' என்று விளக்கம் தந்துள்ளார் உரையாசிரியர். இவ்விளக்கத்தில் இடம்பெறும் 'இந்நாலுடை யார்க்கும் உடன்பாடு' என்ற குறிப்பைவைத்துக் கொண்டு நூலாசிரியர் வேறு உரையாசிரியர் வேறு என்று துணிகிறார் குறிப்பாசிரியர்.

இவ்வாறு சான்றோர் மேற்கோளுடனும் இலக்கண நூல் ஒப்புமைகளுடனும் நுட்பமாகவும் திட்பமாகவும் இக்குறிப்புரைப் பகுதி அமைந்திருத்தல் பயின்று மகிழ்தற்குரியதாம்.

## பின் இணைப்புகள்

இந்நூலின் பின்இணைப்புக்களாக நூற்செய்யுள் முதற்குறிப்பு அகரநிரல், உதாரண முதனினைப்புக் காரிகை அகர நிரல், நூற்செய்யுள் சொல்லகர நிரல், உரைச்சொல்தொடர் அகரநிரல், இலக்கண மேற்கோள் அகரநிரல், இலக்கிய மேற்கோள் அகரநிரல் ஆகிய பட்டிகள் இணைக்கப்பட்டுள்ளன. இவை நூலாய்வார்க்கும் நூற்பொருள், சொற்பொருள் ஆயும் மொழியாய்வார்க்கும் பெரிதும் பயன்படத்தக்கனவாதல் திண்ணம்.

நூற்செய்யுள் சொல்லகர நிரலும், உரையில்பயின்று வரும் சொற்கள் தொடர்களின் அகரநிரலும் அக்கால மொழியின் -நூலின் சொல்லாட்சி, பொருளாட்சிகளை உணர்வதற்குப் பெரிதும் துணை நிற்பனவாம். விரிவஞ்சி இவை பற்றிய அறிமுகத்தை இத்துடன் இறுதியாக்குகின்றேன்.

உ ம ந.

## நன்றியுரை

இப்புதிய நூல் வெளிவருவதற்கு முதற்காரணமாய் விளங்குவது எங்களுக்கு கிட்டிய ஓலைச்சுவடியே; ஆதலின் அச்சுவடியை இத்துறைக்கு வழங்கிய அன்பரின் பொறுப்புணர்ச்சிக்கு முதற்கண் நன்றி பாராட்டுவதே சாலப்பொருந்துவதாகும். 1986ஆம் ஆண்டு சுவடிகள் குறித்த தகவல்களைத் தேடிக்கொண்டிருந்தபோது, மதுரை மாவட்டம் சின்னமனூரைச் சார்ந்த திரு. கே.எஸ். நாகராசன் அவர்களிடம் சில சுவடிகள் இருப்பதாகத் தெரிந்தது. அவரிடம் தொடர்பு கொண்டு அவற்றைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு வழங்க வேண்டும் என்று இத்துறை வேண்டிக்கொண்டது. பின் அவர்தம் நல்லிசைவுடன் இத்துறையின் தொழில் நுட்ப உதவியாளர் திரு. சி. இலட்சுமணன் அவர்களை நேரே அனுப்பி அச்சுவடிகளைப் பெற்று வரச்செய்தது. அப்பெரியார் கொடுத்தனுப்பிய சுவடிகளில் 43 தமிழ்ச் சுவடிகளும் 12 கிரந்தச் சுவடிகளும் காணப்பெற்றன. இன்று வெளிவரும் இலக்கணச் சூடாமணி அவற்றுள் ஒன்றேயாகும்.

அரிய நூலாக விளங்கும் இச்சுவடியைக் காத்து வைத்திருந்து, இது அழியாது பாதுகாக்கப்பெறும் என்னும் நம்பிக்கையில் தமிழ்ப் பல்கலைக்கழகத்துக்கு வழங்கிய அப்பெரியார்க்கு நன்றி கூறுவது இத்துறையின் கடப்பாடகும். அவரின் நம்பிக்கைக்கு அரண் சேர்ப்பதுபோல இன்று இந்நூல் பலர்க்கும் பயன்படும் வண்ணம் அச்சு நூலாகவும் வெளிவருகின்றது. இது சுவடி வழங்கியவருக்கும் பிறர்க்கும் ஒருசேர மகிழ்ச்சி தரும் செய்தியாகும்.

தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்கவும், பதிப்பிக்கவும் பல்வேறுவகைப்பட்ட நல்கைகளை வழங்கி ஊக்குவித்து வருகின்றது. அந்த வகையில், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் திட்ட வரைவுகளை ஆண்டுதோறும் வரவேற்று உரிய நல்கையை வழங்கிவருகின்றது. இத்துறையால் தீட்டப்பெற்ற இம்மூன்றாவது திட்டத்திற்கு அது ரூ. 1,00,000/- நல்கை வழங்கியுள்ளது. இத்திட்டத்தை வரவேற்று நல்கை

வழங்கிய தேசிய ஆவணக் காப்பக இயக்குநர் மற்றும் அலுவலர்கட்கு இத்துறையின் நன்றி என்றும் உரியதாகும்.

இத் திட்டத்திற்காகும் எஞ்சிய செலவைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஏற்றுக்கொண்டது. எனவே, தமிழ்ப் பல்கலைக்கழகமும் இத்துறையின் நன்றிக்குரிய நிலையில் நிற்பது சுட்டத்தகும் சிறப்புடையதாகும்.

தேசிய ஆவணக் காப்பகத்தின் நல்கையை வேண்டுமாறு ஆணையிட்டும், உரிய திட்ட வரைவை அனுப்பி வைத்தும் அவ்வப்போது இத்திட்டத்தின் நடைமுறை முன்னேற்றம், குறித்து உசாவி ஊக்கப்படுத்தியும் பெரிதும் துணைநின்றவர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் மாண்புநிறை முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்கள் ஆவார்கள். அவர்கள் இத்துறையின்பால் கொண்ட ஊக்கத்திற்கு நன்றி பாராட்டுவதுடன் பதிவாளர் மற்றும் அலுவலர்களின் ஒத்துழைப்பையும் நன்றியுடன் நினைவு கூர்கின்றேன்

தாம் இத்துறையின் விரிவுரையாளராகச் சேர்ந்தது முதலாக இத்துறையின் ,வளர்ச்சியில் கருத்தாக இருந்தவர் முனைவர் சா. கிருட்டிணமூர்த்தியவர்கள். அவர்கள் இந்நூல் தேசிய ஆவணக் காப்பகத் திட்டத்தில் இடம் பெற்றிருப்பதறிந்து இது எப்படியும் வெளிவர வேண்டும் என்னும் ஆர்வத்தைக் காட்டினார்கள். எனவே இலக்கணத்தில் ஆர்வமும் ஆய்வும் கொண்ட அவரிடம் இந்நூலின் பதிப்புப் பணி ஒப்படைக்கப்பெற்றது. அவர்கள் இந்நூல் சிறப்பாக வெளிவரவேண்டும் என்னும் நோக்கில் பல்வேறு அறிஞர் பெருமக்களுடன் கலந்துரையாடியும் பல்வேறு நூல்களின் அமைப்புமுறை நோக்கியும் இதனைச் செம்மையாகச் செய்திருக்கின்றார்கள். தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியை அடிப்படைச் சுவடியாகக் கொண்டு சுவடி பெயர்த்தெழுதிய பின்னர், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகத்திலுள்ள மூலபாடம் மட்டும் உள்ள சுவடியையும், பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி நூலகத்திலுள்ள சுவடியையும் ஒப்புநோக்கி ஆய்வைத் தொடர்ந்தார்கள். (அவர்தம் சுவடியாய்வு குறித்த விரிவான செய்திகளை ஆய்வுரைப் பகுதியில் காணலாம்.)

உ ம் ரு

சுவடிகளை ஒப்புநோக்குவதற்கு இசைவளித்துப் பெரிதும் துணைநின்ற பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளாருக்கும் டாக்டர். உ.வே. சா. நூலகத்தின் பொறுப்பாளர்க்கும் இத்துறையின் சார்பில் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். அந்நூலகங்களில் சுவடிகளை ஒப்பு நோக்கும்போது பல்வேறு வகையிலும் துணை நின்றவர்களுள் முனைவர் கா. மீனாட்சிசுந்தரம், பேராசிரியர் ர. வையாபுரி, வித்துவான் பாலசாரநாதன், திருமிகு சாயிராமன் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இலக்கணச் சூடாமணியை எம்.பில்., பட்டத்திற்காக ஆய்வு செய்தவர் பேரூர் தமிழ்க் கல்லூரி மாணவி செல்வி. த. இரமணியாவார். பேரூர்க் கல்லூரி முதல்வர் பேராசிரியர் ர. வையாபுரி அவர்களை நெறியாளராகக் கொண்டு செய்யப்பட்ட இவர்தம் ஆய்வேடு 1985ல் உருவானதாம். இப்பதிப்புக்கு அவர்தம் ஆய்வேட்டையும் முனைவர் சா. கிருட்டிணமூர்த்தியவர்கள் பயன்படுத்தினார்கள். எனவே, அந்த ஆய்வாளர், ஆய்வுநெறியாளர் ஆகிய இருவர்க்கும் தனிப்பட நன்றி பாராட்டுதல் வேண்டும்.

இப்பதிப்பில் சுவடி பெயர்த்தெழுதியும் ஒப்புநோக்கியும் பாடத்தேர்வைத் துணிந்தும் குறிப்புரை வரைந்தவர் இப்பதிப்புப் பணியை எடுத்துக் கொண்ட முனைவர் சா. கிருட்டிண மூர்த்தியவர்களேயாவர். தாம் எடுத்துக் கொண்ட பதிப்புப் பணியைப் பல்லாற்றானும் செம்மையுறச் செய்துள்ள அவர்கள் இயல் விளக்கக் கட்டுரைகளைத் தந்ததுடன் அரிய ஆய்வுரை ஒன்றையும் வரைந்துள்ளார்கள். நூலின் பிற்சேர்க்கையாக இணைக்கப்பெற்ற அவர்தம் இணைப்புகள் ஆய்வாளர்க்குப் பெரும்பயன் விளைக்கும் உழைப்பைக் காட்டவல்லன.

தேசிய ஆவணக் காப்பகத் திட்டத்திற்காக மிகச் சிறப்பான முறையில் இந்நூலை முடித்துத் தந்த அவர்களுக்குப் பெரிதும் நன்றி பாராட்டுகின்றேன். அவர்வழி இத்தகைய அரிய நூல்கள் பல இனிமேலும் வெளிவரவேண்டும் என்றும் வேண்டிக் கொள்கிறேன்.

உ யகா

இந்நூலின் பதிப்புப் பணிகளில் பல்லாற்றானும் துணைநின்ற கல்விக்கடல் எஸ்.கே. இராமராசன், புலவர் ப.வெ. நாகராசன் மற்றுமுள்ளோர் அனைவர்க்கும் என் நன்றியைப் புலப்படுத்துகின்றேன்.

தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் வழி வெளிவரும் நூல்கள் பிற அறிஞர்களால் நுண்ணாய்வு செய்யப்பெற்று வெளிவருகின்றன. அந்த வகையில் இந்நூலும் நுண்ணாய்வு செய்யப்பெற்ற சீரிய நிலையிலேயே வருகின்றது.

இலக்கிய இலக்கண நூல்களின் ஆய்விலும் பதிப்பிலும் சிறந்து விளங்குபவர் புலவர் இரா. இளங்குமரன் ஆவார்கள். அவர்கள் காக்கைபாடினியம், இலக்கண வரலாறு போன்ற அரிய நூல்களை வெளியிட்ட பெருமைக்குரியவர்கள். அவர்கள் இந்த இலக்கணச் சூடாமணியை நுண்ணிதின் ஆய்ந்து கருத்துரை வழங்கினார்கள். அவர்தம் கருத்துரைகளும் இந்நூலின் செம்மைக்கு வழிசெய்தன. எனவே அப்பெருமகனார்க்கும் தனிப்பட நன்றி பாராட்டுவது கடப்பாடாகும்.

கையெழுத்துப் படிகளைத் தட்டச்சு செய்து வழங்கிய செல்வி. த. உமாராணிக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டு வழங்கிய புதுக்கோட்டை சர்மா அச்சகத்தினர்க்கும் என் நன்றி உரியது.

இந்நூல் குறிப்பிட்ட காலத்திற்குள் விரைவாக வெளிவர வேண்டிய சூழல் ஏற்பட்டதாலும், முதன் முறையாக வெளி வருவதாலும், கணிப்பொறி அச்சக அமைப்பினாலும் சில குறைகளைப் பெற்றிருத்தல்கூடும். அவற்றை அறிஞர் உலகு பொறுக்க வேண்டுவன். திருந்த வேண்டிய அமைப்புகளையும் பிழைகளையும் அறிஞர் உலகு சுட்டிக் காட்டுமேல் அவர்களுக்கெல்லாம் நான் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவனாவேன்.

உழை

இறுதியாக இந்நூல் வெளிவரத் தோன்றாத் துணையாய் இருந்த திருவருளைச் சிந்தித்து முடிக்கின்றேன்.

சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை அறியாத நாயி னேனை
நன்னெறிக்கே செலும்வண்ணம் நல்கி னானைப்
பற்பாவும் வாயராப் பாடி யாடிப்
பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கீழ்வேளூ ராளும் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. -அப்பர் 6: 67, 2

தமிழ்ப் பல்கலைக்கழகம், த.கோ. பரமசிவம்.
தஞ்சாவூர்,

## சுருக்க விளக்கம்

| | |
|---|---|
| அடியார்க். | அடியார்க்கு நல்லார் |
| அறுவகை. | அறுவகையிலக்கணம் |
| அறுவகை.யாப். | அறுவகையிலக்கணம் யாப்பு |
| ஆய்ச். | ஆய்ச்சியர் குரவை |
| இலக்.சூ. | இலக்கணச் சூடாமணி |
| இலக்.பாட். | இலக்கண விளக்கப் பாட்டியல் |
| இலக்.வி. | இலக்கண விளக்கம் |
| இளம். | இளம்பூரணம் |
| இன. | இனவியல் |
| உ. | உ.வே.சாமிநாதையர் நூலகச் சுவடி |
| உ.வே.சா. | உ.வே.சாமிநாதையர் |
| எழுத்து. | எழுத்ததிகாரம் |
| ஐங்குறு. | ஐங்குறுநூறு |
| கலி. | கலித்தொகை |
| கலிங். | கலிங்கத்துப்பரணி |
| க.வா. | கடவுள் வாழ்த்து |
| காக்கை. | காக்கை பாடினியம் |
| காஞ்சிப். | காஞ்சிப்புராணம் |
| குறள். | திருக்குறள் |
| குறுந். | குறுந்தொகை |
| கொன்றை. | கொன்றை வேந்தன் |
| சிதம்.பாட். | சிதம்பரப் பாட்டியல் |
| சிலப். | சிலப்பதிகாரம் |
| சீவக. | சீவகசிந்தாமணி |
| சுந். | சுந்தரகாண்டம் |
| சுவாமி. | சுவாமிநாதம் |
| சூளா. | சூளாமணிப் படலம் |
| செங். | செங்கீரைப்பருவம் |
| சொர்ண.அம்.பிள். | சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ் |
| சொல். | சொல்லதிகாரம் |
| த. | தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடி |
| தஞ்சை.கோவை. | தஞ்சைவாணன் கோவை |
| தண்டி. | தண்டியலங்காரம் |
| தமிழ்நெறி. | தமிழ்நெறி விளக்கம் |
| தழுவக். | தழுவக்குழைந்த படலம் |
| தனிப். | தனிப்பாடல் |
| திருக். | திருக்கோவையார் |
| திருமுருகா. | திருமுருகாற்றுப்படை |

| | |
|---|---|
| திருவா. | திருவாசகம் |
| தொல். | தொல்காப்பியம் |
| தொன்.வி. | தொன்னூல் விளக்கம் |
| நச். | நச்சினார்க்கினியர் |
| ந.பா. | நவநீதப் பாட்டியல் |
| நவ.பாட். | நவநீதப்பாட்டியல் |
| நற். | நற்றிணை |
| நற்றத். | நற்றத்தனார் |
| நன். | நன்னூல் |
| நாலடி. | நாலடியார் |
| நான்மணிக். | நான்மணிக்கடிகை |
| நிந்தனை. | நிந்தனைப்படலம் |
| நூ. | நூற்பா |
| ப.,பக்., | பக்கம் |
| பட்டினப். | பட்டினப்பாலை |
| பழைய. | பழையவுரை |
| பன்.பாட். | பன்னிருபாட்டியல் |
| பா.வே. | பாடவேறுபாடு |
| புறநா. | புறநானூறு |
| பே. | பேரூர்த் தமிழ்க் கல்லூரிச் சுவடி |
| பேரா. | பேராசிரியம் |
| பொருள். | பொருளதிகாரம் |
| மணிமே. | மணிமேகலை |
| மயேச். | மயேச்சுரர் |
| மர. | மரபியல் |
| மலைபடு. | மலைபடுகடாம் |
| மா.காஞ்சி. | மார்க்கண்டேயனார் காஞ்சி |
| மா.பா. | மாறன் பாப்பாவினம் |
| முத்துக்.பிள். | முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் |
| முத்துவீ. | முத்துவீரியம் |
| முத்தொள். | முத்தொள்ளாயிரம் |
| முதுமொழி. | முதுமொழிக்காஞ்சி |
| மேற். | மேற்கோள் |
| யாப். | யாப்பருங்கலம் |
| யாப்.கா. | யாப்பருங்கலக்காரிகை |
| யாப்பதி. | யாப்பதிகாரம் |
| யாப்.வி. | யாப்பருங்கலவிருத்தி |
| விருத்.பு. | விருத்தாசலப் புராணம் |
| வீரசோ. | வீரசோழியம் |
| வெண்.பாட் | வெண்பாப் பாட்டியல் |

# ஆய்வுரை

இலக்கணமும் இலக்கியமும் மொழியின் இருகண்கள். அவற்றினுள்ளும் மொழியின் பலநிலை வளங்களுக்குச் சான்று பகர்வன அதன்கண் அமைந்துள்ள இலக்கணங்களாகும். எழுத்து, சொல்லிலக்கணங்கள் மொழியின் அகப்புறக் கட்டமைப்பு களையும் காலந்தோறும் அது பெற்றுள்ள வளர்ச்சிகளையும் எடுத்துக்காட்டுவன. பொருளிலக்கணங்கள் மொழிபேசும் மக்களின் வாழ்க்கை நெறிகளைச் சித்திரித்துக் காட்டுவன. இவைபோன்றே யாப்பிலக்கணங்கள் மொழியின்கண் நிலவும் பரந்துபட்ட இலக்கியப் பரப்பை வெளிக்காட்டும் தகைமையுடையன. இருபத்தைந்திற்கு மேற்பட்ட யாப்பிலக்கண நூல்கள் தமிழ் மொழியில் எழுந்துள்ளமை இவ்வுண்மையை உறுதிப்படுத்தும். முழுமையாகக் கிடைத்துள்ள யாப்பிலக்கண நூல்களன்றியும் பெயரளவிலேயும் குறிப்பளவிலேயும் பல நூல்களும் காணக்கிடைக்கின்றன. யாப்பருங்கலவிருத்தி, வீரசோழியவுரை, யாப்பருங்கலக்காரிகையுரை போன்றவற்றின் உரைப்பகுதிகளில் பல யாப்பிலக்கண நூல்கள் குறிப்பிடப் படுகின்றன.

## தொகுப்பும் பதிப்பும்

குறிப்பளவில் காணக் கிடைப்பனவற்றைத் தொகுத்துக் காண்பதும், பெயரளவில் அறிவனவற்றைத் தேடித் தருவதும் குறிப்படத்தக்க பணிகளாக அமையும். இவ்வாறு தொகுக்கும் பணியை மேற்கொண்டதில் காக்கைபாடினியம் அவிநயம் போன்ற யாப்பிலக்கண நூல்கள் தொகுப்புருவாக்கம் பெற்றுள்ளன. இவைபோன்ற இன்னும் பல நூல்கள் தேடித்தரத்தக்க நிலையில் உள்ளன. சுவடிநிலையில் பல நூல்கள் பாதுகாப்புப் போர்வையில் பலராலும் அறியப்படாத வகையில் உள்ளன. இவற்றையெல்லாம் தேடித்தரும் பணியைப் பல்கலைக் கழகங்களும் மற்றும் பல நிறுவனங்களும் மேற்கொண்டு வருகின்றன.

இவ்வகையில் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறை இதுகாறும் மூவாயிரத்திற்கு மேற்பட்ட சுவடிகளைத் தொகுத்துள்ளது. அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒரு சுவடியே இலக்கணச் சூடாமணி என்பது. யாப்பிலக்கண வரலாற்றில்

இதுவரை அறியப்படாததாக விளங்கும் இந்நூலின் பதிப்புப் பணியைப் பல்கலைக்கழகம் எனக்களித்தது.

## நூலமைப்பு

இந்நூல் 58 வெண்பாக்களைக் கொண்டது. நேமிநாதம், வெண்பாப் பாட்டியலைப் போன்று இந்நூல் வெண்பா யாப்பில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். உரையுடன் அமைந்த இந்நூல் யாப்பிலக்கணத்தை மட்டும் கூறும் யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை போலன்றிப் பிரபந்தவிலக்கணத்தையும் சேர்த்துக் கூறுகின்றது. யாப்புப் பரப்பின் வளர்ச்சிநிலையை எடுத்துக்காட்டுவதாக அமையும் பிரபந்தவிலக்கணத்தையும் யாப்பிலக்கணத்தையும் தொன்னூல் விளக்கம், சிதம்பரப் பாட்டியல் போன்ற நூல்கள் இணைத்துக் கூறுகின்றன. இவற்றைப் போன்றே இலக்கணச் சூடாமணியும் பிரபந்தவிலக்கணத்தைக் கூறுகின்றது. உறுப்பியல், பாவியல், பாவினவியல், பிரபந்தவியல், ஒழிபியல் என்னும் ஐந்து இயல்களைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை போன்றவற்றின் கருத்துகளை அடியொற்றியும் அவற்றின் உரையமைப்பைப் பின்பற்றியும் இது விளங்குகிறது. எல்லா இலக்கண நூலுள்ளும் காணப்படும் இலக்கணக் கருத்துகளை - பிழிவுகளை யெல்லாம் தொகுத்துக் கூறுவதாக இந்நூலின் பாயிரம் கூறுகின்றது.

"மலைமாது போற்ற மலர்மாது வாழ்த்தும்
கலைமாதை நெஞ்சிற் கருதி - நலமார்
இலக்கணச்சா ரத்தை எடுத்தியம்பு கின்றேன்
இலக்கணச்சூ டாமணியீ தென்று" (இலக்.சூ. 1)

இலக்கணம் என்பது பொதுப்பெயராயினும் நூல்நுவல் பொருட்சிறப்புக் கருதி ஈண்டு யாப்பிலக்கணத்தையே குறித்து நிற்கின்றது. முன்னுள்ள இலக்கண நூல்களின் கருத்துகளைப் பிழிந்து அவற்றின் சாரத்தைத் தொகுத்து இந்நூல் தருமாற்றை நூலுள் பலவிடங்களிலும் காணலாம். முன்னூல்களின் மரபையொட்டி இந்நூலும் மகடூஉ முன்னிலை நெறியில் இலக்கணம் கூறுகின்றது. 58 வெண்பாக்களுள் 7 வெண்பாக்கள் மகடூஉ முன்னிலையில் அமைந்துள்ளன.'பிணைவிழிக்கண் மானே' (10), 'பிணைக்கருவேற் கண்ணாய்' (20), 'வடிவுறுவேற் கண்ணாய்' (21), 'தோகாய்' (23, 27), 'குடிகொள் அளிகளிக்கும்

கூந்தல் அணங்கே' (33), 'செருமோதிவந்த வடிவேற் கண்ணாய்' (40) என்பன இவை.

இந்நூலின் உரைப்பகுதி நிறைவுற்றவுடன் நூற்பயன் கூறும் காரிகை ஒன்றுள்ளது.

"ஊர்க்கு முயர்ச்சியொப் பாயிருப் பாருல காளுமன்னர்
யார்க்கும் வரிசை பெறமிகுப் பாரடைந் தோரையென்றும்
கார்க்கு மதுலன் கவிவால பாரதி கட்டுரையால்
பார்க்கும் இலக்கணச் சூடா மணியைப் படித்தவரே"

என்னும் இக்காரிகை நூற்பயன் கூறுவதோடுமட்டுமன்றி நூலாசிரியரையும் உணர்த்துவதாக அமைகின்றது.

எளிமையும் தெளிவும் கொண்ட இந்நூல் நூற்பா, நூற்பா நுதலும் பொருள், கருத்துரை, எடுத்துக்காட்டு, விதப்புக்கிளவி என்ற அமைப்பில் இலங்குகிறது. வெண்பாக்கள் தெளிந்த நடையில் எளிதில் பொருள் கொள்ளத்தக்கவகையில் உள்ளன. 58 வெண்பாக்களுள் மூன்று (4, 10, 26) ஈற்றுச் சீர்கள் ஈரசைச்சீரான் முடிந்து நிற்கின்றன.

'நேர்நிரைசே ரப்பொதுவாய் நிற்கும்'(இலக்.சூ.4)
'றானமுற நான்குமுற ஒக்கும்'(இலக்.சூ.10)
'முடிவினுற வெண்கலியாய் முற்றும்'(இலக்.சூ.26)

வெண்பாவின் இறுதிச்சீர் அசைச்சீராக நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டாலேயே அமையும் என்னும் இலக்கண நெறி நெகிழ்வடைந்துள்ளமையை இங்குக் காணமுடிகின்றது. இவையன்றி முற்றியலுகர வீற்றால் முடியும் வெண்பாக்களும் இந்நூலுள் காணப்படுகின்றன.

முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல் போற்று கின்ற தன்மைக்கேற்ப யாப்பருங்கல விருத்தியுள் காணப்பெறும் இருவெண்பாக்கள் இந்நூலுள் நூற்பாக்களாக அமைந்துள்ளன. இன்னின்ன எழுத்துகளுக்கு இவையிவை மோனையாகும் என்று குறிப்பிடும்,

"அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகான்
இகரமோ டீகாரம் எஏ - உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
ஆகாத அல்ல அனு" (யாப்.வி. 53 மேற்.)

என்ற யாப்பருங்கல விருத்தியின் மேற்கோளே இந்நூலுள் 7ஆம் நூற்பாவாக எடுத்தாளப்பட்டுள்ளது. இதைப்போன்றே,

"ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்
ஆசிரியம் வெண்பாக் கலிக்கண்ணாம் - ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா அடிவிரவா உற்று" (யாப்.வி. 31 மேற்.)

என்ற யாப்பருங்கல விருத்தி மேற்கோளும் இலக்கணச் சூடாமணி 52ஆம் நூற்பாவாக எடுத்தாளப்பட்டுள்ளது.

## நூற்பாவில் வழக்குச் சொற்கள்

இலக்கணச் சூடாமணியிலுள்ள வெண்பாக்களுள் வழக்குச் சொற்கள் ஒருசில காணப்படுகின்றன. நிச்சம் (20), வாச்ச (17), வாச்சது (12), ஏற்றக்குறைச்சல் (46) போன்ற வழக்குச் சொற்கள் வெண்பாவின் எதுகைக்கேற்ப எவ்வித ஊறும் நேராமல் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

'ஏல்' என்ற இடைச்சொல் காரணப் பொருட்டாகப் பலவிடங்களில் ஆளப்பட்டுள்ளது. 'பின்னும்' என்ற சொல் 'மேலும்' என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். இவ்வாறு பல சொற்கள் வெண்பாவின் எளிமைக்குத் துணைபுரிவனவாக அமைந்து இலக்கணத்தைத் தெளிவுபடுத்துகின்றன.

## உவமை

உவமைப் பயன்பாடு இலக்கணத்திற்கு இன்றியமையாதது. பண்டைய இலக்கண நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் இலக்கணப் புலப்பாட்டிற்கு உவமைகளைப் பெரிதும் மேற்கொண்டுள்ளனர். இந்நூலாசிரியர் ஓரிடத்தில் மட்டும் உவமையைப் பயன்படுத்தியுள்ளார். அவ்வுவமை வழக்கு நோக்கிய எளிய உவமையாக அமைந்துள்ளது. வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்னும் நான்கு பாக்களுள் முதலிலும் ஈற்றிலும் நின்ற வெண்பா வஞ்சி நீங்கலாக இடையில் நின்ற ஆசிரியம், கலி இரண்டனுள்ளும் ஐஞ்சீரடி மயங்கும். இதனை உணர்த்த வேண்டிப் 'பயவுணர்வுடையார் முன்னும் செல்லாது பின்னும் செல்லாது இடையில் செல்வாராதலைப் போன்று ஐஞ்சீரடி முதலும் இறுதியும் நின்ற பாக்களில் கலவாமல்

இடையில் நின்ற பாக்களில் கலக்கின்றது' என்று நயம்பட வுரைத்தார். இதனையை "அஞ்சினர்பின் போவதென ஆம்" (இலக்.சூ.54) என்ற உவமையால் விளக்கியுள்ளார்.

## நூற்பெயர்

இத்தகு நூலமைப்பைக் கொண்ட இந்நூல் இலக்கண வரலாற்றில் குறிக்கத்தக்க இடத்தைப் பெறுகின்றது. இந்நூலுக்கமைந்த பெயர் சிறப்புடையதாகும். சூடாமணி என்பது ஒருதலையணிவகை. 'சுடரொளி மவுலிச் சூடாமணி மிசை' என்பது சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தியாகும் (பெருந்தொகை 907). நூலுள் தலைசிறந்தது என்னும் பொருண்மை கருதி நூலுக்குச் சூடாமணி என்று பெயரிடுதல் மரபாக இருந்தது. அவ்வகையில் நிகண்டு சூடாமணி, மகாபாரத சூடாமணி, வேதாந்த சூடாமணி, பரதசூடாமணி போன்ற நூல்கள் சூடாமணி என்னும் பெயரைத் தாங்கியுள்ளன. "தருக்கமாவது நியாய சூடாமணி, புதியாநுட்பம் ஆகியவற்றைக் கண்டுகொள்க" என்பது வீரசோழியவுரை (நூற்பா 179). எனவே சூடாமணி என்பது சிறப்புக் கருதி வழங்கப்பட்டிருக்கும் என்பது பெறப்படும். அவ்வகையில் இவ்விலக்கண நூலும் இலக்கணச் சூடாமணி எனப் பெயர் பெற்றது. 'இலக்கணச் சூடாமணி ஈது' (இலக்.சூ.1) என்றும், 'பார்க்கும் இலக்கணச் சூடாமணியை' (நூற்பயன்) என்றும் நூலுள் இப்பெயர் ஆளப்பட்டிருப்பது இப்பெயரின் பெருவழக்கை நமக்கு உணர்த்துகிறது. இலக்கணமாகிய சூடாமணி என நின்று நிலைமொழி மகரம் கெட்டு ஒற்று மிகுந்த புணர்ச்சியாகும். யாப்பிலக்கணத்தையும், சிறிதளவே பிரபந்த விலக்கணத்தையும் கூறும் நூலாயினும் பொதுப்பெயராகிய 'இலக்கணம்' என்பதாலேயே இந்நூல் வழங்கப் பெற்றுள்ளது.

## நூலாசிரியர்

மூலமும் உரையுமாக அமைந்த இந்நூலின் ஆசிரியரும் உரையாசிரியரும் வேறானவர்கள் என்பது புலனாகின்றது. நூலினுள் இதன் ஆசிரியர் பற்றிய குறிப்பேதும் இல்லை. நூலின்புறத்தே அமைந்த நூற்பயன் கூறும் காரிகை மட்டும் "கார்க்கும் அதுலன் கவிபாலபாரதி கட்டுரையால் பார்க்கும் இலக்கணச் சூடாமணி" என்று குறிக்கின்றது. இவ்வடியை வைத்துக் 'கவி பாலபாரதி' என்பவர்தான் இந்நூலாசிரியர் என்று

உறுதியாகக் கொள்ளவியலவில்லை. கட்டுரை என்பதற்கு அமைந்த உறுதிச்சொல், பழமொழி, பொருள் பொதிந்த சொல் போன்ற பலபொருள்கள் இலக்கணம் என்ற பொருண்மைக்கு ஒப்ப அமைந்திருப்பினும், 'கவிபாலபாரதி கட்டுரையால் பார்க்கும் இலக்கணச் சூடாமணி' என்பதால் பாலபாரதி என்பவர் இலக்கணச் சூடாமணியின் நூலாசிரியர் என்று கொள்வதற்கு அத்தொடர் இடந்தரவில்லை. நூலின் உரையாசிரியர் என்று கருதுவதற்கு இடமிருப்பதை உணரலாம். இருப்பினும் இவ்வையத்தைக் களையும் முகத்தான் பிறிதொரு சான்று உ.வே. சாமிநாதையர் நூலகச் சுவடியினின்றும் கிடைத்தது.

அச் சுவடியில் இவ்வைம்பத்தெட்டு வெண்பாக்களுக்கும் முதனினைப்புச் செய்யுள்களாக நான்கு காணப்படுகின்றன. அவற்றை நோக்கும்போது பாலபாரதி என்பவரே இந்நூலின் ஆசிரியர் என்பது தெளிவாகின்றது.

"பார்மிசையின் இருபத்தொன் பானிரட்டி வெண்பாப்
பகர்ந்தவன்பேர் கலித்துறையொன் றேயூர்க்கு முயர்ச்சி"

என்ற செய்யுள் தொடர் நூற்பயனாக அமைந்த "ஊர்க்கு முயர்ச்சி" என்னும் கலித்துறை, நூலைப் பகர்ந்தவன் பெயரைச் சொல்லுவது என்பதைத் தெளிவுறுத்துகின்றது. எனவே இலக்கணச் சூடாமணியின் நூலாசிரியர் கவிபாலபாரதி என்றே கொள்ளலாம்.

## கவிபாலபாரதி

சங்க காலம் முதல் இக்காலம் வரை ஒரே பெயரில் பலர் என்ற அமைப்பு நிலவி வருகின்றது. பாலபாரதி என்ற பெயரிலும் பலர் இருந்திருக்கின்றனர். பாரதி என்பது கலைமகளின் பெயர். கலைமகளின் அருள் பெற்றுக் கவிபல புனையும் ஆற்றலுற்ற நிலையில் அவள் பெயரையே தம் பெயராகக் கொள்ளுதல் பக்தி அடிப்படையில் புலவர்கட்கு ஏற்புடையதாகும். 'பால' என்பது இளமையைக் குறிக்கும். பாலபாரதி என்ற இப்பெயர் புலவர்களுக்கு விருதுப் பெயராகவும் வழங்கப்பட்டது. இவருக்குக் 'கவி' என்ற சிறப்பு அடை கொடுக்கப்பட்டிருப்பதால் இவர் இலக்கண ஆசிரியராக மட்டுமன்றி இலக்கியப் புலவராகவும் இருந்திருக்க வேண்டும்.

௩ மீ எ

இப்பெயருடையவர்கள் சுவடிகளில் பாலபாரதி, வாலபாரதி, வாலசரசுவதி எனக் காணப்படுகின்றனர். ஒலித்திரிபுகளில் பகரத்திற்கு வகரம் வருதல் இயல்பு. இது, சுவடித்தமிழில் இயல்பானதாகக் கருதப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படுதல் குறிப்பிடத்தக்கதாகும். கிளைமொழிக் கூறுகளுக்கேற்பச் சுவடியெழுத்தர்களின் ஒலிமாற்றத் தாக்கங்கள் அவர்கள் எழுதும் சுவடிகளில் இடம் பெறுதலும் உண்டு. இலக்கணச் சூடாமணிச் சுவடியில் (தமிழ்ப் பல்கலைக்கழகம்) பாலபாரதி என்பதற்கு வாலபாரதிஎன்று எழுதப்பட்டுள்ளதும் இவண் நோக்கத் தக்கதாகும்.

பாலபாரதியருள் ஒருவர் தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளையின் காலத்து வாழ்ந்தவர். சாலிவாகன சகாப்தம் 1709 ஆம் ஆண்டு பிலவங்க வருடம் சித்திரை மாதம் 14ஆம் நாள் மாரிமுத்தாப்பிள்ளை இயற்கை எய்தினார் என்ற குறிப்பு காணப்படுவதால் இவருடைய காலம் தெளிவாகின்றது. இப் பாலபாரதி பிள்ளையவர்களின் கல்வித் திறமையைப் புகழ்ந்து பாடியதாக ஒரு செய்யுள்மட்டும் காணக்கிடைப்பதாகத் தனிச்செய்யுட் சிந்தாமணி கூறுகின்றது.

மற்றொருவர் இராமாயணக் கதையைச் சந்தப்பா வடிவில் இராமசெயத் திருப்புகழ் என்ற பெயரில் பாடியவராவார். இவர் பெயர் வாலபாரதி என்றும் வழங்கப்படுகிறது. இவர் ஆண்டாள் பிறந்த ஊராகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தவர். கவி புனையும் திறத்தால் இவருக்குப் பால பாரதி என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. இவர்தம் இயற்பெயர் இராமய்யங்கார் என்பதாகும். இராமநாடகக் கீர்த்தனை எழுதிய அருணாசலக் கவிராயருக்குக் காலத்தால் இவர் முற்பட்டவர். இப் பாலபாரதியின் காலம் கி.பி. 17ஆம் நூற்றாண்டாகும். இவர் வைணவராகவிருப்பினும் சமயப் பொது நோக்கு உடையவராக விளங்கினார்.

பிறிதொருவர் பவானியில் வாழ்ந்தவர் என்பர். இப் பால பாரதியின் இயற்பெயர் முத்துசாமி ஐயர் என்பதாகும். இவர் சதக இலக்கியம் ஒன்றையும் பல தனிப்பாடல்களையும் கீர்த்தனைகளையும் பாம்பண காங்கேயன் குறவஞ்சி என்னும் நூலையும் இயற்றியவர். கல்வியறிவில் தேர்ந்து கவிதை புனையும் ஆற்றலையும், நினைத்தவளவில் கவிதை பாடும் திறனையும் பெற்றவர்க்குப் 'பாலபாரதி' என்ற சிறப்புப் பெயர் இடப்பெற்றிருக்கும் என்று கருதலாம்.

இம் மூவரன்றியும் 'வாலசரசுவதி' என்ற புலவரொருவரை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சுட்டுவதைக் காணலாம். வண்ணப்பாக்கள் பாடுவதில் ஆற்றல் பெற்றவராக இவர் விளங்கினார். தன்னைப் பாதுகாத்த சிற்றரசன் இறக்கவும் அதனால் பெருங்கவலை யடைந்து ஆற்றாமையால் நோன்பிருந்து அவ்வரசனுக்காகவே உயர்நீத்தார் என்று சுவாமிகள் தம் புலவர் புராணத்துள் கூறியுள்ளார்.

இவ்வாறாக இப் பாலபாரதி என்னும் பெயரில் வாழ்க்கைக் குறிப்புகளோடு பலர் காணப்படினும் இலக்கணச் சூடாமணி நூலாசிரியராகிய பாலபாரதியைப் பற்றி அறிந்துகொள்ளப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை என்றே கொள்ளவேண்டும். சுவடியிலுள்ள பிற்குறிப்பு 'துந்துபி வருடம் தை மாதம் 19 சுக்கிரவாரநாள் அனுட்டமி ஐந்தரை நாழிகைக்கு ரேவதி நட்சத்திரம் சுகர்மநாமயோகம் 14க்கு வச்சிரநாம யோகம் முன்றேகால்' என்பதாகும். இதனைக் கொண்டு காலத்தைக் கணக்கிடும்பொழுது 30-1-1863 அளவில் இச்சுவடி எழுதப்பெற்றிருப்பதாகத் தோன்றுகிறது.

சிந்து யாப்பிற்கும் வண்ணத்திற்கும் இவர் இலக்கணம் கூறுகின்றார். எனவே இவ்விரு பாவகைகளும் சிற்றிலக்கிய வடிவம் பெற்ற காலத்தில் இவர் இலக்கணம் செய்திருப்பார் என்று கொள்ள இடமுண்டு. எனவே 17ஆம் நூற்றாண்டளவில் இந்நூலாசிரியர் வாழ்ந்திருக்கக் கூடும். இக் கருதுகோளன்றிக் காலத்தை வரையறுத்துக் கூறுதற்கியன்ற அகப்புறச் சான்றுகளோ இவர்தம் வரலாறோ அரியனவாயுள்ளன.

## உரையாசிரியர்

இந்நூல் உரையாசிரியரின் பெயரை அறியவியலவில்லை. இவர் நூலாசிரியரினின்றும் வேறானவர். 'இந்நூலுடையார்க்கும் இதுவே உடன்பாடு' (இலக்.சூ.52) என்று நூலாசிரியரை இவர் சுட்டியுள்ளதால் இருவரும் வேறானவர் என்பது தெளிவாகின்றது. இவர் பரந்த இலக்கண இலக்கியப் புலமை கொண்டவராகக் காணப்படுகின்றார். யாப்பருங்கலக்காரிகை உரையமைப்பைப் பின்பற்றி இந்நூலுக்குத் தெளிந்த ஓர் உரையை இவர் வரைந்துள்ளார். 250க்கும் மேற்பட்ட இலக்கிய மேற்கோள்களையும் 60க்கும் மேற்பட்ட இலக்கண மேற்கோள்களையும் தம் உரையுள் எடுத்தாண்டுள்ளார்.

யாப்பருங்கலக்காரிகையைப் போன்று இவ்வுரையையும் விரிவாக அமைக்க வேண்டும் என்று கருதி அதனுள் காணப்படுதல் போன்றே 17 உதாரண முதனினைப்புக் காரிகைகளை இதனுள்ளும் இவ்வுரையாசிரியர் அமைத்துக் காட்டியுள்ளார். அவற்றுள் 12 காரிகைகளை யாப்பருங்கலக் காரிகையினின்றும் எடுத்தாண்டுள்ளார். எஞ்சிய ஐந்து காரிகைகளையும் தாமே இயற்றியமைத்துள்ளார். இவற்றுள்ளும் 'யாதானும் பாலொடு' என்னும் காரிகையை நான்கிடங்களில் (16, 19, 22, 29) மேற்கொண்டுள்ளார்.

இவ்வுரையாசிரியர் உரையுள் எடுத்துக்காட்டியவற்றுள் பெயர் தெரியாத இலக்கண இலக்கியச் செய்யுள்கள் பல உள்ளன.

"அகவ லோசையோ டளவடித் தாகியும்
இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும்
தன்றளை தழுவியும் பிறதளை மயங்கியும்
ஈரசைச் சீரான் எய்துவ தகவல்" (இலக்.சூ. 19 மேற்.)

"அராக வடியோ டாறுறுப் புடைத்தாய்
வராத தன்றே வண்ணகத் தாழிசை" (இலக். சூ. 25 மேற்.)

"ஐஞ்சீர் முதலா அமைதரு பாவினத்து
எஞ்சா இயல்கடை இடைவழி என்ப" (இலக். சூ. 11 மேற்.)

நெடிற்குறி லிணையொடு நின்றசீர் இறுதி
இடைவரு தனிக்குறில் நேரசை என்ப" (இலக். சூ. 4. மேற்.)

போன்ற இலக்கண மேற்கோள் நூற்பெயர் அறியவியலா தனவாக வுள்ளன.

இலக்கிய மேற்கோள்கள் பல நூற்பெயர் விளங்காதன வாகக் காணப்படுகின்றன. அவற்றுள்

"பொலியுநறை நிறைதவளாம் புயமலர்மா ளிகையினிடை
குலவுமெண்மர் வசினிமுதற் கொடிமடவார் புடைபரவ
வலிமைபெறு கலைமகளை மனதினினை வுறுமடியார்
மலிவுறுசொற் கவிமழையால் வசுமதியை மகிழ்செய்வரே"

என்ற கலைமகள் புகழ் பரவும் பாடல் குறிக்கத்தக்கதாய் உள்ளது.

இவர்தம் உரையை நோக்குமிடத்து இவர் சமயப் பொது நோக்குடையவர் என்பது புலனாகின்றது. இந்திரன், கலைமகள், திருமகள், சிவபெருமான், திருமால், முருகன் போன்ற கடவுளரின்

புகழ்பாடும் பாடல்களைத் தம்முரையில் எடுத்தாண்டுள்ளார். இருப்பினும் சவலை வெண்பாவிற்கு எடுத்துக்காட்டுத் தரும்பொழுது இலக்கண நூலார் பிறரினின்றும் இவர் வேறுபட்டு எடுத்துக்காட்டுத் தருவது குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது. சவலை வெண்பாவைக் குறிப்படும் முத்துவீரிய ஆசிரியர் அதற்குச் சிதம்பரச் செய்யுட்கோவைப் பாட்டாகிய "திருமுடியிற் கண்ணியும் மாலையும் பாம்பு" என்பதையே எடுத்துக்காட்டாகத் தருகின்றார். ஆனால் இவர் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் முதல் செய்யுளாகிய 'பல்லாண்டு பல்லாண்டு' என்பதை மேற்கோளாக எடுத்தாளுகின்றார். மேலும் ராமாயணம் என்பதற்கு இவர் 'ஸ்ரீ' என அடை கொடுத்துச் (ஸ்ரீ ராமாயணம்) சிறப்புச் செய்துள்ளார். இது வைணவர்க்கே உரிய மரபாகும். எனவே இவரை வைணவர் என்று கருத இச்சான்றுகள் இடம் தருகின்றன.

பிள்ளைத்தமிழுக்கு இவர் அழகர் பிள்ளைத் தமிழ் என்னும் நூலை எடுத்துக் காட்டுகின்றார் (இலக்.சூ. 43). இந்நூல் கவிகாளருத்திரர் என்பவரால் இயற்றப் பெற்றதாகும். இது உ.வே. சாமிநாதையர் நூலகத்தில் சுவடியாகவுள்ளது. இந்நூல் அச்சாகியுள்ளது என்றும் கூறுவர். இதன் காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டென்று கருதப்பெறுவதால் அக்கால எல்லையில் இவ்வுரையாசிரியர் வாழ்ந்திருப்பர் எனலாம்.

## புதிய பாடங்கள்

இவ்வுரையாசிரியர் மேற்கோளாகக் காட்டியுள்ள செய்யுட்களில் பல புதிய பாடங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் பல சுவையுடையனவாகவும் ஏற்றுக் கொள்ளத்தக்கனவாகவும் உள்ளன. அவற்றுள் சில வருமாறு: 'அம்பொடு வேனுழை வழியெல்லாம் தானிற்கு மன்னே' (235) என்பது புறநானூற்றுப் பாடம். இவ்வுரையாசிரியர் காட்டும் இதே அடி 'அம்பொ டுவனுழை வழியெல்லாம் தானிற்கு மன்னே' என்பதாகும். இதனுள் உவன் என்பதற்குப் பகையரசன் என்று பொருள் கொண்டு,பகையரசன் படைகொண்டு செல்லும் வழியெல்லாம் அதியமான் நெடுமான் அஞ்சி எதிர்நிற்பான் என்று கொள்வதும் பொருந்துவதாகும்.

இதனைப் போன்றே 'மண்டிணிந்த நிலனும்' (புறநா. 2) என்பதற்கு 'மண்டணிந்த நிலனும்' என்றொரு பாடத்தை

இவ்வுரை யாசிரியர் தந்துள்ளார். இது நிலவியல் அடிப்படையில் ஆய்ந்து காணவேண்டிய பாடமாகும்.

குறுந்தொகைப் பாடலுள்ளும் 'உலைக்கல் அன்ன பாறை ஏறிக்' (குறுந். 12) என்பதற்கு 'உலைக்கல் என்ன பாறை ஏறியக்' என்ற பாடத்தை இவர் தந்துள்ளார்.

'விடாது கழலுமென் வெள்வளையும் தவிர்ப்பாய்மன்'
(யாப்.வி.86.மேற்.)

'ஒல்லாது கழலுமென் ஒளிவளையும் தவிர்ப்பாய்மன்'
(யாப்.வி.86.மேற்.)

என்று பிறர் கொள்ளவும் இவ்வுரையாசிரியர் கொண்ட பாடம் 'செறிப்பாய்மன்' (இலக்.சூ.28 மேற்.) என்பதாகும். 'தவிர்ப்பாய்மன்' என்பதைவிடவும் 'செறிப்பாய்மன்' என்பது பொருந்திய பாடமாகத் தோன்றுகிறது.

'காதலர் மார்பன்றிக் காமக்கு மருந்துரையாய்' என்பதற்கு இவ்வுரையாசிரியர் கொள்வது 'காதலர் மார்பின்றிக் காமக்கு மருந்துரையாய்' என்பதாகும் (இலக்.சூ.வி மேற்.). 'மார்பன்றி' என்பதினும் 'மார்பின்றி' என்பது மரபு நோக்கிய பாடமாகக் காணப்படுகின்றது. இவை போன்று பல புதிய பாடங்கள் இவ்வுரையாசிரியர் காட்டும் மேற்கோள்களில் பொதிந்துள்ளன. ஆய்வாளர்கள் இவற்றை ஆய்ந்து மகிழ்வார்களாக.

## தம்கால வழக்குகளை நூலில் சேர்த்தல்

உரையாசிரியர்களுள் பெரும்பான்மையர் தம்கால வழக்குகளைச் சேர்த்துக் கூறுதலை மரபாகவே கொண்டிருந்தனர். பண்டைய உரையாசிரியர்களிடத்து இம்மரபைப் பெரிதும் காணலாம். இலக்கணச் சூடாமணி உரையாசிரியரும் நூற்பாவின் கருத்தை அடியொற்றித் தம்கால யாப்பு வழக்குகளை ஏற்றிக் கூறியுள்ளார்.

"கருத்துரைத்துப் பேர்காட்டிக் காரியத்தை மூன்றாய்
விரித்துரைத்து நான்கடியின் மேவும்-சுருக்கத்தில்
ஈரடியா யுந்தனிச்சொல் எய்தியுமேற் றக்குறைச்சல்
சீருமுள தாய்முடியும் சிந்து" (இலக்.சூ. 46)

என்று சிந்துவிற்குரிய பொதுவிலக்கணத்தை நூலாசிரியர் கூறவும், இவ்வுரையாசிரியர் தம்உரையுள் இதற்குக் கீர்த்தனை வடிவம்

தந்துள்ளார். இவர், "தன் உள்ளக் கருத்தை முன் ஒரு பல்லவம் என்று பேரிட்டுப் பின்பேர்காட்டி என்றது பாட்டுடைத்தலைவன் பேரை அனுபல்லவமாகச் சொல்லிப் பின்பு தன் காரியத்தை எல்லாம் மூன்று பாகமாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தை நான்கடி நான்கடியாக மூன்று பங்காய்ப் பாடுவது"என்று அதற்கு உரை வகுத்தார். இதனால் இவ்வுரையாசிரியர் கீர்த்தனையாகிய தம்கால யாப்பு வழக்கைச் சேர்த்துக் கூறியுள்ளார் என்பதை உணரலாம்.

## நூற்பொதி சிறப்புகள்

இத்தகு அமைப்புகளைக் கொண்ட இந்நூலுள் பல புதிய இலக்கணக் கூறுகள் பொதிந்துள்ளன. முன்னோர் கருத்துகளினின்றும் வேறுபட்ட கருத்துகளைச் சொல்வதும் புதிய இலக்கணக் கூறுகளை வரையறுத்துக் காட்டுவதும் இந்நூலின் சிறப்புகளாகும்.

## அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள்

அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள் எவையென்று வரையறுத்துக் கூறுவதில் இலக்கண நூல்கள் வேறுபடுகின்றன. தொல்காப்பியத்துள் இவ்வரையறை கூறப்பெறவில்லை. காக்கைபாடினியம் குறில், நெடில், அளபெடை, உயிர், மெய், உயிர்மெய், வலி, மெலி, இடை, ஆய்தம், இஉஐ குறுக்கம் என்னும் பதின்மூன்றனை அசைக்குறுப்பாகும் எழுத்துகளாகக் கூறுகின்றது. சிறுகாக்கைபாடினியம் 12 என்றும், யாப்பருங்கலவிருத்தி 15 என்றும், யாப்பருங்கலக்காரிகை 13 என்றும், நாலடி நாற்பது 13 என்றும், அவிநயம் 11 என்றும், பெரியபம்மம் 15 என்றும் எழுத்து வரையறையை எடுத்து மொழிகின்றன. ஆனால் இலக்கணச் சூடாமணி குற்றெழுத்து, நெட்டெழுத்து, ஆவியெழுத்து, மெய்யெழுத்து, ஆய்தவெழுத்து, உயிர்மெய்யெழுத்து, அளபெடை யெழுத்து என ஏழனை அசைக்கு உறுப்பாகும் எழுத்துகளாகக் கூறுகின்றது.

பாவுக்குரிய சீர்களைக் கூறுவதோடு பாவினங்களுக்குரிய சீர்களையும் எடுத்துரைக்கின்றது. நாலசைச்சீர் வஞ்சிப்பாவிற்கும் சந்தப்பா முதலாகிய பாவினங்களுக்கும் உரிய சீர்களாகும் எனக் கூறுகின்றது.

## அடிவகை

குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் ஐவகை அடிகள் அல்லாமல் விருத்தம் என்னும் ஓர் அடிவகையை இதனுள் காண முடிகின்றது. ஐஞ்சீரான் வந்தவடி நெடிலடி என்றும் அதனின் மிக்கசீரான் வந்தவடி விருத்தமென்றும், எண்சீர் முதற் பதினாறு சீரளவும் வந்தவடி கழிநெடிலடி என்றும் இந்நூல் கூறுகின்றது. கழிநெடிலடியான் வந்த செய்யுட்கள் இசையோடு பாடுதற்குரியன என்பது 'குடிலக் கழிநெடிலாம் கூறு' என்ற தொடரால் விளக்கப்பட்டுள்ளது. குடிலம் என்பது வாய்ப்பாட்டுத் தொழிலாகும்.

## சிறப்பு மோனைகள்

பிற இலக்கண நூல்கள் கூறுகின்ற தொடை, தொடை விகற்பங்களைக் கூறுவதோடு, ஐஞ்சீர்முதற் பதினாறு சீர்ப் பாவுக்குமுரிய தொடை விகற்பங்களையும் இந்நூல் கூறுகின்றது (இலக்.சூ. 11). பாவிற்கும் பாவினத்திற்குமுரிய சிறப்பு மோனைக ளெனச் சிலவற்றை இந்நூல் சுட்டுகின்றது; இஃது இந்நூலுக் கேயுரிய தனித்தன்மையாகும். 'நாற்சீரடிப் பாவுக்கும் பொழிப்பு மோனை; பாவினங்களுக்கும் சிறப்பு மோனை பொழிப்பு மோனை; ஐஞ்சீரடிக்குக் கடைமோனை சிறப்பு; அறுசீர் முதற் பதின்சீரளவும் இடைமோனை சிறப்பு; பதினொரு சீர்முதற் பதினாறு சீரளவும் வழிமோனை சிறப்பு என்பது,

> "நாற்சீ ரடிபொழிப்பு நன்றேஐஞ் சீர்க்கடையாம்
> மேற்சீ ரடிகணடு வீறெய் தும் - வாச்சதொரு
> பன்னிருபன் னான்கு பதினாறு சந்தமுதல்
> துன்னுவழி மோனையெனச் சொல்" (இலக்.சூ. 12)

என்ற நூற்பாவழி உணர்த்தப்பட்டுள்ளது.

## ஒருசீரடி சதுக்கம்

வேறெந்த யாப்பு நூலிலும் இல்லாத ஒருசீரடியான் வரும் யாப்பு வகை யொன்று இதனுள் கூறப்பட்டுள்ளது. பாக்களது சீர்வரையறை கூறுமிடத்து ஒருசீரடியான் வரும் அடிவகை சதுக்கம் என்று பெயர் பெறும் என இந்நூல் கூறுகின்றது.

பாக்களுக்குரிய சீர்வரையறையை அனைத்து யாப்பிலக்கண நூல்களும் எடுத்தியம்புகின்றன. ஆசிரியம், வெண்பா, கலிப்பாவிற்கு நாற்சீரடியும், வஞ்சிப்பாவிற்கு இருசீரடியும் முச்சீரடியும் வரப்பெறும் என்பது பொதுவான யாப்பிலக்கண விதியாகும். முச்சீரடிதான் வஞ்சிப்பாவிற்குரிய அடிச்சிறுமை என்று பிற நூல்கள் கூறவும், யாப்பருங்கலவிருத்தி (26 உரை) இருசீரடியும் வஞ்சிக்குரிய அடிச்சிறுமையாகும் என்று கூறுகிறது. இரு சீரடியான் வரும் வஞ்சியே சிறப்புடையது என்றும் அது கூறுகிறது. இரு சீரடி, முச்சீரடி, நாற்சீரடி எனும் மூவகையே பாக்களுக்குரிய சீரடிகள் என்பதும், அவற்றால் ஆகும் பாவகைகள் வஞ்சி, ஆசிரியம், வெண்பா, கலி என்பதும் பெறப்படும். எனவே ஒருசீரான் வரும் அடிவகை தமிழ் யாப்பு நெறியில் இல்லை என்பது குறிப்படத்தக்கதாகும்.

ஒருசீர் தனித்து வருவது பாக்களின் ஒருறுப்பு நிலையிலேயே நிகழும். ஆசிரியம் வெண்பாவில் வரும் கூனும், கலிப்பாவில் வரும் தனிச்சொல்லும், இவ்வகையில் அடங்குவன. இவை பாக்களின் உள்ளடக்கத்தை வலியுறுத்துவதற்கும், நிகழ்ச்சி மாற்றங்களை எடுத்துக்காட்டுவதற்கும் பயன்படுவனவாகும். இவையன்றி வெண்பாவின் ஈற்றடியின் இறுதிச்சீர் அசையே சீராக அமைந்ததாகும்.

"ஓரசையே நின்றும் சீராம் பொதுவொரு நாலசையே" என்று யாப்பருங்கலக்காரிகை (6) கூறும். இவ்வாறன்றி ஒருசீரே அடியாக நின்று ஒரு பாவகையாக உருவாக்கம் பெறவில்லை. ஆனால் இலக்கணச் சூடாமணி,

"ஒருசீ ரடிசதுக்கம் ஓரிருசீர் முச்சீர்
வருசீ ரடிவஞ்சி மற்ற - தொருநான்கு
சீரகவல் வெள்ளை சிறந்தகலி என்றறிஞர்
ஊரறியச் சொன்னார் உகந்து" (இலக்.சூ. 15)

என வகைப்படுத்திக் காட்டுகிறது.

சதுக்கம் என்பதற்கு 'நான்கு கூடியது, நாற்சந்தி, சந்து, மேடை, தலையில் கட்டும் உருமால்' என்ற பொருள்களைத் தருகின்றது தமிழ்ப் பேரகராதி. தமிழ் இலக்கியங்களில் நாற்சந்தி என்ற பொருளிலேயே இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

'பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்'

என்பதற்கு 'நாற்சந்தி' என உரைகாண்பார் அடியார்க்கு நல்லார் (சிலப். 1,5,34).

'பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக'

என்பதற்கு 'நாற்றெருக் கூடுமிடம்' என உரைகாணுகின்றார் அரும்பதவுரை காரர் (மணிமே.1.55). மேலும்,

"கூகைச் சேவல் குரலோ டேறி
ஆரிருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகொல் கிளறும் மயங்கிருள் நடுநாள்"

(நற்.310:4-6)

என நற்றிணையிலும்,

"யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்"

(திருமுருகா. 224-225)

எனத் திருமுருகாற்றுப்படையிலும் இச்சொல் இப்பொருளில் பயின்று வந்துள்ளதைக் காணலாம். நச்சினார்க்கினியரும் சதுக்கம் என்பதற்கு நாற்சந்தி என்றே பொருள் காணுகிறார். எனவே 'ஒவ்வொன்றாக நான்கு சேர்ந்த ஒன்று' என்ற பொருண்மையுடையது சதுக்கம் என்ற சொல் என்பது நன்கு புலனாகும்.

சதுக்கம் என்பது 'ஒரு விருதுவகை' என்ற பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. 'சதுக்கம் சாமரை புக்கமாதியாம் வரிசை' என்பது கம்பராமாயணம் (நிந்தனை 12).

சதுக்கம் என்பது சதுஷ்கா (Catushka) என்னும் வட சொல்லின் திரிபு என்பர். இதற்கு,

*"Consisting of 4* (நான்கு உறுப்புகளைக் கொண்ட ஒன்று)*; a set of 4, collection of four* (நான்கு பொருள்களின் தொகுதி)*;a quadrangular courtyard* (சதுர முற்றம்)*; a necklace of 4 strings* (நான்கிழைச் சங்கிலி)*; a four-sided pond* (சதுரக்குளம்)*"*

என்ற பொருள்களுண்டென்று சமஸ்கிருத-ஆங்கில அகராதி கூறுகிறது. இவ்விளக்கம் மேற்கருத்தைத் தெளிவுறுத்துவதாக அமையும். வடசொல்லின் திரிபாக இதனைக் கொண்டால் இதனால் பெயர் பெற்ற இப் பாவகையையும்

அவ்வியாப்பினதாகவே கொள்ளல் வேண்டும். தமிழ் யாப்புநெறியில் இவ்வகைப் பாவகை இல்லையென்பது வெளிப்படை. வடமொழி யாப்பு வகையில் ‘சதுக்கம்’ என்ற பெயரில் இவ்வியாப்பு அமையப்பெறவில்லை. இலக்கணச் சூடாமணி ஆசிரியர் கூறுகின்ற ஒருசீரையே அடியாகக் கொண்டு பாடப்படுகிற யாப்புவகை வடமொழியில் உண்டென்பது மட்டும் நம்மால் அறியமுடிகின்றது.

வடமொழியின் இலக்கணங்களைத் தமிழில் கூறவந்த வீரசோழியம் எழுத்தெண்ணிப் பாடப்பெறும் யாப்பு வகைகளாக இருபத்தாறனை எடுத்து விளக்குகின்றது. உத்தம், அதியுத்தம், மத்திமம், நிலை, நன்னிலை, காயத்திரி, உண்டி, அனுட்டுப்பு, பகுதி, பந்தி, வனப்பு, சயதி, அதிசயதி, சக்குவரி, அதிசக்குவரி, ஆசி, அதியாடி, திருதி, அதிருதி, கிருதி, பிரகிருதி, ஆகிருதி, விக்ருதி, சங்கிருதி, அபிகிருதி, உற்கிருதி எனும் இவை ஒற்றொழித்து உயிராவது உயிர் மெய்யாவது பாத (அடி) மொன்றற்கு ஒரெழுத்து முதலாக முறையே இருபத்தா றெழுத்தளவும், கொண்டு பாடப்பெறுவனவாகும் (வீரசோ - யாப்புப் படலம் 33). இவற்றுள் உத்தம், அதியுத்தம், மத்திமம், நிலை என்பவற்றிற்குக் காட்டப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகள் ஒருசீரடியை நினைவூட்டுவனவாக அமைகின்றன.

கார்
நேர்
வார்
யார் — உத்தம்

போதி
யாதி
பாத
மோது — அதியுத்தம்

வேரம்வேய்
மாரன்சீர்
சேருங்கால்
நேர்வன்யான் — மத்திமம்

போதிநீழற்
சோதிபாதம்
காதலானின்
றோதனன்றே — நிலை

வீரசோழியத்துள் காட்டப் பெற்றுள்ள இவ்வெடுத்துக் காட்டுகளைத் தமிழ் யாப்புநெறிக்கேற்ப அசையலகிட்டுப் பார்க்கும்பொழுது அவை முறையே, ஓரசை யானும் ஈரசையானும் மூவசையானும் அமைந்த ஓரடிகளால் ஆனவை என்பதை நன்கறியலாம். இவ்வகை யாப்பிற்குரிய இலக்கணத் தைப் பிறிதொரு யாப்பிலக்கண நூலும் தெளிவுறுத்துகின்றது.

விருத்தமணிமாலா என்னும் இலக்கணநூல் வடமொழி விருத்த யாப்பிலக்கணத்தை எடுத்துரைப்பதாகும். இதனுள், ஒருபாதத்திற்கு ஒரு எழுத்து (அக்ஷரம்) வீதம் உக்தா சந்தஸ் என்னும் பாவகை அமைவதாகக் குறிப்பிடப்படுகின்றது. இதில் இரண்டு வகைகளுண்டு; ஒருபாதத்தில் குரு எழுத்து (நெடில்) கொண்டதாக ஒருவகையும், லகு எழுத்து (குறில்) கொண்டதாக ஒருவகையும் அமைகின்றன. இவற்றுள் 'குரு' வால் இயற்றப்படும் யாப்பிற்கு 'ஸ்ரீவிருத்தம்' என்று பொருள்படும் என்றும் அந்நூல் கூறுகின்றது. *(Ganapathi Sastri, VRTTA MANIMALA, Trichy, 3, 1977, Slokam 12)* 'உக்தாசந்தஸ்-ஏகாக்ஷரம்' என்ற பாவகைக்கு அவர்தரும் எடுத்துக்காட்டு:

கௌ - ரீ
ஸ்ரீ - தா

என்பதாகும். இதனால் ஒருபாதத்திற்கு (அடிக்கு) ஒருசீர் வரும் யாப்புவகை வடமொழியில் உண்டென்பது உறுதியாகும். இவ்வகை யாப்பைத் தமிழில் அறிமுகப்படுத்தும் எதிர் நோக்கிலேயே இலக்கணச் சூடாமணி யாசிரியர் தம் நூலில் எடுத்துரைத்துள்ளார் எனலாம்.

கலிப்பாவின் உறுப்புகளுள் அம்போதரங்கம் என்பதும் ஒன்று. அது சிற்றெண், இடையெண், அளவெண், பேரெண் என அமையும். இவை இருசீரோரடி, நாற்சீரோரடி என்ற அளவில் எட்டாகவும் நான்காகவும், இரண்டாகவுமாகிய அடிகளால் வரப்பெறும். ஆயினும் ஒரு சீரடியான் சிற்றெண் அமையப்பெறும் என இலக்கண நூல்கள் கூறவில்லை; இருசீரடியையே சிற்றெண்ணுக்கு அளவுகோலாகக் கூறுகின்றன. இந்நிலையில் ஒருசீரடியையும் சிற்றெண்ணுக்கு அளவுகோலாக மாறன் பாப்பாவினம் என்னும் நூல் கூறுகின்றது. அது, "வண்ணக ஒத்தாழிசையினுள் இருசீரோரடிச் சின்னம் பதினாறும் ஒருசீரோரடியால் வருவனவும் உள" (மாறன் பாப்பாவினம் 93

குறிப்புரை) எனக் கூறுகின்றது. மேலும் ஒருசீரால் வந்த சிற்றெண்ணுக்கு.

"தறுகணான்
மத்தமடவன்" (மாறன் பாப்பாவினம். பரிபாடல் 2)

என்பதை எடுத்துக்காட்டாகத் தருகின்றது. பாவினுள் ஒருசீரால் அடி நடைபெறும் என்பதற்கு இது சிறந்த எடுத்துக்காட்டாகும். இலக்கணச் சூடாமணியாசிரியரும்,

"நாற்சீர்முச் சீரிருசீர் நாடுமொரு சீர்முறையே
பேச்சுறுமம் போதரங்கப் பேர்" (இலக்.சூ. 48)

என அம்போதரங்கம் ஒருசீரடியால் நடைபெறும் என்பதை எடுத்துரைக்கின்றார. கலிப்பாவினுள் ஒருறுப்பாகவிருந்த ஒருசீரடியால் நடைபெறும் அமைப்பு தனித்ததொரு யாப்பு வகையாக உருப்பெறும் நிலையை இவர் சுட்டுகிறார் எனலாம். இதனையே 'ஒருசீரடி சதுக்கம்' என்று யாப்பையும் அதன் அடிவகையையும் சுட்டியுள்ளார்.

ஒருசீரடி என்பது கருத்துச் செறிவை உள்ளடக்கியதாக அமையும். கவிதையின் உணர்ச்சியையும் பொருண்மையையும் ஒருசீரில் செறித்துக் காட்டும் பொழுது அத்தகு கவிதை சிறப்புடையதாக அமையும். இதனால் அம்போதரங்கம் வினைமுற்றாய் அமைதல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார் இலக்கணச் சூடாமணி ஆசிரியர் (இலக்.சூ. 49).

பாவில் ஏற்படும் நெகிழ்வுகளே பாவின் வளர்ச்சிக்கு அடிப்படைகளாக அமைகின்றன. ஒருபாவின் உறுப்புகள் பிறபாக்களின் உறுப்புகளாக இடம்பெறுவதும், ஒருபாவின் உறுப்பே பிற பாவினத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக அமைவதும் யாப்பு வளர்ச்சியைச் சுட்டுவனவாகும். எனவே, இலக்கணச் சூடாமணி ஆசிரியர் சுட்டும் இவ்வியாப்பு வகையும் அத்தகு வளர்ச்சி நிலையில் எழுந்த ஒன்று எனக் கருத இடமுண்டு. நிலவிய இலக்கணக்கூறுகளை வரையறுத்துக் காட்டுவதும், நிலவுகின்றவற்றை வெளிப்படுத்திக் காட்டுவதும், இவ்வாறு அமைய வேண்டும் என விதித்துக் கூறுவதும் இலக்கண ஆசிரியரின் கடமைகளாகும். அவ்வகையில் இலக்கணச் சூடாமணி ஆசிரியர் கூறியது புது யாப்பு நெறியை விதித்துக் கூறுமுகத்தான் எழுந்ததாகும்.

இன்றைய, யாப்பு வளர்ச்சியை நோக்கும்பொழுது சுருங்கிய வடிவில் உணர்வைச் செறித்துக் கூறும் நெறியைக் கவிஞர்கள் மேற்கொண்டுள்ளனர் என்பது புலனாகும். இத்தகைய நெறிக்கு மிகுதியான சீர் அமைப்புகள் பொருந்தாதனவாகும். இன்றைய புதுக்கவிதையாளர்களுள் பெரும்பாலோர் ஒருசீரடிகளால் அமைந்த கவிதைகளையே நிரம்பவும் இயற்றுகின்றனர் என்பது வெளிப்படை. இத்தகு புதுக்கவிதை யாப்பு நெறிக்கு, இலக்கணச் சூடாமணி யாசிரியர் கூறிய 'சதுக்கம்' என்னும் யாப்பை இலக்கணமாகக் கூறக் கருதுதல், 'புதுக்கவிதையாளர்களின் நெறிக்கு மாறாகவும் அமைதல் கூடும்.

எனினும், எந்தவொரு யாப்பு வகையும் பொருண்மை அடிப்படையில் இலக்கணம் பெற்றாலும், இலக்கண அடிப்படையில் பொருண்மை பெற்றாலும் அவற்றை வரையறுத்துக் காட்டுவது இன்றியமையாததாகும். எனவே இலக்கணச் சூடாமணியுள் கூறப்பட்டுள்ள இவ்வியாப்பு வகை யாப்பிலக்கணத்திற்கு ஒரு புதுச் சேர்க்கையாக அமைகின்றது என்று கொள்ளலாம்.

## சவலை வெண்பா

வெண்பா ஆறுவகைப்படும் என்று இந்நூல் கூறுகின்றது. அவை குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா, சவலை வெண்பா என்பனவாம். சவலை என்னும் வெண்பா வகையை மாறன் பாப்பாவினமும் (நூ.28), தொன்னூல் விளக்கமும் (நூ. 222), முத்துவீரியமும் (நூ.998), அறுவகை இலக்கணமும் கூறியுள்ளன. ஆயினும், இந்நூல்களினின்றும் இலக்கணச் சூடாமணி வேறுபட்டுச் சவலை வெண்பாவின் இலக்கணத்தைக் கூறுகின்றது.

சவலை என்ற சொல்,மெலிந்தது, கட்டுக்குலைந்தது என்று பொருள்படும். உலக வழக்கில் இயல்பளவில் மெலிந்து வலிமையற்றுக் காணப்படும் குழந்தையைச் சவலைப்பிள்ளை என்றழைப்பதைக் காணலாம். எனவே, தன் இயல்பில் குறைந்துவரும் யாப்பைச் 'சவலை யாப்பு' என்று கொள்ளலாம். கூறப்பட்ட எழுத்து அசை சீர் போன்றவை குறைந்து வரும்பொழுது அது சவலை யாப்பாகக் கருதப்படுகின்றது.

4-

சவலை என்பதை ஒரு யாப்பாகவே வீரசோழியம் வகைப்படுத்துகின்றது. குறள், சிந்து, திரிபாதி, வெண்பா, திலதம், விருத்தம், சவலை என ஏழுவகைப்படுத்தி இவ்வேழும் தத்தம் இலக்கணங்களில் மிக்கும் குறைந்தும் வந்தால் அவை போலி என்றழைக்கப்படும் என்று அந்நூல் (வீரசோ.124) கூறுகின்றது. வீரசோழியத்தைப் பொறுத்தவரை நான்கடி கொண்ட பாக்கள், முதல் இடை கடையடிகள் குறைந்தும் மிக்கும் வந்தால் சவலையாகும். அவ்வாறு முதலடி குறைவது முதற்சவலை என்றும் இடையடி குறைவது இடைச்சவலை என்றும் கடையடி குறைவது கடைச்சவலை என்றும் அந்நூல் சுட்டுகின்றது. நான்கடியின் மிக்க அடிகள் ஒத்தும் ஒவ்வாதும் வருதல் சவலைப் போலியாகும் (வீரசோ.128). இவ்விலக்கணம் தெளிவுற அமையவில்லை என்பது வெளிப்படை. எனினும் இவற்றை நோக்கும் பொழுது சவலை என்பது எவ்வகைப் பாக்களுக்கும் கொள்ளப்படும் என்பது புலனாகின்றது.

இச்சவலை யாப்பை வெண்பாவிற் குரியதாகவே பின்வந்த இலக்கண நூல்கள் காட்டுகின்றன. இலக்கணச் சூடாமணியும் தொன்னூல் விளக்கமும் இதனை வெண்பாவின் வகையாகும் எனக் கூறுகின்றன.

> "குறள்சிந் தின்னிசை நேரிசை சவலை
> பஃறொடை யெனவெண் பாவா றவற்றுள்
> ஈரடி குறளே இருகுறள் சவலை
> .............................." (தொன். வி. 222)

என்று கூறுகின்றது தொன்னூல் விளக்கம்.

> "சிந்தியல் வெண்பாச் சிறப்புமொரு மூவடியாம்
> நந்தலிலா இன்னிசையும் நான்கடியாம் - சந்தப்
> பலவடியாம் பஃறொடையும் பண்பிவிது குன்றி
> மெலிவுபெறு மேல்சவலை யாம்" (இலக்.சூ.18)

என்று இலக்கணச் சூடாமணி இதனை வெண்பா வகையுள் அடக்கிக் கூறுகின்றது.

காரி இரத்தினக் கவிராயரால் இயற்றப்பெற்ற மாறன் பாப்பாவினம் என்னும் நூல் 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இதனுள் பாவும் பாவினங்களும் அமைய நூலும் உரையுமாக இந்நூல் விளங்குகிறது.

"நாராயணனே நமவென் றுரைப்பவர்பால்
வாரா தொருநாளும் வல்வினைதான்
சாரா னொருதலையாய்த் தண்டதரன் சாராவாம்
பேராத மாயப் பிறப்பு" (மா. பா. 28)

என்ற செய்யுளைக் காட்டி இது சவலை வெண்பாட்டு என்று குறிப்பிடுகிறது. இப் பாவகையினை இந்நூல் வெண்பாவில் அடக்கியுள்ளது. அதன் குறிப்புரையில்,

"நனியிரு குறளால் நான்கடி யுடைத்தாய்த்
தனிவரல் இல்லது சவலைவெண் பாட்டே"

என இக்காலத்துள்ளோர் பெயரிட்டு வழங்கும் வேறுபாடென வுணர்க" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனுள் அமைந்த இந்நூற்பா எந்த யாப்பிலக்கண நூலைச் சேர்ந்தது என்பதை அறியவியலவில்லை. 16ஆம் நூற்றாண்டளவில், சிறந்ததொரு யாப்பிலக்கண நூல் இருந்திருக்க வேண்டும் என்பது இதனால் புலனாகின்றது. இந்நூற்பாவையே சிறிது பாடவேறுபாடுகளோடு தொன்னூல் விளக்கவுரையில் காணமுடிகின்றது. அதனுள் அமைந்த நூற்பா,

"நனியிரு குறளாம் நான்கடி யுடைத்தாய்த்
தனிநிலை யில்லது சவலைவெண் பாட்டே"
(தொன்.வி.222மேற்.)

என்பதாகும்.

தனித்து வருதல் இல்லாத இரண்டு குறள்வெண்பாக்கள் இணைந்து வருவது சவலைவெண்பாட்டு என்பது மாறன் பாப்பாவினத்தின் கருத்தாகும். இந்நூலுள் காட்டப்பெற்ற எடுத்துக்காட்டினுள் முதல் இரண்டடிகளைக் குறள் வெண்பாவாகக் கருதுவதற்கில்லை. ஏழு சீர்கள் பெற்று வந்துள்ளதேயன்றி அது குறள் வெண்பாவன்று. அடுத்து அமைந்த இரண்டடிகள் குறள் வெண்பாவாகும். எனவே சவலை வெண்பாவினுள் வருகின்ற குறள்வெண்பா தனித்து வரும் இயல்புடையதன்று என்பது பெறப்படும். மேலும், மேல் 'இரு குறளாய்' என்றுகூறித் 'தனிவரல் இல்லது' என ஒருமையிற் கூறியதால், ஒரு குறள்வெண்பா தனித்து வரும் இயல்புடையதன்று என்றும் கொள்ளலாம். சீர்நிலையில் இரு குறள் வெண்பாக்கள் இணைந்துவரும் என்ற தொடக்கநிலை இலக்கணத்தையே மாறன் பாப்பாவினம் கூறுகின்றது என்பது பெறப்படும். இரு குறள்கள்

இணைந்த நான்கடிகள் என்ற அளவில் சவலையின் இலக்கணத்தை இந் நூல் கூறுகின்றது.

குமரகுருபர சுவாமிகளால் இயற்றப்பெற்ற சிதம்பரச் செய்யுட்கோவை யாப்பிலக்கணத்திற்கேற்ப அமைந்த சான்றிலக்கியமாகும். இதனுள் யாப்பிலக்கணத்தின் அனைத்துக் கூறுகளுக்கும் இறைவன் புகழ்பாடும் செய்யுட்கள் காணப் பெறுகின்றன. சுவாமிகள் சவலை வெண்பாவைக் காட்ட வில்லை என்பதை அவர் தம் பிரபந்தத் திரட்டால் அறியலாம். இதனுள்,

"திருமுடியிற் கண்ணியும் மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு - பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்திற் கங்கணமும் பாம்பு" (4)

என்னும் செய்யுள் ஒரு விகற்பத்து இருகுறள் நேரிசை வெண்பா எனக் காட்டப்பெற்றுள்ளது. இதே வெண்பாவை முத்துவீரிய ஆசிரியர் 'பெருமான்' என்னும் தனிச்சொல்லை நீக்கிச் சவலை வெண்பாவிற்கு மேற்கோளாக எடுத்தாளுகின்றார். அவர் காட்டுவது,

"திருமுடியிற் கண்ணியும் மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்திற் கங்கணமும் பாம்பு" (முத்துவீ.908 மேற்.)

என்பதாகும். இவ்விரு எடுத்துக்காட்டுகளால் சிதம்பரச் செய்யுட் கோவைப் பாடல் இருநிலைகளில் பயிலப்பட்டு வந்துள்ளது என்பதை அறியலாம். முத்துவீரிய ஆசிரியரின் காலத்தில் (கி.பி.19 நூ.) இப்பாடல் சவலை வெண்பாவாகக் கருதப்பட்டிருந்தது. இவ்வாறு இவர் கொள்ளுதற்குக் காரணம் இருகுறள்கள் இணைந்து சவலையாகும் என்று கொண்டதேயாகும். அவ்வாறு இணைகின்ற இருகுறள்கள் ஒருவிகற்பமுடையனவாக அமைய வேண்டும். இதனையே,

"இருகுறள் சவலை ஒருவிகற் பாகும்" (முத்துவீ.908)

என்று இலக்கணம் கூறுகின்றார் முத்துவீரிய ஆசிரியர். எனவே இவரது கருத்துப்படி இருகுறள்வெண்பாக்கள் ஒருவிகற்பம் தருவதாக இணைவது சவலை வெண்பாவின் இலக்கணமாகும்.

இருகுறள்கள் இணைகின்றன என்று கூறும்பொழுது 'தனிச் சொல்' வருதல் இல்லை என்பது கூற வேண்டாதாகின்றது.

முத்துவீரிய ஆசிரியர் கொண்ட இந்நூற்பாவை இவருக்கு முன்னிருந்த வீரமாமுனிவர் (18 நூ.) தம் தொன்னூல் விளக்கவுரையில் குறிப்பட்டுள்ளார். முன்னோர் நூற்களில் அமைந்த நூற்பாக்களை அவ்வண்ணமே எடுத்தாளுகின்ற இயல்புகொண்ட முத்துவீர உபாத்தியாயர் வீரமாமுனிவரின் மேற்கோளையும் எடுத்தாண்டுள்ளார் என்று கொள்ள வேண்டியுள்ளது.

"இருகுறள் சவலை ஒருவிகற் பாகும்" (தொன்.வி.222மேற்.)

என்ற நூற்பாவை மேற்கோள் காட்டி இதனை இலக்கணத் திரட்டு என்று குறிக்கின்றார் முனிவர். 'இக்காலத்துள்ளார்' என்று மாறன் பாப்பாவினத்தின் உரையாசிரியர் குறிப்பிட்டதுபோல் இவரும் குறிப்பிடுகின்றார். இவ் விலக்கணத்திரட்டு என்பது தொகுப்பு நூலாகவோ முன்னைய இலக்கணங்களின் பிழிவாக அமைந்த புதுநூலாகவோ இருக்கக்கூடும். எவ்வாறிருப்பினும் 'இலக்கணத் திரட்டு' என்னும் ஓர் இலக்கணநூல் இருந்திருக்க வேண்டும் என்பதும், அந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை யென்பதும் வெளிப்படை.

சவலை வெண்பாவை முனிவர் வெண்பாவின் வகையுள் அடக்கி வெண்பா அறுவகைப்படும் என்று கூறுகின்றார்.

"இருகுறள் ஒருவிகற்பத்தான் வருவது சவலை யெனப்படும்" என்று வருவித்து அவர் உரை வரைகின்றார். முனிவர் தரும் மேற்கோள் நூற்பா பாப்பாவின உரையாசிரியர் காட்டிய மேற்கோள் நூற்பாவை ஒத்திருக்கிறது. அதனுள் அமைந்த 'தனிவரல்' என்பது 'தனிநிலை' என வேறுபட்டுள்ளதைக் காணலாம். தனிநிலை என்பதற்குத் தனித்து நிற்றல் என்றும், தனிச்சொல் என்றும் இருபொருள்கள் கூறலாம். 'தனிச்சொல்எனினும் விட்டிசை எனினும் கூன் எனினும் ஒரு சொல்லாய்ப் பொருள் நிரம்பித் தனியே நிற்பது' (யாப். 82) எனத் தனிநிலை என்பது தனிச்சொல் என்னும் பொருள் பயந்து நிற்பதைக் காணலாம். எனவே தனித்து நிற்றல் இல்லாமல் இருகுறள் வெண்பாக்கள் இணைந்து வருவதும், சவலைவெண்பாவின் இலக்கணம் என்பது இதனால் பெறப்படும். இவர்தம் கருத்தையே பின்வந்தோரும் எடுத்து மொழியலாயினர்.

தண்டபாணி சுவாமிகள் (1839-1898) தம் அறுவகை யிலக்கணத்துள் சவலை வெண்பாவின் இலக்கணத்தைக்

"குறள்வெண் பாஇரண் டணைவது சவலை
வெண்பா ஆமென விளம்பினர் சிலரே" (அறுவகை. யாப். 18)

"சவலைவெண் பாவின்முற் பகுதியின் ஈற்றில்அவ்
எதுகைத் தனிச்சொலொன் றிசைவுறில் நேரிசை
வெண்பா வாமென நிகழ்த்திடல் மிகையே"
(அறுவகை. யாப். 19)

என்ற இருநூற்பாக்களில் கூறுகின்றார். குறள் வெண்பா இரண்டணைவது என்றதால் அஃது ஒருவிகற்பத்தானும் இருவிகற்பத்தானும் இணைவது என்று கொள்ளலாம். அக் குறள் வெண்பாக்கள் தனித்துநிற்கும் ஆற்றல் (இலக்கண அமைதி) கொண்டவை என்பது தெளிவாகின்றது. இரண்டாவது நூற்பாவின் கருத்துப்படி தனிச்சொல் இல்லாமல் இணைவது என்பதும் விளங்கும். எனவே இரு குறள்வெண்பாக்கள் தனிச்சொல் இன்றி இணைந்து நிற்பது சவலை வெண்பாவாகும் என்பது தண்டபாணி சுவாமிகள் கருத்தாகின்றது.

இவர்களின் கருத்துகளை நோக்குகின்ற பொழுது இருகுறள் இணைந்து வருவதும் நேரிசை வெண்பாவின் சிதைவுமே சவலை வெண்பாவாகும் என்பது தெளிவாகின்றது. ஆனால் இலக்கணச் சூடாமணி மேற்குறிப்பிடப்பெற்ற நூல்களின் கருத்துகளினின்றும் வேறாக நின்று சவலை வெண்பாவின் இலக்கணத்தைக் கூறுகின்றது (இலக்.சூ.18).

இந்நூற்பாவிற்கு அமைந்த உரை இக்கருத்தை நன்கு தெளிவுபடுத்துவதாக உள்ளது.

"பண்பிலிது குன்றி மெலிவு பெறுமேல் சவலையாம்" என்பது இவ்வைந்து வகை வெண்பாக்களுள் எழுத்து அசை சீர் குறைந்தும் எதுகையின்றியும் தொடை வேறுபட்டும் வருவது சவலை வெண்பாவாம் என்றவாறு. அது வருமாறு:

'அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்

ALAGAPPA UNIVERSITY, KARAIKUDI
CENTRAL LIBRARY,
Accession No. 16308
Date of purchase:
Call Number: 4 4 9 . 8045N

ரு ம ரு

கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்'

இது தனிச்சொல் இன்றி நான்கடியான் வந்த சவலை வெண்பா.

'பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூறா யிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா நின்
சேவடி செவ்விதிருக் காப்பு''

(பெரியாழ்வார் திருமொழி காப்பு)

இது தனிச்சொல் இன்றி ஓரசை வேறுபட்டு இரண்டு விகற்பத்தால் வந்த சவலை வெண்பா. மற்றும் வந்தவழிக் கண்டு கொள்க"

மேற்கண்ட உரையின் மூலம் சவலை வெண்பா பற்றிய பல கருத்துகள் வெளிப்படுகின்றன.

முன்பு கூறப்பட்டது இருகுறள் வெண்பாக்களின் சேர்க்கையும் நேரிசை வெண்பாவின் சிதைவும் சவலை வெண்பாவாகும் என்பதாகும். ஆனால் இதனுள் இவ்வைவகை வெண்பாக்களும் எழுத்து அசை சீர் குறைந்து வந்தாலும், எதுகையின்றி வந்தாலும் தொடையமைப்பு வேறுபட்டு வந்தாலும் அவை சவலை வெண்பா எனப்படும் என்று கூறப்பட்டுள்ளது. ஐந்து பாக்களும் இலக்கணச் சிதைவால் சவலையாகக் கொள்ளப்படும் என்பதே இதன்பொருளாகும். எனவே இவற்றை முறையே குறள் சவலை வெண்பா, நேரிசைச் சவலை வெண்பா, சிந்தியல் ச்வலை வெண்பா, இன்னிசைச் சவலை வெண்பா, பஃறொடைச் சவலை வெண்பா எனக்கொள்ளல் வேண்டும். இவ்வாறு பரந்த நோக்கில் கொள்வது யாப்பிலக்கண வழுவிற்கு அமைதி காணும்பொருட்டேயாகும். ஏனைய இலக்கண நூல்கள் இவ்வாறு கூறவில்லை என்பது நோக்கத்தக்கதாகும்.

ஆயினும் இவ்வைவகைச் சவலை வெண்பாக்களுக்கும் இந்நூலுள் எடுத்துக்காட்டு கூறப்படவில்லை. தனிச் சொல்லின்றிச் சவலை வெண்பா வரும் என்பதற்கு எடுத்துக் காட்டு கூறப்பெற்றுள்ளது. ஒருவிகற்பத்தான் சவலை வெண்பா வரும் நிலை இந்நூலுள் நெகிழ்ந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது. மாறன் பாப்பாவினத்தில் காட்டப்பெற்ற மேற்கோளும் பின் வந்த இலக்கண நூல்களில் காட்டப்பெற்ற மேற்கோளும் ஒருவிகற்பச் சவலை வெண்பாவையே

சுட்டுகின்றன. இந்நெறியை வலியுறுத்தவே பின்வந்த முத்து வீரியமும் 'இருகுறள் சவலை ஒருவிகற்பாகும்' என மொழிந்தது. ஆனால் இருவிகற்பத்தானும் இவ்வகை வருதல் உண்டு என்பதை இந்நூல் சுட்டுகின்றது.

இலக்கணச் சூடாமணி 'பல்லாண்டு' என்னும் பெரியாழ்வார் திருமொழியைச் சவலை வெண்பா எனச் சுட்டுகிறது. ஆனால் இச்செய்யுள் அந்நூலுள் குறள்வெண் செந்துறையாகக் குறிக்கப்பட்டுள்ளது.

இவ்வுரையாசிரியர் இதனைச் சவலை வெண்பாவாகக் காட்டியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

யாப்பின் வளர்ச்சி நிலைகளுக்கேற்ப யாப்புச் சிதைவென்று பாக்களை ஒதுக்கவியலாது வழுவமைதி தேடும் வகையிற் சவலை வெண்பாவின் இலக்கணத்தையும் வகையையும் இலக்கணச் சூடாமணி கூறியுள்ளது.

### பாவினவியல்

யாப்பிலக்கண நூல்கள் பாவினத்தின் இலக்கணத்தை அந்தந்தப் பாவின் இறுதியில் கூறியுள்ளன. தொன்னூல் விளக்கம் மட்டும் பாக்களின் இலக்கணங்களை முழுமையும் நிரலே கூறிப் பின் பாவினங்களின் இலக்கணங்களைத் தனித்துத் துறை, தாழிசை, விருத்தம் என்ற அடிப்படையில் பாவின் முறை வைப்பிற்கேற்பக் கூறிச் செல்கின்றது. ஆனால் இலக்கணச் சூடாமணி பாவினத்திற்கென்றே தனித்த இயலை அமைத்து இலக்கணம் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இம்முறையில் வேறெந்த இலக்கண நூலும் அமையவில்லை. மேலும் முடுகு விருத்தம், காப்பியக் கலித்துறை, திலதக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா போன்ற யாப்புகளுக்கும் இதனுள் இலக்கணம் கூறப்பட்டுள்ளமை இதன் சிறப்பைக் கூட்டுவதாகும்.

### பிரபந்தவியல்

பாட்டியல் நூல்கள் பாட்டியல் இலக்கணத்துள் யாப்பிலக் கணத்தைக் கூறியுள்ளமை போன்று இந்நூல் யாப்பிலக்கணத்துள் பிரபந்தவிலக்கணத்தைக் கூறுகின்றது. பிரபந்தவியல் என்னும் நான்காம் இயலுள் உலா, மடல், தூது, பரணி, பிள்ளைத்தமிழ், வண்ணம், சிந்து முதலானவற்றிற்கு இலக்கணம்

கூறப்படுகின்றது. தொன்னூல் விளக்கம் செய்யுள் மரபியல் என்னும் இயலுள் பிரபந்த விலக்கணத்தைக் கூறியுள்ளது.

### வண்ணம்

இந்நூலுள் வண்ணத்திற்குத் தெளிவான இலக்கணம் கூறப்பட்டுள்ளது. வண்ணத்தின் இலக்கணத்தைப் பிறநூல்கள் கூறாத நிலையில் இந்நூல் கூறியுள்ளமை போற்றத் தக்கதாயுள்ளது. இந்நூற்றாண்டின் முற்பகுதியில் மறைந்த வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் வண்ணத்திற்குரிய விரிவான இலக்கணத்தை 'வண்ணத்தியல்பு' என்னும் நூலில் கூறியுள்ளார். இந்நூலுள்,

> "எட்டுக் கலையாய் இடையிட் டெதுகையாய்க்
> கட்டுக் கலைக்குமுக் கண்ணியாய்த்-திட்டத்தில்
> தொங்கலும் எட்டாய்த் தொடைமூன்று நான்காறாய்ப்
> பங்குபெறும் வண்ணப் பரப்பு" (இலக். சூ. 44)

என்னும் நூற்பா வண்ணத்தின் இலக்கணம் கூறுவதாக அமைகின்றது. இந்நூலாசிரியர் வண்ணம் என்பதைப் பிரபந்த வகையாகக் கொண்டுள்ளார்.

### பரணி

இதைப்போன்றே பரணிக்கும் சிந்திற்கும் உரிய இலக்கணங்களும் வரையறுத்தாற்போல் கூறப்பட்டுள்ளன. பரணி என்னும் பிரபந்தம் பாடுதற்குரிய யாப்பு வகையைக் கூறுவதில் ஏனைய இலக்கண நூல்களைவிட வரையறுத்துக் கூறுகின்ற தன்மையை இதனுள் காணமுடிகின்றது.

> "மூவசைச் சீரின் முறைபிறழா தெய்தியும்
> மேவியதோர் நாற்சீரின் மேற்பட்டும்-பாவினத்தின்
> ஈரடித் தாழிசையாய் எய்துமின் சந்தமுடன்
> ஓரடிபோல் ஈரடியும் ஒத்து" (இலக். சூ. 42)

இவ்வெண்பாவில் கூறப்பட்ட இலக்கணத்தினும் இதன் உரையுள் கூறப்பட்ட செய்திகள் இவ்விலக்கணத்தைத் தெளிவுபடுத்தும் நோக்கில் அமைந்துள்ளன. "ஈரசைச் சீரானும் மூவசைச் சீரானும் நாற்சீரடி முதலாக எண்சீரடி ஈறாக உயிர்த்தொடைச் சொல் அடுத்தும் இன்சந்தமுடன் கூடியும் இரண்டடித்தாழிசை என்று

ஸ்ரீ அ

"

பெயரிட்டு வழங்கப்படும் என்பது அவ்வுரை. "கொச்சகத்து ஈரடி' என்று பன்னிரு பாட்டியலும், 'நேரடி ஆதியா நீண்ட கலித்தாழிசை' என்று வெண்பாப் பாட்டியலும் கூற இந்நூல் 'ஈரடித் தாழிசை' என்று வரையறுத்துக் கூறுவது சிறப்புடையதாகும். பரணிக்குரிய இனிய ஓசையைக் குறிக்குமளவில் 'இன்சந்தமுடன்' என்று குறிப்பிட்டிருப்பது இந்நூலில் அமைந்த இலக்கணத் தெளிவைக் காட்டுகின்றது. மேலும் நாற்சீரின் மேற்பட்ட சீர்களால் பரணி யாப்பிற்குரிய அடிகள் வரும் என்று பிற இலக்கண நூல்கள் கூறவும் எண்சீரடி எல்லையென இவ்வுரையாசிரியர் வரையறுத்துக் கூறியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### பாவின் முறைவைப்பும் ஒரு காரிகையும்

பாவின் இனம் கூறும் இலக்கண நூல்கள் அனைத்தும் ஒருநிலையில் நின்று கூறவில்லை. தாழிசை, துறை, விருத்தம் என்னும் முறைவைப்பை ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு முறையில் கூறியுள்ளன.

பரந்து விரிந்து சென்ற யாப்புப் பரப்பை வரையறைப் படுத்துவதில் இலக்கண ஆசிரியர்கள் சிலர் முயன்றனர். தொல்காப்பியருக்குப் பின்வந்த காக்கைபாடினியார், சிறுகாக்கைபாடினியார், அவிநயனார், மயேச்சுரர் போன்றோர் பாவினங்களை வகைப்படுத்தியுள்ளனர்.

> "வெண்பா விருத்தம் துறையொடு தாழிசை
> என்றிம் முறையின் எண்ணிய மும்மையும்
> தத்தம் பெயரால் தழுவும் பெயரே"

என்று காக்கைபாடினியாரும்,

> "பாவே தாழிசை துறையே விருத்தமென
> நால்வகைப் பாவும் நானான் காகும்"

என்று சிறுகாக்கைபாடினியாரும்,

> "வெண்பாத் தாழிசை வெண்டுறை விருத்தமென்
> றிந்நான் கல்ல முந்நான் கென்ப"

என்று அவிநயனாரும்,

"ஒத்தா ழிசைதுறை விருத்தம் எனப்பெயர்
வைத்தார் பாவினம் என்ன வகுத்தே"

என்று மயேச்சுரரும் பாவின் இனங்களாகத் தாழிசை, துறை, விருத்தம் என்பனவற்றைக் கூறியுள்ளனர் (யாப்.வி.ப. 221). இவர்களைப் பின்பற்றியே யாப்பருங்கலம் முதலாகப் பின்வந்த இலக்கண நூல்களும் பாவின் இனங்களைக் குறிக்கின்றன. இவர்களனைவரும் பாவினங்களைக் குறிப்பதில் தமக்கெனத் தனி நெறியைப் பின்பற்றியுள்ளனர். மேற்கூறப்பெற்ற நால்வருள்ளும் இருவகை நெறிகள் நிலவுவதைக் காணலாம்.

தாழிசை துறைவிருத்தம் -சிறுகாக்கை பாடினார்
மயேச்சுரர்
அவிநயனார்

விருத்தம், துறை, தாழிசை-காக்கை பாடினியார் இம்முறைவைப்புப் பிறழ்ச்சி பின்வந்தோரிடமும் காணப் படுகின்றது.

காக்கை பாடினியார் முதலோர் கூறிய முறைவைப்பைக் கருத்தில் கொண்ட யாப்பருங்கல ஆசிரியர் தனக்கெனத் தனி முறைவைப்பைக் கொண்டார்.

"தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாவினம் பாவொடு பாற்பட் டியலும்"

என்பது யாப்பருங்கலமாகும் (56). இம் முறைவைப்பு காக்கை பாடினியார் கொண்டதினின்றும் மாறுபட்டிருப்பதை அறிந்த விருத்தியுரையாசிரியர் அது குற்றமாகிவிடுமோ என்று கருதிப்,

"பாவினங்களை விருத்தம் துறை தாழிசை என்று காக்கை பாடினியார் வைத்த முறையானே வையாது தாழிசை துறை விருத்தம் என்று தமது மதம் படுத்து முறை பிறழச் சொன்னாரல்லர் இந்நூலுடையார்; சிறுகாக்கை பாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் வைத்த முறைபற்றிச் சொன்னாராகலின் குற்றம் இல்லை என்று உணர்க"
(யாப். வி. ப. 222)

எனக் கூறுகிறார். இத்தகு இலக்கணநெறி பின்வந்தோரால் எவ்வாறு மேற்கொள்ளப் பெற்றுள்ள தென்பதைக் காண்பது இன்றியமையாததாகும்.

அ. வீரசோழியம்:- ஐந்திலக்கணம் கூறவந்த இந்நூலில் பாவின முறைவைப்பு விந்தைக்குரியதாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாவிற்கும் ஒவ்வொரு வகையான முறைவைப்பு இதனுள் கூறப்பட்டுள்ளது. வெண்பாவின் இனங்களை விருத்தம் தாழிசை துறை (வீரசோ. 119) என்றும், ஆசிரியப்பாவின் இனங்களைத் தாழிசை துறை விருத்தம் (வீரசோ. 120) என்றும், கலிப்பாவின் இனங்களைத் தாழிசை விருத்தம் துறை (வீரசோ. 121) என்றும், வஞ்சிப்பாவின் இனங்களைத் துறை விருத்தம் தாழிசை (வீரசோ. 123) என்றும் முறைவைப்பை வீரசோழியம் கூறியுள்ளது.

ஆ. யாப்பருங்கலக்காரிகை:- இந்நூல் தன் முதனூலி னின்றும் (யாப்பருங்கலம்) சிறிது வேறுபட்டே பாவினங்களை வகைப்படுத்துகின்றது. வெணபா நீங்கலாக ஏனைய பாக்களுக்குத் தாழிசை, துறை, விருத்தம் என்னும் பகுப்பைக் கொண்டுள்ளது. வெண்பாவிற்கு மட்டும் விருத்தம், தாழிசை, துறை என்ற பகுப்பைக் கொண்டிருக்கிறது.

இ. சிதம்பரச் செய்யுட்கோவை: சான்றிலக்கியமாகிய இந் நூல் தாழிசை துறை விருத்தம் என்ற முறையிலேயே பாவினம் கூறுகின்றது (34, 35-38, 39, 46-51, 52-56, 69-71, 72-74, 75, 78-80).

ஈ. பாப்பாவினம்: காரி இரத்தினக் கவிராயரால் தொகுக்கப் பெற்றுக் குறிப்புரை எழுதப்பெற்ற இந்நூல் யாப்பருங்கலக்காரிகையை அடியொற்றிப் பாவினம் கூறியுள்ளது. வெண்பாவின் இனத்தை விருத்தம் தாழிசை துறை என்றே அமைத்துள்ளது.

உ. இலக்கண விளக்கம்: நால்வகைப் பாவிற்கும் தாழிசை துறை விருத்தம் என்ற முறையில் இனங்களை இந்நூல் கூறுகின்றது (731, 735, 739, 741).

ஊ. சுவாமிநாதம்: இந்நூல் தாழிசை துறை விருத்தம் எனும் முறையில் பாவினத்தை வகுத்துரைக்கிறது (157, 158, 160).

எ. தொன்னூல் விளக்கம்: வீரமாமுனிவரால் யாக்கப் பெற்ற இந்நூல் இதற்கு முன்னெழுந்த இலக்கண நூல்களி னின்றும் மாறுபட்டுரைக்கின்றது. இது துறை தாழிசை, விருத்தம் எனத் துறைக்கு முதன்மை கொடுத்து இவ்வமைப்பைச் சுட்டு கின்றது. இதனை,

"வெண்பா அகவல் விரிகலி வஞ்சி
மருட்பா எனஐ வகைப்பா அன்றியும்
துறை தாழிசை விருத்தம் தூக்கியல் மூன்றே"

(தொன்.வி. 219)

என்ற நூற்பாவால் அறியலாம்.

ஏ. முத்துவீரியம்: 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகிய இந்நூல் தாழிசை துறை விருத்தம் என்ற அமைப்பை மேற்கொண்டுள்ளது. (முத்துவீ. 919, 920, 921, 927, 928, 929, 947, 950, 958, 959, 960).

ஐ. பல்சந்தப் பரிமளம்: பாம்பன் சுவாமிகள் இயற்றியருளிய திருவலங்கற்றிரட்டில் அமைந்த இப்பகுதியில் பாவின் இனங்கள் தாழிசை துறை விருத்தம் என்ற அமைப்பிலேயே தரப்பட்டுள்ளது.

ஒ. யாப்பிலக்கணம்: இந்நூல் தாழிசை துறை விருத்தம் என்ற முறைவைப்பைப் பின்பற்றியுள்ளது.

ஓ. யாப்பதிகாரம்: யாப்பிலக்கணத்தைப் போலவே இந்நூலும் அவ்வமைப்பையே மேற்கொண்டுள்ளது. (பக். 63, 86-90, 93, 94). ஆனால் ஆசிரியப்பாவிற்கு இனமாக விருத்தத்தை மட்டுமே சுட்டுகின்றது (ப. 77, 78).

யாப்பருங்கல நெறியைப் பெரும்பான்மையும் பின்பற்றிச் செல்லும் காரிகை ஏனைய மூன்று பாக்களுக்கும் தாழிசை துறை விருத்தம் எனப் பாவினம் கூறி வெண்பாவிற்கு மட்டும் விருத்தம் தாழிசை துறை என்று பாவினம் கூறுகின்றது. இக்காரிகை முன்பே காட்டப்பெற்றுள்ளது. இதன் அமைப்புமுறை சிந்தித்தற் குரியதாக உள்ளது. யாப்பருங்கலத்தில் வெண்பாவிற்கு இனம் தாழிசை (66), துறை (67), விருத்தம் (68) என்றே கூறப்பட்டுள்ளது.

இலக்கணச் சூடாமணி பாவுக்குரிய இனங்களைத் தாழிசை துறை விருத்தம் என்ற முறைவைப்பிலேயே கூறிச்செல்கின்றது. இதனுள் வெண்பாவின் இனஞ் சுட்டும் நூற்பாக் கருத்திற்கு மேற்கோளாக ஒரு காரிகை இடம் பெற்றுள்ளது.

"மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும் தாழிசை மூன்றிழிபேழ்
ஆன்றடி தாம்சில அந்தத் தடிகள் அவைகுறைந்து
தோன்றும் துறைவெள்ளை தள்ளா விருத்தம் தனிச்சொல்வந்து
மூன்றடி யானும் முடியும் முடிவொரு நான்கினுமே"

(இலக். சூ. 32 மேற்.)

இக்காரிகையை உற்று நோக்கினால் ஓர் உண்மை புலனாகும். யாப்பருங்கலக்காரிகையில் கூறப்பட்ட

"மூன்றடி யானும் முடிந்தடி தோறும் முடிவிடத்துத்
தான்றனிச் சொற்பெறும் தண்டா விருத்தம்வெண் தாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும் மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாம்சில அந்தம் குறைந்திடும் வெண்டுறையே"

(யாப். கா. 27)

என்ற காரிகையை மாற்றியமைத்ததுபோல் இலக்கணச் சூடாமணியின் அம்மேற்கோள்பாடல் அமைந்துள்ளதைக் காணலாம். பாவின் இனம் தாழிசை துறை விருத்தம் என்ற நெறிக்கேற்ப அக்காரிகை மாறியுள்ளதை உணரலாம். யாப்பருங்கலக்காரிகையின் அச்செய்யுள் இனஞ்சுட்டும் நெறிக்கு மாறாக அமைந்துள்ளது என்று கொண்டால் இலக்கணச் சூடாமணியின் மேற்கொள் பாடல் முறையாக அமைந்திருக்கிறது என்று கொள்ளவேண்டும். ஒருகால் இலக்கணச் சூடாமணி உரையாசிரியருக்குக் கிடைத்த அப்பாடல் அத்தகு முறையில் அமைந்ததாக இருக்கலாம்.

இவ்வாறு பல்வேறு அரிய செய்திகளைத் தாங்கியுள்ள இந்நூல் அனைவராலும் பயிலப்பெற வேண்டியது. அறிஞர் உலகத்தால் ஏற்றுக்கொள்ளப் பெறவேண்டியது. ஆய்வு செய்யத்தக்கது. காரிகைக்குப் பிறகு அதனைப் போன்ற சிறந்ததொரு இலக்கண நூலாகக் காணப்படும் இந்நூல் எளிய நூலாகவும் இலங்குகிறது.

## சுவடி விவரம்

இத்தகு அரிய நூலைப் பதிப்பித்தற்குத் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியோடு மேலும் இரண்டு சுவடிகள் துணைபுரிந்தன. அவ்விரண்டு சுவடிகளுள் ஒன்று சென்னை டாக்டர் உ.வே.சா. நூலகத்திலும் பிறிதொன்று பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி நூலகத்திலும் உள்ளன. இச்சுவடிகளின் விவரங்களை அறிந்து கொள்ளுதல் பதிப்பு நோக்கிற்கு ஏற்றதாகும்

## தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடி

தமிழ் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையில் உள்ள இச்சுவடி (சுவடியெண் 1452) 108 ஏடுகளைக் கொண்டது. பக்கத்திற்கு ஆறு வரிகளாகத் தெளிவான கையெழுத்தில் அமைந்துள்ளது. 15" நீளமும் 1" அகலமும் கொண்டது. முதல் நாற்பது ஏடுகள் வலப்பக்கத்திலும் ஒன்பது ஏடுகள் இடப்பக்கத்திலும் சிதைந்துள்ளன. இச்சுவடி கே. எஸ். நாகராசன், சின்னமனூர் என்பவரிடமிருந்து அன்பளிப்பாகப் பெறப் பட்டதாகும். நூல் குறையின்றி முழுமையாக உள்ளது. வலப்பக்கம் சிதைந்திருந்த ஏடுகளில் உள்ள செய்திகள் பேரூர்ச் சுவடியைக் கொண்டு நிரப்பப்பட்டுள்ளன. இச்சுவடி மூலமும் உரையுமாக அமைந்துள்ளது.

சுவடியில் ர, ற; ல, ள, ழ வேறுபாடுகள் போற்றப்பெறவில்லை. சுவடி புள்ளியிட்டெழுதப் பெறாமல் பிழைகளோடு காணப் படுகின்றது. சுவடியின் தொடக்கத்தில்.

"திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்"

என்ற விருத்தாசலப் புராணக் கடவுள் வாழ்த்துப் பாடலும்

"தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே"

என்ற கலைமகள் வாழ்த்துப் பாடலும் காணப்படுகின்றன. இவ்விரு பாடல்களும் இந்நூலில் நூலின் முதற்கண் கொடுக்கப் பட்டுள்ளன.

இயல் பாகுபாடுகள் சுவடியின் இடப்பகுதியில் தரப்பட்டுள்ளன. எட்டெண்ணோடு நூற்பாக்களின் முதற்சீரும் குறிக்கப்பட்டுள்ளன. பாவியல் முடிந்தவுடன் 'பாவியல் முற்றும்' என்று குறிக்கப்பட்டுள்ளதேயன்றி அதற்கடுத்தவியலான 'பாவினவியல்' தொடக்கம் இச்சுவடியுள் சுட்டப்பெறவில்லை. பாவினவியல் முடிவிலும் 'நான்கு இனமும் முற்றும்' என்று குறிக்கப்பட்டுள்ளதேயன்றிப் 'பாவினவியல் முற்றும்' என்று சுட்டப்பெறாமல் அதற்கடுத்த வியலான 'பிரபந்தவியல்' தொடக்கம் மட்டும் சுட்டப்பட்டுள்ளது இவ்விடையீடு பதிப்பிற்குச் சிறு சிக்கலை ஏற்படுத்தினாலும் பிற ஏடுகளின் துணையால் இவ்வேட்டில் 'பாவினவியல்' என்ற தொடர் விடுபட்டிருந்தமை அறியப்பெற்றது.

மூலமும் உரையும் நிறைவுற்றவுடன் நூற்பயன் கூறும் காரிகை ஒன்று இடம்பெற்றுள்ளது. சுவடியில் அமைந்த பிற்குறிப்பிற்குப் பின் 'இலக்கணச் சூடாமணி முற்றும்' என்ற குறிப்போடு சுவடி நிறைவு பெற்றுள்ளது. மூலமும் உரையுமாக இருப்பினும் சுவடியின் தொடக்கத்திலும் முடிவிலும், 'இலக்கணச் சூடாமணி' என்றுமட்டும் குறிக்கப் பெறுவதால் யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக்காரிகை போன்று உரையோடு இந்நூல் பயிற்றுவிக்கப்பட்டிருக்கும் என்று கருத இடமுண்டு.

டாக்டர் உ. வே. சா. நூலகச்சுவடி

இச்சுவடி மூலம் மட்டும் கொண்டதாகும். 12 1/2" நீளமும் 1 1/4" அகலமும் கொண்ட இச்சுவடியில் (சுவடியெண் 2179) பக்கத்திற்கு 7 வரிகள் எழுதப்பட்டுள்ளன. மிகச் சிதைந்த நிலையில் இச்சுவடி காணப்படுகின்றது. தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியில் உள்ள 'திருவும் கல்வியும்', 'தவளத்தாமரை' என்னும் இரு தொடக்கச் செய்யுட்களும் இச்சுவடியில் இல்லை.

இச்சுவடியில் 'மலைமாது போற்ற' என்னும் நூற்பாயிரச் செய்யுளையும் சேர்த்து 59 வெண்பாக்கள் உள்ளன. தமிழ்ப்

பல்கலைக்கழகச் சுவடியைவிட மிகுதியாகக் காணப்பெறும் அவ் வெண்பா.

> இயற்றளையும் வெண்டளையும் எய்துவது வெண்பா
> அயற்றளைமற் றெல்லாம் அடையும்-கயற்கண்ணாய்
> வஞ்சித் தளைமருவா மற்றதில் முற்றேற்றே
> எஞ்சிக் கிடக்கும் இனம்"

என்பதாகும். இவ்வெண்பா இச்சுவடியில் 53 என்று எண்ணிடப் பட்டுள்ளது. இதனைப் பேரூர்ச்சுவடியிலும் காணமுடியவில்லை. இலக்கணச் சூடாமணி உரையாசிரியரும் தம் உரையுள் குறிப்பிடவில்லை. இவ்வெண்பா தளைமயக்கம் கூறுவதாகும். இதற்குரிய பொருளை இலக்கணச் சூடாமணி உரையாசிரியர் இதற்கு முன்னமைந்த வெண்பாவின் உரையிலே கூறியுள்ளார். பேரூர்ச் சுவடியிலும் இவ்வெண்பா இல்லை. இதற்குரிய உரையும் இல்லை. உரையோடு கூடிய இரு உரைகளிலும் இவ்வெண்பா இல்லையாதலால் இப்பதிப்பில் சேர்க்கப்பெறவில்லை.

இச்சுவடியில் பிற்குறிப்பு இல்லை. 'இஃதிலக்கணச் சூடாமணி முதனிமைப்பு' என்று தொடங்கி நான்கு எண்சீர் விருத்தங்கள் அந்தாதி அமைப்பில் காணப்படுகின்றன. இந்நான்கும் 58 வெண்பாக்களின் முதற்சீரை எடுத்துக் காட்டி அழகுற அமைந்துள்ளன. இச்சுவடியில் மட்டுமே இவை காணப் படுகின்றன. இந்நூலைப் பயில்வார்க்கு ஆய்வுத்துணை யாகவிருக்கும் என்று கருதி இவை நூற்பா எண்ணிடப்பட்டு நூலின் இறுதியில் தரப்பெற்றுள்ளன. நூற்பாவை மட்டும் ஒப்புநோக்கிய அளவில் இச்சுவடியைப் பயன்படுத்த முடிந்தது.

பேரூர்த் தமிழ்க்கல்லூரிச்சுவடி.

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி நூலகத்தில் இரண்டு சுவடிகள் உள்ளன. இவ்விரண்டுமே இலக்கணச் சூடாமணியின் மூலமும் உரையுமாக அமைந்தவை. இரண்டனுள் ஒன்று மிகச்சிதைந்தும் பிறிதொன்று சுமாரான நிலையிலும் உள்ளன. எனவே சுமாரான நிலையில் இருந்த சுவடியே ஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்றது. தெய்வசிகாமணிக் கவுண்டரவர்களின் மூத்த மகனார் தன் தந்தை தொகுத்த இச்சுவடிகளையும் தமிழ்க் கல்லூரிக்குத் தந்துதவினார்.

67 ஏடுகள் கொண்ட இச்சுவடியில் பக்கத்திற்கு 7 முதல் 9 வரிகள் எழுதப்பெற்றுள்ளன. தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியைப் போன்றே தொடங்கப்பெற்றுச் சுவடி யெழுதப்பெற்றுள்ளது. இதனுள் காலக்குறிப்பு ஏதும் குறிக்கப்பெறவில்லை. 'இலக்கண சூடாமணி முற்றும் உறரிகோவிந்தாய நம. ஞானசிவமுர்த்தி பாதாரவிந்தமே கெதி. வேலுண்டு வினையில்லை' என்ற குறிப்புகளோடு நூல் முற்றுப்பெறுகின்றது. ஏட்டின் இறுதியில் 7 ஏடுகளில் அசை சீர் வாய்பாடுகள் யாப்பிலக்கணம் பயில்வார்க்கு ஏதுவாகக் கொடுக்கப்பட்டள்ளன.

## இரண்டிற்குமுள்ள ஒற்றுமை

தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியும் பேரூர்ச் சுவடியும் பல நிலைகளில் ஒத்துக் காணப்படுகின்றன. பல்கலைக்கழகச் சுவடியில் உள்ள பாடவேறுபாடுகள் அவ்வண்ணமே பேரூர்ச் சுவடியிலும் காணப்படும் தன்மை சுட்டத்தக்கதாக அமைகின்றது. இதுவன்றியும் பல்கலைக்கழகச் சுவடியில் காணப்பெறும் பிழைகளும் அச்சுவடியில் காணப்படுகின்றன. இயைபு என்பதை இரண்டும் இயல்பு என்றே சுட்டுகின்றன. நிரல் நிறை என்பதை நிரைநிரை என்றும், சவலைவெண்பா என்பதைப் பசலை வெண்பா என்றும், நேரிசை வெண்பா என்பதை நேரிசை வெண்பா என்றும் குறிப்பிட்டுள்ளன.

'புறத்தாழ் கருமென் குழற்றிருவே' (இலக். சூ. 15) என்பதனுள் கரு என்பது பல்கலைக்கழகச் சுவடியில் குரு என்று தவறாக எழுதப்பட்டுள்ளது. இதே தவறு பேரூர்ச் சுவடியிலும் உள்ளது.

நூற்பா 56-இன் உரையின் நிறைவிற்குப் பிறகு 'இனி ஒப்பென்பது' என்ற தொடர் பல்கலைக்கழகச் சுவடியில் மிகையாக உள்ளது. இம்மிகைத் தொடர் பேரூர்ச் சுவடியிலும் காணப்படுகின்றது.

49 ஆம் நூற்பாவுரையின் இறுதியில் 'பிரபந்தவியல் முற்றும்' என்று தவறாகக் குறிக்கப்பெற்ற தொடரைப் பேரூர்ச் சுவடியிலும் காணமுடிகின்றது.

'கருத்துரைத்துப் பேர்காட்டிக் காரியத்தை மூன்றாய்' (இலக். சூ. 46) என்பதில் 'காரியத்தை' என்பது காரியதை என

இருசுவடிகளிலும் எழுதப்பட்டுள்ளது. இதைப்போன்றே 'அருள் நண்ணு' (இலக். சூ. 33 உரை) என்பதன் இரண்டாமடி இரண்டிலும் தவறாகவே உள்ளது. 'தரவிரண்டு தாழிசையாறோர்' என்னும் உரை மேற்கோள் (இலக். சூ. 28) பல்கலைச் சுவடியில் தவறாக எழுதப்பட்டுள்ளமை போன்றே பேரூர்ச் சுவடியிலும் உள்ளது. 27ஆம் நூற்பாவுரையுள் உள்ள பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவின் தாழிசைகள் இரண்டு சுவடிகளிலும் இடம் மாறி அமைந்துள்ளன. குறிக்கத்தக்க பல பாடங்கள் இருசுவடிகளிலும் ஒன்றாகவே காணப்படுகின்றன. இவற்றை நோக்கும்பொழுது இவ்விரு சுவடிகளும் ஒன்றிலிருந்து ஒன்று படியெடுத்ததுபோல் தோன்றுகின்றன. பல்கலைக்கழகச் சுவடியின் மறுபதிப்பாகப் பேரூர்ச் சுவடி அமைந்திருந்தமையால் இப்பதிப்புப் பயன்பாட்டிற்கு இச்சுவடி பெருந்துணை புரிந்தது. பல்கலைக்கழகச் சுவடியில் உண்டான ஐயங்களும் விடுபாடுகளும் பேரூர்ச்சுவடியால் நிறைவு செய்யப்பெற்றன.

## பதிப்பு முறைகள்

இலக்கணச் சூடாமணிப் பதிப்புப் பணியை நான் தொடங்கும்பொழுது மூலப்பிரதியாகஇருந்தது பல்கலைக்கழகச் சுவடியாகும். இச்சுவடியைப் பெயர்த்தெழுதிப் பிழைநீக்கம் செய்து இதன் விடுபாடுகளை நிரப்பும் பணிக்கு மாற்றுச் சுவடிகளை ஒப்புநோக்கி ஆய்வு செய்யவேண்டிய நிலை உருவானது. சென்னை உ.வே. சா. நூலகத்திற்குச் சென்று (14-7-88, 17-7-88) அங்கிருந்த மூலம்மட்டும் கொண்ட சுவடியை ஒப்புநோக்கி நூற்பாப் பாட வேறுபாடுகள் குறித்துக் கொள்ளப்பட்டன. இங்கு நூற்பாவில் விளக்கம் பெறாத சில சொற்கள் உ.வே.சா. நூலகச் சுவடியால் விளக்கமும் திருத்தமும் பெற்றன. இதனால் நூற்பாக்களுக்கான செம்படியை உருவாக்க முடிந்தது.

நூற்பாக்களில் தெளிவு பெற்றபின் பேரூர்த் தமிழ்க் கல்லூரிக்குச் சென்று உரையோடு அமைந்த அச்சுவடியும் ஒப்புநோக்கப்பட்டன. பல்கலைக்கழகச் சுவடியில் பலவிடங்கள் அச்சுவடியால் திருத்தம் பெற்றன. இப்பதிப்புப் பணிக்கு அச்சுவடி பெரிதும் துணைநின்றது என்று கூறலாம். பாடவேறுபாடுகளைக் கண்டபின் அவற்றை நுனித்தாய்ந்து மூலப்பிரதி

உருவாக்கப்பட்டது. அவ்வுருவாக்கத்தில் பிற சுவடிகளால் உண்டாகிய திருத்தங்களால் நிரப்பப்பெற்ற பகுதிகள் பகர அடைப்புக் குறியில் [ ] அடக்கிக் காட்டப்பெற்றுள்ளன. பதிப்பாளரின் கருதுகோளினால் நிரப்பப்பெற்ற பகுதிகள் பிறைக்குறியில் ( ) அமைக்கப்பெற்றுள்ளன. இது சுவடிப் பதிப்பாதலால் சுவடியின் கண்ட தமிழ் எண்களை நூற்பாக்களின் தொடக்கத்தில் அமைத்துள்ளேன்.

நூல்முழுதும் நிலவும் பாடவேறுபாடுகளை நூற்பாவிற்கு உரைக்கும் என்று தனித்தனியாகக் காட்டுவதில்தான் நிறைவிருப்பதாகத் தோன்றியது. எனவே நூற்பாவிற்குரிய பாடவேறுபாட்டை நூற்பா எண்ணிட்டும் (13 பா. வே) உரைக்குரிய பாடவேறுபாட்டை எண்ணிடாமலும் (உரை.பா.வே) கொடுத்துள்ளேன். பாடவேறுபாடுகளுக்குத் தொடர் எண்ணிடுதல் பல்வகை இன்னல்களுக்குள்ளாக்கியது. எனினும் அந்நெறி மாறாமல் அவை தொடர் எண் முறையிலேயே அவ்வப்பக்கத்தில் தரப்பெற்றுள்ளன. சுருக்கம் கருதித் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியைக் குறிக்கத் (த) என்றும் உ.வே.சா. நூலகச் சுவடியைக் குறிக்க (உ) என்றும், பேரூர்த் தமிழக் கல்லூரிச் சுவடியைக் குறிக்கப் (பே) என்றும் சுருக்கக் குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சுவடியில் தலைப்புகள் மட்டுமே கொடுக்கப் பெற்றிருந்தன; நூற்பாக்களுக்குரிய பொருள் தலைப்புகள் கொடுக்கப் பெறவில்லை. எனவே பதிப்பின் எளிமை கருதி நூற்பாக்களுக்குப் பொருள் தலைப்புகள் தரப்பெற்றன. இது நூலைப் பயில் வார்க்குப் பயனுடையதாக அமையும்.

இப்பணிகள் நிறைவெய்தியவுடன் நூலுக்குரிய அடைவுகள் முறையாகத் தயார் செய்யப்பெற்றன. நூற்செய்யுள் அகரநிரல், உதாரண முதனினைப்புக் காரிகை அகரநிரல், நூற்செய்யுள் சொல்லடைவு, உரைச்சொல்-தொடர் அகரநிரல், இலக்கண மேற்கோள் அகரநிரல், இலக்கிய மேற்கோள் அகரநிரல் போன்றவை உருவாக்கப்பெற்றன. நூற்பதிப்பை மேற்கொள்ளும் பொழுது அகரநிரல்களை முதற்கண் உருவாக்கிக் கொள்ளுதல் முன்னோர் பதிப்பு நெறியாகும். அவ்வண்ணமே இந்நூலுக்கும் செய்யப்பெற்றது. இந்நெறி பதிப்புப் பணியைத் தொடர்வதற்கு அடிப்படையாக அமைந்தது. இவற்றின் துணைகொண்டு நூல்

முழுமைக்கும் உரை விளக்கங்கள் எழுதப்பெற்றன. முன்னூல் களோடு இந்நூற் கொள்கைகளுக்குள்ள உடன்பாடுகளும் மாறுபாடுகளும் அங்கங்கே குறித்துக் காட்டப்பெற்றன. வேண்டுமிடங்களில் மேற்கோள் பாடல்களையும் கொணர்ந்து காட்டியுள்ளேன். எளிமை கருதி உரிய இடங்களில் குறிப்பாகவும் ஏற்றவிடங்களில் விரிவாகவும் இவ்வுரை விளக்கத்தை இறுதியில் அமைத்துள்ளேன்.

நூலைப் பயன்கொள்வார் அதனை எளிதிற் பெறும்பொருட்டு, நூல் நுதலும் பொருளை, 'இயல் விளக்கக் கட்டுரைகள்' என்னும் தலைப்பிட்டு எழுதி நூலின் சேர்த்துள்ளேன். நூலை அச்சுருவில் பார்க்கும் நிலையில் நூற்பா, நூற்பா நுதலும் பொருள், பாடவேறுபாடு, நூற்பொருள், உதாரண முதனினைப்புக் காரிகை போன்றவை தெளிவாகத் தோன்றும் பொருட்டு ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு எழுத்து வடிவங்கள் தரப்பெற்றுள்ளன.

ஒரு நூலைப் பதிப்பிக்கும்போது உண்டாகும் ஐயங்களையும் ஐயத்தீர்வுகளையும் அறிஞர்களோடு பகிர்ந்து கொள்ளுதல் பதிப்பு நெறியுள் ஒன்றாகும். அவ்வகையில் இப்பதிப்பில் உண்டாகிய ஐயங்களையும் ஐயத்தீர்வுகளையும் அறிஞர் உலகுக்கு அறிவிக்கும்பொருட்டு ஆய்வுக் கட்டுரைகள் எழுதினேன். அவற்றுள் சில இதழ்களிலும் வெளிவந்துள்ளன. அவையாவன.

1. பாலபாரதி, தமிழ் இலக்கியக் கழக ஆய்வுக்கோவை, சூன். 1869
2. 'ஒருசீரடி சதுக்கம்', தமிழ்ப்பொழில், கரந்தைத் தமிழ்ச் சங்கம், துணர் 62, மலர் 10.
3. 'சவலை வெண்பா', ஸ்ரீகுமரகுருபரர் தொகுதி 11, பகுதி 10, 16-7-1989.
4. 'தாழிசை துறை விருத்தம்' முறை வைப்புகளும் கருது கோளும்', தமிழ்ப்பொழில் (கொடுக்கப்பட்டுள்ளது).

கீழ்க்கண்ட கட்டுரைகளைக் கருத்தரங்குகளில் அளித்து இப்பதிப்புத் தொடர்பான பல செய்திகள் அறிஞர்கள்வழி அறிந்து கொள்ளப் பெற்றன.

1. 'இலக்கணச் சூடாமணி' நூல் அறிமுகம்' — இலக்கணக் கருத்தரங்கம், தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைகழகம், 25-2-89

2. 'மொழி வளர்ச்சியும் சுவடி பதிப்பித்தலும் இலக்கண சூடாமணி' — ஓலைச் சுவடித்துறைக் கருத்தரங்கம், தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர், 15-3-89

இவ்வாய்வுக் கட்டுரைகளால் பெறப்பட்ட தெளிவுகள் என் பதிப்புப் பணிக்குத் துணையாக அமைந்தன. செல்வி த. இரமணி என்பவர், பேரூர்க் கல்லூரி முதல்வர் பேராசிரியர் ர. வையாபுரி அவர்களை நெறியாளராகக் கொண்டு 'இலக்கணச் சூடாமணி'யை எம்.பில். பட்ட ஆய்வேடு அளித்துள்ளார். (அக்டோபர் 1985). சுவடியை ஒப்புநோக்கப் பேரூர் சென்றிருந்தபொழுது இதனையும் என்னால் பார்க்க முடிந்தது.

இத்தகு நிலையில் உருவாக்கப்பெற்ற இலக்கணச் சூடாமணி வெளிவராத ஓர் அரிய இலக்கண நூலை வெளிக்கொணர்கிறோம் என்ற நிறைவில் வெளிவருகின்றது.

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி

வளர்தமிழ் நூலகம்
அழகப்பா பல்கலைக்கழகம்
Accession No. 160

# இலக்கணச் சூடாமணி

## இயல்விளக்கக் கட்டுரைகள்

## க. உறுப்பியல்

இலக்கணச்சூடாமணி உறுப்பியல், பாவியல், பாவினவியல், பிரபந்தவியல், ஒழிபியல் என்னும் ஐந்து இயல்களைக் கொண்டது. முதலாவதாகிய உறுப்பியல் எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய ஆறு உறுப்புகளையும் விளக்கியுரைக்கிறது.

### எழுத்து

குற்றெழுத்து, நெட்டெழுத்து, ஆவியெழுத்து, மெய் யெழுத்து, ஆய்தவெழுத்து, உயிர்மெய்யெழுத்து, அளபெடை யெழுத்து ஆகிய ஏழு எழுத்துகளும் அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்கள். இவ்வெழுத்துகளெல்லாம் நேரசை நிரையசை என்னும் இரண்டசைகளுக்கும் பொருந்திய உறுப்பாகி அழகுபெற நிற்பனவாகும் (நூற்பா எண். 2)

### அசை

அசை நேரசை, நிரையசை என இருவகைப்படும். நெட்டெழுத்துத் தனித்து வரினும், குற்றெழுத்துத் தனித்து வரினும், நெட்டெழுத்து ஒற்றடுத்து வரினும், குற்றெழுத்து ஒற்றடுத்து வரினும் நேரசையாகும்.

குறில் இரண்டு இணைந்துவரினும், குறில்நெடில் இணைந்து வரினும், குறில்இரண்டு இணைந்து ஒற்றடுத்து வரினும், குறில்நெடில் இணைந்து ஒற்றடுத்துவரினும் நிரையசையாகும்.

நெட்டெழுத்தின் மேலே வரும் குற்றெழுத்து நேரசையாகக் கொள்ளப்படுமேயன்றிச் சீர்முதலில் நிற்கும் குற்றெழுத்து நேரசையாகக் கொள்ளப்பெறாது (3).

சீர்

| | | |
|---|---|---|
| நேர் நேர் | - | தேமா |
| நிரை நேர் | - | புளிமா |
| நிரை நிரை | - | கருவிளம் |
| நேர் நிரை | - | கூவிளம் |

என ஈரசைச்சீர்கள் நான்காகும். இவற்றோடு நேரசை சேர்தலால் உண்டாகிற மூவசைக் காய்ச்சீர்கள் நான்காகவும், நிரையசை சேர்தலால் உண்டாகிற மூவசைக் கனிச்சீர்கள் நான்காகவும் மூவசைச்சீர்கள் எட்டுவகைப்படும்.

இம் மூவசைச்சீர்கள் எட்டனோடும் நேரசையும் நிரையசை-யும் சேர்தலால் உண்டாகிற பதினாறுசீர்களும் பொதுச்சீர்கள்.

இவற்றுள் ஈரசைச்சீர் நான்கும் ஆசிரியவுரிச்சீர்; நேரசை இறுதியான மூவசைச்சீர் நான்கும் வெண்பாவுரிச்சீர்; நிரையசை இறுதியான மூவசைச்சீர் நான்கும் வஞ்சியுரிச்சீர் (4).

நாலசைச்சீர் பதினாறும் வஞ்சிப்பாவிற்கும், சந்தப்பா முதலாகிய பாவினங்களுக்குமுரிய சீர்களாகும்.

தளை

சீர் இரண்டு இயைவதால் உண்டாவது தளை. நின்றசீரின் ஈற்றசையும் வரும் சீரின் முதலசையும் இணைவதால் தளை கணக்கிடப்படுகின்றது.

ஈரசைச்சீர்கள், மூவசைச்சீர்கள், நாலசைச்சீர்கள் ஆகிய வற்றின் மேல் நேர், நிரையாகிய இரண்டசைகளும் வந்து இயையும் பொழுது தளைகள் கொள்ளப்படும். அவை,

| | |
|---|---|
| மாமுன் நேர்வரில் | நேரொன்றாசிரியத்தளை |
| விளம்முன் நிரைவரில் | நிரையொன்றாசிரியத்தளை |
| மாமுன் நிரைவரில் | இயற்சீர் வெண்டளை |
| விளம்முன் நேர்வரில் | இயற்சீர் வெண்டளை |
| காய்முன் நேர்வரில் | வெண்சீர் வெண்டளை |
| காய்முன் நிரைவரில் | கலித்தளை |
| கனிமுன் நிரைவரில் | ஒன்றிய வஞ்சித்தளை |
| கனிமுன் நேர்வரில் | ஒன்றாத வஞ்சித்தளை |

என்பனவாகும். இவ்வகையில் தளை ஏழுவகைப்படும்.

நாலசைப் பொதுச்சீர் பதினாறனுள் வரும் நேர், நிரையசைகளைப் பூச்சீர் எட்டும் காய்ச்சீர் போலக் கொண்டும், நிழற்சீர் எட்டும் கனிச்சீர் போலக் கொண்டும் தளையுரைத்துக் கொள்ளவேண்டும்; இவை வஞ்சிப்பாவினுள் வரும் (5).

அடி

சீர்கள் இயைந்து தளைகொண்டு முடியின் அது அடியெனப்படும். இவ்வடிகள் ஆறுவகைப்படும்; அவை குறளடி, சிந்தடி, நேரடி, நெடிலடி, விருத்தம், கழிநெடிலடி என்பன.

இருசீரான் நடக்கும்அடி குறளடி
முச்சீரான் நடக்கும்அடி சிந்தடி
நாற்சீரான் நடக்கும்அடி அளவடி, நேரடி
ஐஞ்சீரான் நடக்கும்அடி நெடிலடி
ஐஞ்சீரின் மிக்கசீரான் நடக்கும்அடி விருத்தம்
எண்சீர்முதல் பதினாறு சீரளவும் நடக்கும்அடி கழிநெடிலடி

இக் கழிநெடிலடிகள் ஓசைமிகுந்தும், ஆசிரியவுரிச்சீர் விரவியும், ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் விரவியும் தம்முள் வேறுபட்டும் வருவனவாகும் (6).

மோனைக்கு இனமாம் எழுத்துகள்-அனு

தொடைகொள்வதற்குமுன் மோனைக்கு இனமாகும் எழுத்துகளைக் கூறுகின்றார்.

உயிரெழுத்துகளில் அகரமும் ஆகாரமும், ஐகாரமும் ஔகாரமும் ஒன்றுக்கொன்று இனம். இகரமும் ஈகாரமும், எகரமும் ஏகாரமும் ஒன்றுக்கொன்று இனம். உகரமும் ஊகாரமும் ஒன்றுக்கொன்று இனம். ஒகரம் ஓகாரம் ஒன்றுக்கொன்று இனம்.

மெய்யெழுத்துகளில் ஞகரமும் நகரமும் ஒன்றுக்கொன்று இனம். மகரமும் வகரமும் ஒன்றுக்கொன்று இனம். தகரமும் சகரமும் ஒன்றுக்கொன்று இனம். ககரத்திற்குக் ககரமும் பகரத்திற்குப் பகரமுமே மோனை; ஏனைய மெய்களெல்லாம் அவற்றிற்கு மோனையாகக் கொள்ளப்பெறா (7).

## தொடை

செய்யுளுக்கு அழகு தருவது தொடை. இது சீர்களிலும் அடிகளிலும் அமைவது. இதனைப் பொதுத்தொடை எனவும், தொடைவிகற்பம் எனவும் உரை வகுத்துக் கூறுகின்றது. அடிமோனை, அடியெதுகை, அடிமுரண், அடியளபெடை, அடியியைபு, வழிமோனை, இடைமோனை, கடைமோனை, அந்தாதி, இரட்டை, செந்தொடை என்னும் பதினொரு தொடைகளும் பொதுத்தொடைகளாகும். இவை பாவிற்கும் பாவினத்திற்கும் உரியன (8).

அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடிமோனைத் தொடை; அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடியெதுகைத் தொடை; அடிதோறும் முரணத்தொடுப்பது அடிமுரண்தொடை; அடிதோறும் அளபெடைவரத்தொடுப்பது அடியளபெடைத்தொடை; அடிதோறும் இறுதி யெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது அடியியைபுத்தொடை (9).

வழிமோனை, இடைமோனை, கடைமோனை என்பனவற்றை ஒவ்வொரு பாவுக்குமுரிய சிறப்பு மோனைகளாகப் பின்னர் எடுத்துக்கூறுகிறார் (12, 13).

அந்தாதித்தொடை என்பது ஒரு செய்யுளின் அந்தம் அடுத்த செய்யுளுக்கு ஆதியாக வரத் தொடுப்பது. இஃது எழுத்தந்தாதியும், அசையந்தாதியும், சீரந்தாதியும், அடியந்தாதியும் என நான்கு வகைப்படும்.

ஒரடி முழுதும் ஒரு சொல்லே வரத்தொடுப்பது இரட்டைத்தொடை. மோனை முதலாகச் சொல்லப்பட்ட தொடையும், தொடைவிகற்பங்கள் எவையுமின்றி வேறுபடத் தொடுப்பது செந்தொடை (11).

## தொடைவிகற்பங்கள்

மோனை, இயைபு, எதுகை, முரண், அளபெடை ஆகிய ஐந்து தொடைகளையும், இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழைமேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்னும் ஏழனோடும் உறழத் தொடைவிகற்பங்கள் முப்பத்தைந்தாகும்.

நாற்சீரடிப்பாவில் ஓரடியின் முதல் இரண்டுசீர்கள் (1, 2) ஒன்றிவரத்தொடுப்பது இணை; முதற்சீரும் மூன்றாம்சீரும்(1,3) வரத்தொடுப்பது பொழிப்பு; இடை இருசீர் நீங்கலாக முதற்சீரும் நான்காம்சீரும் (1,4) வரத்தொடுப்பது ஒரூஉ; முதல் மூன்றுசீர்கள் (1, 2, 3) வரத்தொடுப்பது கூழை; இரண்டாம்சீர் நீங்கலாக ஏனைய சீர்கள் (1, 3, 4) வரத்தொடுப்பது மேற்கதுவாய்; மூன்றாம் சீர் நீங்கலாக ஏனைய சீர்கள் வரத்தொடுப்பது (1, 2, 4) கீழ்க்கதுவாய்; நான்கு சீர்களும் வரத்தொடுப்பது (1,2,3,4) முற்று. இவ்விகற்பங்கள் ஒவ்வொன்றனோடும் ஐந்து தொடைகளையும் இணைத்துத் தொடைவிகற்பங்களை அறிதல்வேண்டும் (10).

இத் தொடைகளும் தொடைவிகற்பங்களும் நாற்சீரடிப் பாக்களுக்கே உரியன. நாற்சீரடியின் மேற்பட்ட பாக்களுக்கு இத் தொடை விகற்பங்கள் பொருந்தா. இவற்றிற்குரியன கடைமோனை, இடைமோனை, வழிமோனை என்பனவாகும்.

## சிறப்பு மோனைகள்

நாற்சீரடிப்பாவிற்கும் நாற்சீரின் மிக்க பாவிற்கும் சில மோனைகள் சிறப்பாக உரியன.

நாற்சீரடிப்பாவிற்கும் பாவினங்களுக்கும் சிறப்புமோனை பொழிப்பு மோனை.

ஐஞ்சீரடிக்குக் கடைமோனை சிறப்புமோனை.

அறுசீர்முதல் பதின்சீரளவும் இடைமோனை சிறப்பு மோனையாகும்.

பதினொரு சீர் முதல் பதினாறு சீரளவும் வழிமோனை சிறப்பு மோனை (12).

இவற்றுள் பொழிப்புமோனையென்பது முதற்சீரிலும் மூன்றாம்சீரிலும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது; கடைமோனையாவது அடிதோறும் இறுதிச் சீர்க்கண் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது; இடைமோனையாவது வாய்பாட்டிற்கேற்ப ஓசைமறித்துவரும் சீர்களில் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது; வழிமோனையாவது ஒவ்வோரடியிலும் இடையிட்ட சீர்களில் மோனைத்தொடை வரத்தொடுப்பது. இவ் வழிமோனையும் இரண்டு வகைப்படும்; அடுத்த வழிமோனை; இடையிட்டு வந்த வழிமோனை என (13).

பாவுக்குரிய அடிச்சிறுமை பெருமை

வெண்பாவிற்கு இரண்டடியும், ஆசிரியப்பாவிற்கு மூன்றடியும், கலிப்பாவிற்கு நான்கடியும், வஞ்சிப்பாவிற்கு இரண்டடியும் அடிச்சிறுமைகளாகும். வஞ்சிப்பா மூன்றடியானும் வரப்பெறும்.

இந் நால்வகைப்பாவின் பெருமைக்குப் பாடுவோரின் உள்ளமும், சொல்லும் பொருளும் தோற்றும் அளவுமே எல்லை. ஆற்றுப்படை, உலா, மடல், தூது போன்றவற்றில் அடிப் பெருமைகளைக் காணலாம் (14).

பாக்களுக்குரிய சீர்வரையறை

ஒருசீரடியால் நடைபெறும் பாவகை சதுக்கம் என்று பெயர் பெறும். வஞ்சிப்பா இருசீரடியானும் முச்சீரடியானும் வரப்பெறும். ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா ஆகிய மூன்றுபாக்களும் நாற்சீரடியான் நடைபெறுவன.

சதுக்கம் என்னும் பாவில் வரும் ஒருசீரடியின் சீர் ஈரசையானும் மூவசையானும் வரப்பெறும் (15).

## உ. பாவியல்

இரண்டாவதாகிய பாவியல் பாக்களைப் பற்றிய இயலாகும். இதனுள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா ஆகியவற்றின் பொதுவிலக்கணங்களும் வகைகளும் கூறப் பட்டுள்ளன.

## வெண்பாவியல்

வெண்பாவின் பொதுவிலக்கணம்

மூவசைச்சீரானும், ஈரசைச்சீரானும், இவ்விருவகைச்சீரானும் வெண்பா நடைபெறும். ஈற்றடி முச்சீராகவிருக்கும்; இதன் மூன்றாம்சீர் அசைச்சீராகும். அவ்வசைச்சீர் நாள், மலர் என்னும் நேரசையாகவும் நிரையசையாகவும் அமைவதோடன்றியும் அவற்றோடு உகரம் ஊர்ந்து காசு, பிறப்பு என்னும் அசைச்சீர்களாகவும் அமையும்; வெண்சீர்வெண்டளையும்

இயற்சீர் வெண்டளையும் பயின்று செப்பலோசை பெற்றுவரும். வெண்பாவின் வகைகள் அனைத்தும் இப் பொதுவிலக்கணத்தைக் கொண்டே நடைபெறும் (16).

வெண்பாவிற்குரிய செப்பலோசை ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச்செப்பல், ஒழுகிசைச்செப்பல் என மூவகைப்படும். வெண்சீர் வெண்டளையான் வருவது ஏந்திசைச்செப்பலோசை என்றும், இயற்சீர் வெண்டளையான் வருவது தூங்கிசைச் செப்பலோசை என்றும், இவ்விருவகைத்தளையானும் வருவது ஒழுகிசைச்செப்பலோசை என்றும் பெயர்பெறும்.

## வெண்பாவின் வகைகள்

வெண்பா ஆறுவகைப்படும். அவை குறள்வெண்பா, நேரிசை வெண்பா, சிந்தியல்வெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடை வெண்பா, சவலைவெண்பா என்பன.

## குறள்வெண்பா

நாற்சீரடியும் முச்சீரடியுமாக இரண்டடியாய் வருவது குறள்வெண்பா. இஃது இருவிகற்பமாய் வந்தால் இருவிகற்பக் குறள்வெண்பா என்றும், ஒரு விகற்பமாய் வந்தால் ஒருவிகற்பக் குறள்வெண்பா என்றும் இருவகைப்படும் (17).

## நேரிசை வெண்பா

இரண்டு குறள்வெண்பாக்கள் இணைந்து நடுவில் ஒரு தனிச்சொல் பெற்று வருவது நேரிசை வெண்பா; இஃது இருகுறள் நேரிசை வெண்பா எனப் பெயர் பெறும். இவ்வெண்பா ஒருவிகற்பமாகவும் இருவிகற்பமாகவும் வரும் (17).

## ஆசிடைநேரிசை வெண்பா

இரண்டு குறள் வெண்பாக்களில் முதற்குறட்பாவினோடு தனிச்சொல் விட்டிசைக்கும் பொழுது அதனை நிரப்புதற்கு ஓர் அசையோ ஈர்அசையோ கூட்டி வெண்பாவை நிறைவு செய்தல்வேண்டும். அவ்வாறு செய்யப்பெறும் வெண்பா ஆசிடை நேரிசை வெண்பா எனப்பெறும். ஓராசிடையிட்ட நேரிசை வெண்பா என்றும் ஈராசிடையிட்ட நேரிசை வெண்பா என்றும்

இவ்வெண்பா இரு வகைப்படும். இவையும் ஒருவிகற்பமாகவும் இருவிகற்பமாகவும் வரும் (17).

## சிந்தியல் வெண்பா

வெண்பாவிற்குரிய இலக்கணங்களைப் பெற்று மூன்றடியான் வருவது சிந்தியல்வெண்பா; இது நேரிசைச்சிந்தியல் வெண்பா என்றும், இன்னிசைச் சிந்தியல் வெண்பா என்றும் இருவகைப்படும்.

நேரிசைவெண்பாப்போல இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று மூன்றடியான் வருவது நேரிசைச்சிந்தியல் வெண்பா; இஃது ஒரு விகற்பத்தானும் இருவிகற்பத்தானும் வரும்.

இன்னிசை வெண்பாப்போலத் தனிச்சொல் இன்றி மூன்றடியான் வருவது இன்னிசைச் சிந்தியல் வெண்பா; இஃது ஒருவிகற்பத்தானும், இருவிகற்பத்தானும், பல விகற்பத்தானும் வரும் (18).

## பஃறொடை வெண்பா

வெண்பாவிற்குரிய பொதுவிலக்கணங்களைப் பெற்று நான்கடியின் மிகுந்த பலவடிகளால் வருவது பஃறொடை வெண்பா; இஃது ஒருவிகற்பத்தானும் பல விகற்பத்தானும் வரப்பெறும் (18).

## இன்னிசைவெண்பா

வெண்பாவிற்குரிய இலக்கணங்களைப் பெற்று நான்கடியான் வருவது இன்னிசை வெண்பா; இது தனிச்சொல் இன்றி ஒருவிகற்பத்தானும் இரு விகற்பத்தானும் வரும். இரண்டாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தானும், மூன்றாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று இரண்டு விகற்பத்தானும், அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்றும், அடிதோறும் தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தானும் இவ்வகை வெண்பா வரப்பெறும் (18).

### சவலை வெண்பா

மேற்கூறப்பெற்ற ஐந்துவகை வெண்பாக்களும் எழுத்து, அசை, சீர் குறைந்தும், எதுகையின்றியும், தொடை வேறுபட்டும் வந்தால் அவை சவலை வெண்பா எனப்படும் (18).

## ஆசிரியவியல்

### ஆசிரியப்பாவின் பொதுவிலக்கணம்

அகவலோசை குன்றாமல் ஈரசைச்சீர் எய்தி, நேரொன்றாசிரியத் தளையானும், நிரையொன்றாசிரியத் தளையானும், இவ்விரண்டு தளையானும் வருவது ஆசிரியப்பா. இப் பாவுக்குரிய அகவலோசை ஏந்திசை அகவலோசை, தூங்கிசை அகவலோசை, ஒழுகிசை அகவலோசை என மூவகைப்படும் (19).

நேரொன்றாசிரியத்தளையான் வருவது ஏந்திசை அகவலோசை என்றும், நிரையொன்றாசிரியத்தளையான் வருவது தூங்கிசை அகவலோசை என்றும், இவ்விரு தளையானும் வருவது ஒழுகிசை அகவலோசை என்றும் பெயர்பெறும்.

இவ் வாசிரியப்பா நேரிசை ஆசிரியப்பா என்றும், இணைக்குறளாசிரியப்பா என்றும், நிலைமண்டில ஆசிரியப்பா என்றும், அடிமறி மண்டில ஆசிரியப்பா என்றும் நால்வகைப்படும். இப் பாக்கள் ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ என்னும் அசைச்சொற்களைப் பெற்று இறுவது சிறப்பாகும்.

### நேரிசை ஆசிரியப்பா

ஆசிரியப்பாவின் பொதுவிலக்கணங்களைப் பெற்று, நாற்சீர் நாற்சீராய்ப் பலவடி நடந்து, ஈற்றயலடி முச்சீராய் வந்து நாற்சீரடியாய் முற்றுவது நேரிசை ஆசிரியப்பா (20).

### இணைக்குறளாசிரியப்பா

ஆசிரியப்பாவின் பொதுவிலக்கணங்களைப் பெற்று, ஈற்றடியும் முதலடியும் ஒழிந்து மற்றையடிகள் குறளடியானும் சிந்தடியானும் வருவது இணைக்குறளாசிரியப்பா (20).

## நிலைமண்டில ஆசிரியப்பா

ஆசிரியப்பாவின் பொது இலக்கணங்களைப் பெற்று எல்லா அடியும் ஒத்துவருமெனின் நிலைமண்டில ஆசிரியப்பா (21).

## அடிமறிமண்டில ஆசிரியப்பா

ஆசிரியப்பாவின் பொது இலக்கணங்களைப்பெற்று, எல்லா அடிகளும் நடுவு ஆதி அந்தமாகவோ அந்தம் ஆதி நடுவாகவோ உச்சரித்தால் ஓசையும் பொருளும் பிழையாது வருவது அடிமறிமண்டில ஆசிரியப்பா (21).

# கலிப்பாவியல்

## கலிப்பாவின் பொதுஇலக்கணம்

துள்ளலோசை உடையதாய், நேரீற்று வெண்சீரும் நிரையீற்று அகவற்சீரும் நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வந்து, நேரடி உடையதாய்க் கலித்தளையும் வெண்டளையும் அயற்றளையும் எய்தி நடப்பது கலிப்பா (22).

கலித்தளையான் வ்ருவது ஏந்திசைத்துள்ளலோசை என்றும், கலித்தளையானும் வெண்டளையானும் வருவது அகவற் றுள்ளலோசை என்றும், கலித்தளையும் பிறதளையும் மயங்கி வருவது பிரிந்திசைத்துள்ளலோசை என்றும் துள்ளலோசை மூவகைப்படும்.

இக் கலிப்பா ஐவகைப்படும். அவை நேரிசையொத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா, வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கொச்சகக்கலிப்பா என்பன.

## நேரிசையொத்தாழிசைக்கலிப்பா

கலிப்பாவின் பொதுவிலக்கணங்களைப்பெற்று, முன் ஒரு தரவு வந்தும், அதன்பின் மூன்றுதாழிசை வந்தும், அதன்பின் ஒருதனிச்சொல் வந்தும் அதன்பின் ஆசிரியத்தினானாதல் வெண்பாவினானாதல் சுரிதகம் பெற்றுவருவது நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா எனப்படும் (23).

தரவெனினும் எருத்தமெனினும் ஒக்கும்; தாழிசையெனினும் இடைநிலைப் பாட்டெனினும் ஒக்கும்; தனிச்சொல்லெனினும் தனிநிலையெனினும் ஒக்கும்; சுரிதகமெனினும் அடக்கிய லெனினும், வாரமெனினும், வைப்பெனினும், போக்கிய லெனினும் ஒக்கும்.

## அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா

கலிப்பாவின் பொதுவிலக்கணங்களைப் பெற்றுத் தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்துறுப்பினையும் உடையதாய் வருவது அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா (24).

அம்போதரங்கம் என்பது கரைசாரக் கரைசார ஒருகாலைக் கொருகால் சுருங்கிவரும் நீர்த்தரங்கம் போல நாற்சீரடியும் முச்சீரடியும் இருசீரடியுமாகிய அசையடிகளாகும். இது நாற்சீரடி அம்போதரங்கம் என்றும், முச்சீரடி அம்போதரங்கம் என்றும், இருசீரடி அம்போதரங்கம் என்றும் பெயர்பெறும். அம்போதரங்க உறுப்பெனினும் அசையடியெனினும் ஒக்கும்; சொற்சீரடி எனினும் எண்ணெனினும் ஒக்கும். இவ்வுறுப்பு இக் கலிப்பாவினுள் தாழிசைக்கும் தனிச்சொற்கும் நடுவே தொடுக்கப்படும்.

## வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா

கலிப்பாவின் பொது இலக்கணங்களைப் பெற்றுத் தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புகளையும் பெற்று வருவது வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா; இதனுள் தரவு ஆறடியாகவும் தாழிசை நான்கடியில் மூன்றாகவும், அராகம் நான்கடியாகவும் வரப்பெறும் (25).

அராகமெனினும், அடுக்கியலெனினும், முடுகியலெனினும், வண்ணகமெனினும், போக்கியலெனினும் ஒக்கும். இவ்வராக வுறுப்பு அளவடி முதல் எல்லா அடியானும் வரப்பெறும்.

## வெண்கலிப்பா

கலித்தளையும் வெண்டளையும் ஆசிரியத்தளையும் பெற்றுத் தரவு தாழிசை முதலான கலிப்பாவின் உறுப்புகள் இல்லாமல் ஓசை குன்றி அடியளவில்லாமல் நாற்சீரடியாய் நடந்து முச்சீரடியாய்

வெண்பாப்போல் முடிவது வெண்கலிப்பாவாகும். இக் கலிப்பா ஒருபொருள் மேலும் வரப்பெறும் (26).

கொச்சகக்கலிப்பாக்கள்

கொச்சகக்கலிப்பா ஐந்து வகைப்படும். அவை தரவு கொச்சகக்கலிப்பா, தரவிணைக்கொச்சகக்கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா, பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா என்பனவாம்.

ஒரு தரவு வருவது தரவு கொச்சகக்கலிப்பா; இரண்டு தரவு தருவது தரவிணைக் கொச்சகக்கலிப்பா; சில தாழிசை வருவது சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா; பல தாழிசை வருவது பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா.

தரவு முதலாகிய ஆறு உறுப்புகள் தத்தமக்கு விதிக்கப்பெற்ற இலக்கணங்களில் குறைந்தும் மிக்கும் வருவது மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா. தரவு தாழிசைக்கு மேல் ஒன்றன் பின் வேறொன்றாக முறைமாறியும், ஒவ்வொன்று அளவில் மிகுந்தும், குறைந்தும், விகற்பம் எய்தியும் வரும் (27, 28).

## வஞ்சிப்பாவியல்

### வஞ்சிப்பாவின் பொதுவிலக்கணமும் வகையும்

ஒன்றிய வஞ்சித்தளையும் ஒன்றாத வஞ்சித்தளையும், வெண்சீர் வெண்டளையும் பெற்று இருசீர் அடியாகவோ முச்சீர் அடியாகவோ நடந்து, தனிச்சொல்பெற்று, ஆசிரியச்சுரிதகத்தைக் கொண்டு முடிவது வஞ்சிப்பாவாகும். இது குறளடி வஞ்சிப்பா என்றும் சிந்தடி வஞ்சிப்பா என்றும் இருவகைப்படும். இவ் வஞ்சிப்பாவினுள் நாலசைச்சீரும் வரப்பெறும் (29).

வஞ்சிப்பாவிற்குரிய ஓசை தூங்கலோசை; இத் தூங்கலோசை ஏந்திசை, அகவல், பிரிந்திசை என மூவகைப்படும். ஒன்றிய வஞ்சித் தளையான் வருவது ஏந்திசைத் தூங்கலோசை; ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது அகவற்றூங்கலோசை; வஞ்சித் தளைகளும் பிறதளைகளும் விரவ வருவது பிரிந்திசைத் தூங்கலோசை.

### மருட்பா

வெண்பா முதலாகவும் ஆசிரியம் ஈறாகவும் இரண்டும் மயங்கி வருவது மருட்பா; இது நான்கு வகைப்படும். அவை புறநிலைவாழ்த்து மருட்பா, கைக்கிளை மருட்பா, வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா என்பனவாம். இந் நான்கு பொருள் மேலும் மருட்பா நடைபெறும் (30).

## ங. பாவினவியல்

### வெண்பாவினம்

பாவிற்குரிய இனங்கள் தாழிசை, துறை, விருத்தம் என்பன. வெண்பாவிற்கு வெண்டாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம் என்பன இனங்கள்.

### வெண்டாழிசை

வெண்பாவிற்கு இனம் வெண்டாழிசை என்றும், குறள் வெண்பாவிற்கு இனம் குறட்டாழிசை என்றும் வழங்கப் படும்

முதலடியில் சீர்பலவாகவும், இரண்டாமடியில் சீர்குறைந்தும், செந்துறைபிறழ்ந்தும், குறள்வெண்பாவில் சிதைந்தும் வருவன குறட்டாழிசை. சீர்வரையறுத்துக் கூறப்பெறவில்லையாதலால் இஃது எனைத்துச் சீரானும் வரப்பெறும். ஈற்றடி குறைந்து வருவதைக் குறட்டாழிசை என்றும், அடி இரண்டாய் அளவொத்தும் விழுமிய பொருள் இன்றாகியும் ஓசை இன்றாகியும் செந்துறையில் சிதைந்து வருவன தாழிசைக்குறள் என்றும் வழங்கப்பெறும். ஈற்றடி குறைந்தும் சந்தம் சிதைந்தும் வருவது சந்தழி குறட்டாழிசை.

சிந்தியல்வெண்பா ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்தால் அது வெள்ளொத்தாழிசை; தனித்து வரின் அது வெண்டாழிசை (31).

### வெண்டுறை

வெண்பாவின் இனம் வெண்டுறை என்றும் குறள் வெண்பாவின் இனம் வெண்செந்துறை என்றும் பெயர்பெறும்.

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் பெற்று ஈரடியாய் வருவது வெண்செந்துறை.

மூன்றடிச் சிறுமையாய் ஏழடிப் பெருமையாய் இடை நான்கடியானும் ஐந்தடியானும் ஆறடியானும் வந்து சில அடிகள் சீர்குறைந்து வருவது வெண்டுறை. செய்யுள் முழுவதும் ஓரோசையாக வந்தால் அது ஓரொலி வெண்டுறை என்றும், முன்பு ஓரோசையாகவும் பின் சிலவடி மற்றோரோசையாகவும் வந்தால் வேற்றொலி வெண்டுறை என்றும் வழங்கப்பெறும் (32).

## வெளிவிருத்தம்

அடிதோறும் ஈற்றுச்சீர் ஒருசொல்லாகி மூன்றடியானும் நான்கடியானும் முடிவது வெளிவிருத்தம். ஈற்றுச்சீராகிய தனிச்சொல் சீர்வரையறை இல்லாது வரும் (33).

## ஆசிரியவினம்–ஆசிரியத்தாழிசை

ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தமென ஆசிரியவினம் மூவகைப்படும். அளவொத்த மூன்றடிகள் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருமேல் ஆசிரியத்தாழிசை; இது தனியே வருதலும் உண்டு. சீர்வரையறுத்துச் சுட்டப் பெறாததால் எனைத்துச் சீரானும் மூன்றடிகளில் இது வரப் பெறும் (34).

## ஆசிரியத்துறை

நான்கடியாய்ச் சீர்வரையறை இல்லாமல் வருவது ஆசிரியத்துறை. நான்கடியாய் ஈற்றயலடி குறைந்தும், நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து இடையில் மடக்காயும், நான்கடியாய் இடையிடை குறைந்தும், நான்கடியாய் இடையிடை குறைந்து நடுவில் மடக்காயும் இவ்வாசிரியத்துறை வரப்பெறும் (35).

## ஆசிரியவிருத்தம்

அறுசீர்முதலாக அளவொத்த நான்கடியாய் வருவது ஆசிரியவிருத்தம்; இது கழிநெடில் என்னும் பெயர்பெறும். இவ்வாசிரிய விருத்தம் வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் குழிப்பில் சந்தவிருத்தமாகவும் முடுகுவிருத்தமாகவும் வரும் (36).

## கலிப்பாவினம்-கலித்தாழிசை

கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் எனக் கலியினம் மூவகைப்படும். இரண்டடியானும் பலவடியானும் வந்து ஈற்றடி மிக்கு அல்லாத அடிகள் தம்முள் அளவொத்து வருவது கலித்தாழிசை; ஒவ்வாது வருதலும் உண்டு. இத் தாழிசை தனித்து வரப்பெறுமாயினும் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருதல் சிறப்பு (37).

## கலித்துறை

ஐஞ்சீரடி நான்காய் வருவது கலித்துறை. இது நேரசைக் கலித்துறை, நிரையசைக்கலித்துறை, காப்பியக்கலித்துறை, திலதக் கலித்துறை என நால்வகைப்படும்.

நேரசை தொடக்கமாக அடியொன்றுக்குப் பதினாறு எழுத்தாய், ஐந்து சீராய்க் கடைமோனையோடு நான்கடியாய் நடப்பது நேரசைக் கலித்துறை எனப்பெறும்.

நிரையசை தொடக்கமாக அடியொன்றுக்குப் பதினே ழெழுத்தாய், ஐந்துசீராய்க் கடைமோனையோடு நான்கடியாய் நடப்பது நிரையசைக்கலித்துறை எனப்பெறும்.

எழுத்து வரையறை இல்லாமல் ஐந்துசீராய், அடிநான்காய் முடிவது காப்பியக்கலித்துறை எனப்படும்; இது நெடிலடி என்றும் பெயர்பெறும்.

## கலிவிருத்தம்

நாற்சீரடி நான்காய் வருவது கலிவிருத்தம்; இவ்விருத்தம் இலக்கியங்களுள் பெரிதும் பயின்று வருவதாகும் (39).

## கட்டளைக்கலிப்பா

அடியொன்றுக்கு எண்சீராய் ஆசிரியச்சீரால் முடிவது கட்டளைக்கலிப்பா (39).

## வஞ்சிப்பாவினம்-வஞ்சித்தாழிசை

வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் என வஞ்சிப்பாவினம் மூவகைப்படும்.

அடியொன்றுக்கு இரண்டுசீராய் நான்கடிகளாய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வருவது வஞ்சித்தாழிசை (40).

### வஞ்சித்துறை

அடியொன்றுக்கு இரண்டுசீராய் நான்கடிகள் தனித்துவருவது வஞ்சித் துறை (40). இதுவே ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வருவது வஞ்சித்தாழிசையாகும்.

### வஞ்சிவிருத்தம்

அடியொன்றுக்கு மூன்றுசீராய் நான்கடிகள் வருவது வஞ்சிவிருத்தம் (40).

## ௬. பிரபந்தவியல்

இதனுள் உலா, மடல், தூது, பரணி, பிள்ளைத்தமிழ், வண்ணம், சிந்து முதலானவற்றிற்கு இலக்கணம் கூறப்படுகின்றது.

### உலா, மடல், தூது

இவை கலிவெண்பாவால் பாடப்பெறுவன. வெண்பாவிற்குரிய சீர், தளைகள் கொண்டு நாற்சீரும் முச்சீரும் தனிச்சொல்லுமாக, இவை ஓர் எதுகையில் அமைய, இதனை ஒரு கண்ணியாகக் கொண்டு, இப்படிப் பல கண்ணிகளாகக் கருதிய பொருளின் அளவே எல்லையாக இவை பாடப்பெறும். மஞ்சரி, மன்மத சாரம் போன்றவையும் இவ்விலக்கணத்தால் பாடப்பெறுபவையே (41).

### பரணி

இஃது இரண்டடித் தாழிசைகளால் பாடப்பெறும். இரண்டடித்தாழிசை என்பது ஈரசைச்சீரானும், மூவசைச்சீரானும் நாற்சீரடி முதலாக எண்சீரடி ஈறாக உயிர்த் தொடைச்சொல் அடுத்தும் இன்சந்தமுடன் கூடியும் வருவது (42).

### பிள்ளைத்தமிழ்

நாற்சீரும் முச்சீரும் நாற்சீரும் முச்சீருமாக அடியொன்றுக்குப் பதினான்குசீராய் முதற்சீர் நான்கிலும் இருமடி முதலெழுத்து வைத்து வெண்சீரும் அகவற்சீரும் விரவி, நான்கடியாய் வருவது

ஆசிரியத்தாழிசை. அகவற்சீரால் பதினான்கு சீரடி நான்காய்ப் பாடுவது கழிநெடில். இவ்விலக்கணத்தால் பிள்ளைத்தமிழ், யானைவிருத்தம் முதலான பிரபந்தங்கள் பாடப்பெறும் (43).

### வண்ணம்

ஒரு வண்ணம் என்பது எட்டுக்கலைகளைக் கொண்டது. ஒரு கலை மூன்று கண்ணிகளைக் கொண்டது; மூன்று கண்ணிகளைக் கொண்ட கலை எட்டுக் கொண்டதாய் அமைவது ஒரு வண்ணம். ஒவ்வொரு கலையிலும் முதற்கண்ணியிலும் மூன்றாம் கண்ணியிலும் மோனை அமையப்பெற்று, மூன்று ஐந்து ஏழாம் கலைகளில் எதுகை அமையப்பெற்றுக் கலைக்குக் கலை தனியே தொங்கல் உடைத்தாய் இவ்வண்ணம் என்னும் பிரபந்தம் பாடப்பெறும் (44).

வண்ணம் என்னும் யாப்புவகை சந்தம் அமையப் பாடப்பெறுவது. எனவே இதனைச் சந்தப்பா என்றும் கூறுவர். எவ்வகைப்பாவும் சந்தம் அமையப் பாடப்பெறலாம். வல்லினத்திற்கு வல்லினமும், மெல்லினத்திற்கு மெல்லினமும், இடையினத்திற்கு இடையினமுமாக அவ்வவற்றிற்கேற்பச் சொற்களைத் தொடுத்து எழுத்தளவு அமைய இச் சந்தப்பா பாடப்பெறும் (45).

### சிந்து

தன் உள்ளக்கருத்தைப் பல்லவமாக முன்னே கூறிப் பாட்டுடைத் தலைவன் பெயரை அனுபல்லவமாகப் பின்னே கூறிப் பின்பு, சொல்லக் கருதியவற்றை மூன்றுபாகமாகப் பிரித்துக்கொண்டு, ஒவ்வொரு பாகமும் நான்கடி நான்கடியாக மூன்று பங்காய்ப் பாடுவது சிந்து எனப் பெயர்பெறும். நான்கடியாக வருவதேயன்றி இரண்டிரண்டடியாகவும், தனிச்சொல் அமையப்பெற்றும், சில அடிகள் ஏற்றத்தாழ்ச்சி யாகவும் அடி வரையறையில்லாது இச்சிந்து பாடப்பெறும் (46).

## ரு. ஒழிபியல்

### தரவுதாழிசைக்கு அடிவரையறை

தரவுக்கு மூன்றடி சிறுமை; பெருமை ஐந்தடியாகும். தாழிசைக்கு இரண்டடி சிறுமை; பெருமை நான்கடியாகும். தரவுக்குத் தாழிசை தாழ்ந்துவரும் (47).

தரவு, தாழிசை, அராகம் என்னும் மூன்றும் நாற்சீரடியே அளவாக நடக்கும். அம்போதரங்கம் நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியும், ஒருசீரடியும் அளவாக நடக்கும் (48).

## அம்போதரங்கம் நடக்கும் முறைமை

வினைமுற்று இரண்டு நான்கடியாய் வருவது இரண்டம்போதரங்கம்; வினைமுற்று நான்கு நான்கடியாய் வருவது நான்கம்போதரங்கம்; வினைமுற்று எட்டு முச்சீரடியாய் வருவது எட்டம்போதரங்கம்; இரண்டு சீராயும் ஒரு சீராயும் தனித்தனியே வருவது பதினாறம்போதரங்கமும் எட்டம் போதரங்கமுமாகும் (49).

## கலிப்பாவிற்குரிய சீர்வரையறை

நிரைமுதலாகவும் நேர்ஈறாகவும் வரும் புளிமாங்காய் கருவிளங்காயாகிய மூவசைச்சீர்களும், நிரையீற்றின் ஈரசைச்சீரும், நேரீற்றின் மூவசைச்சீரும் வரவே துள்ளலோசை தோன்றும் (50).

## அலகுகாரியம் பெறாதவை

செய்யுளில் சீரும் தளையும் கெடவருமிடத்துக் குற்றிய லுகரமும், குற்றியலிகரமும், ஐகாரக்குறுக்கமும், உயிரள பெடையும், ஒற்றளபெடையும், விட்டிசையும் அலகிடப் பெறுவதில்லை.

குற்றியலுகரமும், குற்றியலிகரமும், ஐகாரக்குறுக்கமும் குற்றெழுத்தின் பயத்தவாய் நின்று அலகுபெறும். உயிரளபெடை நெட்டெழுத்தின் பயத்தவாய் நின்று அலகுபெறும். ஒற்றும் ஆய்தமும் அளபெழுந்தவிடத்து தனி ஒரு நேரசையாக அலகுபெறும்.

தனிக்குறில் விட்டிசைத்த வழியல்லது நேரசையாக அலகிடப்பெறாது. எனவே விட்டிசைக்காத குற்றெழுத்து முதற்கண் நேரசையாகாது. அவ்விடத்தில் பிறவற்றினோடு கூடி நிரையசையாகக் கொள்ளப்பெறும். இவ் விட்டிசை குறிப்பு, தற்சுட்டு, ஏவல், சுட்டு, வினா என்னும் ஐந்து பொருண்மையில் நிகழும்.

நெட்டெழுத்து அளபெழுந்தால் நேர்நேர் ஆகக் கொள்ளப்படும். குற்றெழுத்தோடு கூடிய நெட்டெழுத்து அளபெழுந்தால் நிரைநேர் ஆக அலகிடப்பெறும் (51).

### சீர்மயக்கம்

ஒவ்வொரு பாவிற்கும் அவ்வப்பாவிற்குரிய சீர்களே உரிய சீர்களாகும். எனினும் சில பாவில் பிறசீர்களும் மயங்குதற் குரியனவாம்.

வெண்பாவிற்குரிய சீர் எந்தப் பாவினுள்ளும் புக்கு மயங்கும். வெண்பாவினுள் அகவற்சீர் புக்கு நடக்கும். எனவே வெண்பாவினுள் வெண்சீரும் அகவற்சீருமன்றிப் பிறசீர்கள் வரப்பெறாவாம்.

கலிப்பாவில் அகவற்சீர்களான கருவிளம், கூவிளம் என்னும் இரண்டும் விரவும். அகவற்பாவிற்கு அதன் சீரே சிறப்பாகும். பிறசீர்களெல்லாம்எல்லாப் பாவினுள்ளும் பாவினத்துள்ளும் புக்குமயங்கும் (52).

### அடிமயக்கம்

ஆசிரியப்பாவில் வெள்ளடியும், வஞ்சியடியும், கலியடியும் வந்து மயங்கும்; கலிப்பாவில் ஆசிரியவடியும், வெண்பாவடியும் வந்து மயங்கும்; வஞ்சிப்பாவில் ஆசிரியவடியும், கலியடியும் வெண்பாவடியும் வந்து மயங்கும்; வெண்பாவில் பிற அடிகள் வந்து மயங்கப்பெறா (53).

அகவற்பாவினுள்ளும் கலிப்பாவினுள்ளும் ஐஞ்சீரடி அருகி வரும். வெண்பாவினுள்ளும் வஞ்சிப்பாவினுள்ளும் ஐஞ்சீரடி வரப்பெறா (54).

### தொடைவிகற்பம்

மோனை முதலிய ஐந்துதொடைகளையும் விகற்பிக்கத் தொடைவகை முப்பத்தைந்தாகும். அவையன்றி வேறுபல தொடைவிகற்பங்களும் உள்ளன. அவை கடை, இணை, இடைப்புணர்வு, பின், அந்தம், ஆதி, ஈரடி, ஆசு, இனம், வருக்கம், நேரடி, நெடில் போன்றவையாகும்.

முரண்தொடையில் அடிதோறும் இறுதிச்சீர் முரணத் தொடுப்பது கடைமுரண்; அடிதோறும் இறுதி இரு சீரும் முரணத்தொடுப்பது கடையிணை முரண்; அடிதோறும் இறுதிச்சீரும் இரண்டாம் சீரும் முரணத்தொடுப்பது பின்முரண்; முதற்சீரொழிய ஏனை மூன்று சீர்களும் முரணத்தொடுப்பது கடைக்கூழை முரண்; நடு இருசீர்க்கண்ணும் முரணத்தொடுப்பது இடைப்புணர்முரண். இவ்வாறு மோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னும் நான்கு தொடைகளும் வரும்.

வருக்கவெழுத்தும், நெடிலெழுத்தும், இனவெழுத்தும் எதுகையும் மோனையுமாய் வந்தால் அவை வருக்கவெதுகை, நெடிலெதுகை, இனவெதுகை என்றும் வருக்கமோனை, நெடில்மோனை, இனமோனை என்றும் வழங்கப்படும். இவையன்றித் தலையாகு எதுகை, இடையாகு எதுகை, கடையாகு எதுகை எனவும் தலையாகு மோனை, இடையாகுமோனை, கடையாகுமோனை எனவும் தொடைவிகற்பங்கள் உள்ளன. உயிரெதுகை, ஆசெதுகை, இடையிட்டெதுகை, இரண்டடி யெதுகை, மூன்றாமெழுத்தொன்றின வெதுகை எனும் தொடைவிகற்பங்கள் சிறப்பிலவாம்.

இரண்டாமெழுத்தொன்றாதாயினும் இரண்டாமெழுத்தின் மேல் ஏறிய உயிர் ஒன்றி வருவது உயிரெதுகை; யரலழ என்னும் ஒற்றெழுத்துகள் ஆசாக எதுகையில் வருவது ஆசெதுகை; அடியிடையிட்டு இரண்டாமெழுத்து ஒன்றிவருவது இடையிட் டெதுகை; முதலிரண்டடியும் ஒரெதுகையாகவும் அடுத்த இரண்டடியும் மற்றோரெதுகையாகவும் வருவது இரண்டடி யெதுகை (55).

## கூன்வருமுறை

பாவினது பொருளைத் தழுவித் தனியே நிற்பது கூன்; இதனைத் தனிச்சொல் என்றும் கூறுவர். வெண்பா, ஆசிரியம், கலிப்பா ஆகியவற்றில் முதலில் ஒருசீர் கூனாகும்; ஆசிரியப்பாவிலும் கலிப்பாவிலும் இடையிலும் சீர் கூனாய்வரும்; வஞ்சிப்பாவிற்கு இடையிலும் கடையிலும் சீர்கூனாய்வரும்; அசையும் கூனாகவரும்; கலிப்பாவினுள் அடியே கூனாக வருதலும் உண்டு.

## விகாரம்

இது வலித்தல், மெலித்தல், விரித்தல், நீட்டல், குறுக்கல் என அறுவகைப்படும். இவ் விகாரத்தைத் தலைக்குறைத்தல், இடைக்குறைத்தல், கடைக்குறைத்தல் என்று வழங்குதலும் உண்டு.

## நால்வகைச் சொல்

சொல் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நால்வகைப்படும். இயற்சொல்லாவன சோறு, கூழ், பாளிதம், பால் என்றாற்போல மொழிக்கு இயல்பான சொற்கள். திரிசொல் என்பது ஒருபொருள் குறித்த பலசொல்லாகவும், பலபொருள் குறித்த ஒருசொல்லாகவும் காணப்படும். திசைச் சொல் என்பது ஒரு மொழி பேசும் பலபகுதிகளிலும் அவ்வப் பகுதிக்குரியனவாக வழங்கப்பெறும் சொற்களாகும். வடசொல் லாவன ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவாக நடக்கும் சொற்கள்.

## வகையுளி

செய்யுளில் பொருள்நோக்காது ஓசையே நோக்கிச் சீரும் தளையும் சிதையா வண்ணம் சொற்களைப் பிரித்து அலகிட்டறிவது வகையுளி (56).

## வாழ்த்து

இது மெய்வாழ்த்து என்றும், இருபுறவாழ்த்து என்றும் இருவகைப்படும்.

## வசை

இதுவும் மெய்வசை என்றும், இருபுறவசை என்றும் இருவகைப்படும்.

## வனப்பு

வனப்பு எட்டுவகைப்படும். அவை அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பனவாம்.

அம்மையாவது சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளிய பொருள்மேல் சிலவடியால் சொல்லப்படுவது.

அழகாவது செய்யுட் சொல்லாகிய திரிசொற்களால் ஓசை இனியவாக நன்கினிதாகப் புனையப்படுவது.

தொன்மையாவது பழையதாக நிகழ்ந்த பெற்றியின் புணர்க்கப்படுவது.

தோலாவது இழுமென்னும் மெல்லிய சொற்களால் ஒள்ளிய கிடப்பனவும், எல்லாச்சொற்களோடும் பலவடியாய் இயைந்து இனிய கிடப்பனவுமாகும்.

விருந்தாவது புதியவாயினவற்றின்மேல் இப்பொழுதுள் ளாரைப் பாடுவது.

இயைஎன்பது ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் பதினொரு புள்ளி ஈறாக வந்த பாட்டு.

புலனாவது இயற்சொல்லால் பொருள்தோன்றச் செய்யப் படுவது.

இழைபாவது வல்லொற்று யாதும் நீண்டாது நாற்சீரடியையே எழுத்தெண்ணிக் கொள்ளப்பெறும் அடிவகையால் பாடப் பெறுவது. நான்கெழுத்து முதலாக ஆறெழுத்துகளால் (4, 5, 6) அமைவது குறளடி; ஏழெழுத்து முதலாக ஒன்பதெழுத்துகளால் (7, 8, 9) அமைவது சிந்தடி; பத்தெழுத்து முதலாகப் பதினான்கு எழுத்துகளால் ( 10, 11, 12, 13, 14) அமைவது அளவடி; பதினைந்து எழுத்து முதலாகப் பதினேழெழுத்துகளால் (15,16,17) அமைவது நெடிலடி, பதினெட்டு எழுத்து முதலாக இருபதெழுத்துகளால் (18, 19, 20) அமைவது கழிநெடிலடி. இவ்வைவகைஅடிகளாலும் பதினேழு நிலங்களில் பாடப்பெறுவது இழைபு. இவற்றுள் எழுத்து எண்ணுகின்றவழிக் குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஒற்றும் ஆய்தமும் ஒழிந்து நின்ற உயிரும் உயிர்மெய்யும் கொண்டு எண்ணப்படும்.

## பொருள்

பொருளாவது ஐந்திணையும் சார்பாகத் தோன்றி அகமும், அகப்புறமும், புறமும், புறப்புறமும் பொருளாக வருவது.

## பொருள்கோள்

பொருள்கோள் ஒன்பது வகைப்படும். அவை நிரல்நிறை மொழிமாற்று, சுண்ணமொழிமாற்று, அடிமொழிமாற்று,

அடிமறிமொழிமாற்று, பூட்டுவிற்பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள்கோள், அளைமறிபாப்புப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள் கோள், கொண்டுகூட்டுப் பொருள்கோள் என்பனவாகும்.

௱௭ பெயர்நிரல்நிறையும், வினைநிரல்நிறையும் என நிரல்நிறை இரண்டு வகைப்படும். இவையன்றி முறைநிரல்நிறை, மயக்கநிரல்நிறை, எதிர்நிரல்நிறை, எழுத்துநிரல்நிறை, மிகை யெண்நிரல்நிறை, ஒருமுதல் நிரல்நிறை, இருமுதல் நிரல்நிறை, உற்றுணர்நிரல்நிறை என வேண்டுவாரும் உளர்.

இரண்டடி மொழிமாற்றிப் பொருள்கொள்வது அடிமொழி மாற்றுப் பொருள்கோள்; ஓரடிமுதலாகப் பொருள் கொள்ள அமைவது அடிமறிமொழிமாற்றுப் பொருள்கோள்; அடிதோறும் பொருளற்று வருவது புனல்யாற்றுப் பொருள்கோள்; ஒரு செய்யுளில் வந்த ஒரு தொடர் முதலும் இடையும் சென்று பொருள்கொள்ளக் கிடப்பது அளைமறிபாப்புப்பொருள்கோள். இடைநின்ற ஒருசொல் முன்னும் பின்னும் நின்ற சொல்லோடு பொருள்கொள்ளுமாறு அமைவது தாப்பிசைப் பொருள்கோள். பலவிடங்களிலுமுள்ள சொற்களைக் கொண்டுகூட்டிப்பொருள் கொள்ள அமைவது கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

### குறிப்பிசை

எழுத்தல் ஓசையான் வருவது குறிப்பிசை.

### ஒப்பு

அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும், பாவும், பாவினமும் முற்கூறப்பட்ட இலக்கணத்தில் திரிந்தும், பிறழ்ந்தும், மிக்கும், குறைந்தும் வந்தாலும் அவற்றை முன்னோர் கூறியவை என்று கருதி முன்னுள்ளவற்றோடு ஒருபுடை நோக்கி அவற்றின்பாற் படுத்தி வழங்குதற்கு ஒப்பு என்று பெயர் (57).

### வண்ணம்

காரிகையாசிரியர் கூறியதைப்போன்று இவரும் வண்ணம் நூறு என்றே கூறினார்.

### புனைந்துரை

பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறியதனைப்

பெருக்கிச் சொல்லுதலும் எனப் புனைந்துரை இரண்டு வகைப்படும்.

இவையன்றி அடியின்றி நடப்பனவும், ஓரடியான் நடப்பனவும், பாட்டும், உரையும், நூலும், மந்திரமும், பிசியும், முதுசொல்லும், அங்கதமும், வாழ்த்தும் என்னும் இவை ஓரடியானும் பலவடியானும் வரப்பெறும்.

நூல் என்பது முதனூல் வழிநூல் சார்புநூல் என மூவகைப்படும்.

### குற்றமற்ற பா

எழுவகை வழுவும், அறுவகைக் குற்றமும் இல்லாமல் நற்கூறுகள் பலவும் இடம்பெற்று விழுமிய சொற்பொருள் தோன்றும்படியாக அமைவதே குற்றமற்ற பாவின் இலக்கணம்.

### எழுவகை வழு

திணைவழு, பால்வழு, மரபுவழு, வினாவழு, செப்புவழு, காலவழு, இடவழு என வழு ஏழுவகைப்படும்.

திணைவழுவாவது உயர்திணையை அஃறிணையாகவும் அஃறிணையை உயர்திணையாகவும் புணர்ப்பது.

பால்வழுவாவது ஆண்பாலைப் பெண்பாலாகவும், பெண்பாலை ஆண்பாலாகவும், ஒருமைப்பாலைப் பன்மைப்பாலாகவும், பன்மைப்பாலை ஒருமைப்பாலாகவும் புணர்ப்பது.

மரபு வழுவாவது இன்னதற்கு இது உரித்து என்னும் முன்னையோர் தொன்மைநெறி மாறிப் புணர்ப்பது.

வினாவழுவாவது வினவியவிடத்து விடைக்கு ஏலாத தொன்றை வினாவிற் புணர்ந்துரைப்பது.

செப்பு வழுவாவது வினாவிற்குப் பொருந்தாத விடையை உரைப்பது.

காலவழுவாவது இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் என மூன்றுகாலமும் வழுவச் சொல்வது.

இடவழுவாவது தன்மை முன்னிலை படர்க்கை எனும் மூவிடமும் மயங்கச்சொல்வது (58).

## அறுவகைக்குற்றம்

எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற்றம், ஆனந்தக்குற்றம் எனக் குற்றம் ஆறுவகைப்படும்.

எழுத்துக்குற்றமாவது எழுத்ததிகாரத்தோடு மாறுகொள்வது.
சொற்குற்றமாவது சொல்லதிகாரத்தோடு மாறுகொள்வது.
பொருட்குற்றமாவது பொருளதிகார இலக்கணத்தோடு மாறுபடக்கூறுவது.
யாப்புக்குற்றமாவது யாப்பினது இலக்கணம் கெடப் புணர்ப்பது.
அலங்காரக்குற்றமாவது உவமை இலக்கணத்தோடு மாறுபடக் கூறுவது.

ஆனந்தக்குற்றத்துள் எழுத்தானந்தம், சொல்லானந்தம் எனும் இரண்டைக் கூறியுள்ளார்.

எழுத்தானந்தமாவது பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்து அளபெழப் பாடுவது.

சொல்லானந்தமாவது இயற்பெயர் மருங்கில் மங்கலமழியும் வினைச்சொல்லால் பாட்டுடைத்தலைவனைப் பாடுவது (58).

# இலக்கணச் சூடாமணி

திருவும் கல்வியும் சீருந்த ழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.
(விருத். பு.1)
தவளத் தாமரை தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ்க் குறித்தே.

## பாயிரம்

க. மலைமாது போற்ற மலர்மாது வாழ்த்தும்
கலைமாதை நெஞ்சிற் கருதி - (நலமார்)
இலக்கணச்சா ரத்தை எடுத்தியம்பு கின்றேன்
இலக்கணச்சூ டாமணியி தென்று

[1]இச்செய்யுள் (பாயிரம்). (1)

## நூல்

## உறுப்பியல்

### எழுத்து

உ. குறினெடில் ஆவி குறித்தமெய் ஆய்தம்
மறுவிலுயிர் மெய்யோடு[2]மற்ற - [3]நெறியளபும்
நேர்நிரை [யாம் ஈரசைக்கு] நேர்ந்த [4]உறுப்பாகி
ஏர்பெறவே நிற்கும் எழுத்து

என்பது, என்னுதலிற்றோவெனின் எழுத்திற்கு இலக்கணம் உணர்த்திற்று.

1. இத்தொடர் இல்லை-(பே)

உ பாடவேறுபாடு: 2. மற்றும்-(பே) 3. நெறியளவும்-(த) (பே)
4. உறுபாகி-(உ)

அவையாவன: குற்றெழுத்து, நெட்டெழுத்து, ஆவியெழுத்து, மெய்யெ[ழுத்து, ஆய்த] வெழுத்து, உயிர்மெய்யெழுத்து, அளபெடையெழுத்து என எழுத்து ஏழும் வந்தவாறு.

அவற்றுள் குற்றெழுத்தாவன:

"அஇஉ எஒ என்னும் ஐந்தும்
[5]ஓரள விசைக்கும் குற்றெழுத்[6]தென்ப"

நெட்டெழுத்தாவன,

"ஆஈ ஊஏ ஐஓ ஔநெடில்
என்றீ ரளவின் இயலும் என்ப"

ஆவியெழுத்தாவன,

"அகார முதலாய் ஔகாரம் ஈறாம்
இகல்புகல் எழுத்தீ ராறும் உயிரே"

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ என உச்சரித்துக் கண்டுகொள்க.

மெய்யெழுத்தாவன,

"ககரவொற்று[8] முதலா னகரவொற் றீறாய்ப்
பகருமொற் றெழுத்திவை பதினெட்டு மெய்யே"

க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் எனவரும்.

ஆய்தவெழுத்தாவன,

எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு எனவரும்.

உயிர்மெய்யெழுத்தாவன,

"பதினெட்டு மெய்யிற் பன்னிரண்[9]டுயிருடன்
உயிர்மெய் இருநூற் றொருபத்தா றெழுத்தே"

என உயிர்பன்னிரண்டையும் மெய்பதினெட்டையும் உறழ்ந்து கண்டு கொள்க.

---

உரை:பா.வே 5. ஓரள பிசைக்கும், 6. தென்பா, 7. தென்பர்-(பே)
8. முதலாய், 9. ருயிரேற. -(பே)

இனி அளபெடையெழுத்தாவன,
உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென இரண்டு; [என்னை]

[10]"உயிரள பெடையே ஒற்றள பெடையே
அவையிரண் டென்ப அளபெடை யெழுத்தே"

(யாப்.வி. 2. மேற்.)

[என்றாராகலின் ].

அவற்றுள் [11]உயிரளபெடை யாவன ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ, எனவரும்.

இனி[12] ஒற்றளபெடையாவன, மங்ங்கலம், [மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து], அம்ம்பு, மின்ன்னு, தெவ்வ்வர், மெய்ய்யர், [13]சொல்ல்வ, கொள்ள்க, எஃஃகு எனவரும்.

இவை [குறிற்கீழ் அளபெடுத்தன].

அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, முரன்ன்று, குரவ்வ்வை, அரைய்ய்யர், [குரல்ல்கள், திரள்ள்கள், வரஃஃகு] என இவை குறிலிணைக்கீழ் அளபெடுத்தன.

இவ்வெழுத்தெல்லாம் நேர்நிரையாகிய அவ் [விரண்டசைக்கு ஒப்] பாயிருக்கப்பட்ட உறுப்பாகி அணி பெற நிற்கும் எழுத்தாம் என்றவாறு. (2)

## அசை

ங' நெடிலும் குறிலும் [குறிலிணையும்] நின்ற
படியே குறினெடிலும்[14] பங்காய் - நடைபெறினும்
ஒற்றெழுத்துப்[15] பெற்றிடினும்[16] ஒக்குமென்று [நேர்நிரைக்குக்]
கற்றவர்கள் சொன்னார் கனிந்து

என்பது,இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அசைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

---

10. உயிரளபெடையும் ஒற்றளபெடையும், 11. உயிரளபெடையெழுத்தாவன,
12. ஒற்றளபெடையெழுத்தாவன, 13. செல்ல்க-(பே)
ங. பா. வே 14. பாங்காய்-(த), பாவாய்-(பே) 15. ஒற்றெழுத்தும்,
16. ஒக்குமென்றும் - (உ)

நெட்டெழுத்துத் தனியே வரினும், குற்றெழுத்துத் தனியே வரினும், நெட்டெழுத்து ஒற்றடுத்துவரினும், குற்றெழுத்து ஒற்றடுத்து வரினும் நேரசையாம். நெட்டெழுத்தின் மேலே வரும் குற்றெழுத்து நேரசையாவதன்றிச் சீ[ர் முதலில் குற்றெழுத்து] நேரசையாகாதென்க.

குறிலிரண்டு இணைந்துவரினும், குறினெடில் இணைந்து வரினும், [குறிலிரண்டு இணைந்து ஒற்றடுத்து வரினும்] குறினெடில் இணைந்து ஒற்றடுத்துவரினும் நிரையசையாம் என்னை?

> "நெடிற்கு [றி லிணையோடு நின்றசீர் இ]றுதி
> இடைவரு தனிக்குறில் நேரசை என்ப"

என்றாராகலின்.
உதாரணம் வருமாறு:

> "தீது [நீக்கிச் சோதி வாணி]
> பாத மேத்தப் போத மாமே"

இது நேரசை நான்கும் வந்த செய்யுள்.

> "துலைவிலா அருளுமோர் நில [மைசே ரறிவுமே
> கலைமி] னா ளுபைய தாள் கருதவே வருவதே"

இது நிரையசை நான்கும் வந்த செய்யுள். (3)

## சீர்

௪. நேர்நேர் நிரைநேர் நிரைநிரை[17] நேர்நிரை
சீர்சார்[18] அகவலிச் சீர்மிசையின் - நேராக
நேர்சேர வெண்பா நிரைசேர[19] வஞ்சிப்பா
நேர்நிரைசே ரப்பொதுவாய் நிற்கும்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் சீர்க்கு [இலக்கணம் உணர்த்திற்று].

---

௪ பா.வே: 17. நேர்நிரையின்-(உ) 18. சீர்சாறாக்கலிற்-(உ)
19. வஞ்சியிதில்-(உ)

நேர்நேர்-தேமா
நிரைநேர்-புளிமா
நிரைநிரை-கருவிளம்
நேர்நிரை-கூவிளம்

எனவும்,

நேர்நேர்நேர்–தேமாங்காய்
நிரைநேர்நேர்–புளிமாங்காய்
நிரைநிரைநேர்–கருவிளங்காய்
நேர்நிரைநேர்–கூவிளங்காய்

எனவும்,

நேர் நேர் நிரை–தேமாங்கனி
நிரை நேர் நிரை–புளிமாங்கனி
நிரைநிரை நிரை– கருவிளங்கனி
நேர் நிரை நிரை–கூவிளங்கனி

எனவும் இவ்வண்ணம் தண்பூ என்றும் தண்ணிழல் என்றும், நறும்பூ என்றும், நறுநிழல் என்றும் வைத்துப் பதினாறு சீர்க்குப் பொதுச்சீர் என்று அறியவும்.

இவற்றுள் ஈரசைச்சீர் நான்கும் ஆசிரியவுரிச்சீர் என்றும், நேரசை இறுதியான மூவசைச்சீர் நான்கும் வெண்பாவுரிச்சீர் என்றும், நிரையசை இறுதியான மூவசைச்சீர் நான்கும் வஞ்சியுரிச்சீர் என்றும் அறிந்துகொள்க.

நாலசைப் பொதுச்சீர் [என்ற விதப்பினானே] நாலசை வஞ்சிப்பாவிற்கும், சந்தப்பா முதலான பாவினங்கட்கும் சிறப்பிக்கப்பட்ட வு[ரிச்சிரென்]றறிக.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே" (ஐங்குறு. 255)

இஃது ஆசிரியவுரிச்சீர் நான்கும் வந்த செய்யுள்.

"பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றூழுலக்கை பற்றினேற்-கென்னோ

மனனோடு வாயெலாம் மல்குநீர்க் கோழிப்
புனனாடன் பேரே வரும்" (யாப்.வி. 12 மேற்.)

இது வெண்பாவுரிச்சீர் நான்கும் வந்த செய்யுள்.

"பூந்தாமரை [20]போதலம்வர
தேம்புனலிடை மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய [21]மணமுரசொடு
வயற்கம்பலை கயலார்ப்பவும்
நாளும்
மகிழு மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே" (யாப்.வி. 12 மேற்.)

இது வஞ்சியுரிச்சீர் நான்கும் வந்த செய்யுள்.

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம இலர்" (குறள். 1072)

இது நிரையசைச்சீருக்கு வந்த செய்யுள்.

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" (குறள். 1121)

[22]இது நேரசைச்சீருக்கு வந்த செய்யுள்.

"அங்கண்வானத் தமரரரசரும்
வெங்களியானை வேல்வேந்தரும்
[23]வடிவார்கூந்தல் மங்கையரும்
கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்
சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்
கொங்கிவரசோகின் கொழுநிழற்கீழ்ச்
செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்
முழுமதிபுரையும் முக்குடைநீழல்
வெங்கண்வினைப்பகை விளிவெய்தப்
பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப

உரை:பா.வே. 20. போதலமர, 21. மணமுரசொலி-யாப்.வி.12 மேற்.
22. இது நேரசை நான்கும் வந்த செய்யுள்-(பே)
23. வடுவாழ் -(த) (பே)

*அனந்தசதுட்டயம் அவையெய்த*
*[24]நனந்தலையுலகுடன் நவைநீங்க*
*மந்தமாருதம் மருங்கசைப்ப*
*[25]அந்தரத்துந்துபி நின்றியம்ப*
*இலங்குசாமரை [26]எழுந்தலம்வர*
*நலங்கிளர்பூமழை நனிசொரிதர*
*இனிதிருந்*
*தருணெறி நடாத்திய ஆதிதன்*
*திருவடி பரவுதும் சித்திபெறற் பொருட்டே"*

*(திருப்பாமாலை, யாப். வி. 13. மேற்.)*

*என [27] நாலசைப் பொதுச்சீர் அடிதோறும் [28] முதற்கண் வந்தவாறு கண்டுகொள்க.*

குன்றக் குறவ னகவல்பொன் னாரம்வெண் பாட்டுவஞ்சிக்
கொன்று முதாரணம் பூந்தா மரையென்ப ஓரசைச்சீர்
நன்றறி வாரிற் கயவரும் பாலொடு நாலசைச்சீர்க்
கன்றதென் றாரள்ளற் பள்ளத்தி னோடங்கண் வானத்துமே (யாப். கா. 9)

*இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே நான்கு பாவும் முதனினைத்துக் கொள்க. (4)*

## தளை

ரு. ஈரசையின் மூவசையின் எண்ணிரண்டு நாலசையின்
சீர்மிசையின் நேர்நிரையேல் சேர்ந்ததளை-[29]ஆருமே
[ஈரா சிரியம் இயற்சீர்வெண் சீர்கலிமற்
றேரான] வஞ்சியிரண் டேழ்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் தளைக்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

உரை: பா. வே: 24. நனந்தலையுலகுடை -யாப்.வி.13 மேற்.

25. துந்துமி -(பே). 26. எழுந்தலமர -யாப். வி. 13 மேற்.

27. நாலசைப் பொதுச்சீர் பதினாறும் -(பே)

28. முதற்கண்ணே -(பே)

ரு. பா. வே 29. ஆறுமே -(உ)

அவையாவன:

மாமுன் நேர்வரில் நேரொன்றாசிரியத்தளை
விளம்முன் நிரைவரில் நிரையொன்றாசிரியத்தளை

[30]இவைமாறி,

மாமுன் நிரையும் விளம்முன் நேரும் இயற்சீர் வெண்டளை
காய்முன் நேர்வரில் வெண்சீர்வெண்டளை
காய்முன் நிரைவரில் கலித்தளை
கனிமுன் நேர் (வரில்) ஒன்றாத வஞ்சித்தளை
கனிமுன் நிரைவரில் ஒன்றிய வஞ்சித்தளை

என்று இவ்வேழ்தளையும் அறிக.

'மற்றேரான வஞ்சி' என்று சிறப்பித்தவதனால் நாலசை வஞ்சிப்பாவிடத்தில் [நாலசைப் பொதுச்சீர்] பதினாறும் தளையுரைக்கும்போது பூச்சீர் எட்டும் காய்ச்சீர் போலவும், நிழற்சீர் எட்டும் கனிச்சீர் போலவும் தளையுரைத்துக் கொள்க.

'ஈரசையின் மூவசையின்' என்ற முறைமையானே ஈரசைச்சீர் மூவசையினும், மூவசைச்சீர் நாலசையினும் வருவதேயன்றித் தளை தடுமாற்றமாய் வருதல் பாவிற்குச் சந்தச்சிதைவென்று அறிக. (என்னை?)

" ச [ந்தம் சிதைந்] து தளைதடு மாறில்
எந்த வழிக்கும் இயல்பில தென்ப"

என்றாராகலின்.

உதாரணம் வருமாறு:

*"திருமழை தலைஇய இருணிற விசும்பின்
[31]விண்ணதிர் உமிழிசை கடுப்பப்
பண்ணமைத் தவர்தேர் சென்ற வாறே" (யாப். வி. 19 மேற்.)

இது நிரையொன்றாசிரியத்தளையான் வந்த செய்யுள்.

உரை.பா.வே. 30. இதில் -(பே)

*இவ்வெடுத்துக்காட்டுப்பாடலின் முதல் இரண்டடிகள் மலைபடு கடாத்தைச் சேர்ந்தவை (மலைபடு. 1,2).

31. விண்ணெதிர் இமிழிசை-யாப்.வி.19 மேற்.

"உள்ளார் கொல்லோ[32] தோழி முள்ளுடை
அலங்குகுலை ஈந்தின் சிலம்புபொதி செங்காய்
துகில்பொதி பவளம் ஏய்க்கும்
அகில்படு கள்ளியம் காடிறந் தோரே" (ஐங்குறு. தனிப். 2)

இது நேரொன்றாசிரியத்தளையான் வந்த செய்யுள்.

"சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்-மலைவிலங்கு
தார்மாலை[33] மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போது" (தண்டி 16 மேற்.)

இது வெண்சீர் வெண்டளையானும் இயற்சீர் வெண்டளையானும் வந்த செய்யுள்.

" மந்தாநிலம்[34] மருங்கசைப்ப
வெண்சாமரை[35] புடையிரட்டச்
செந்தாமரை[36] நாண்மலர்மேல்
எனவாங்கு
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே"
(திருப்பாமாலை, யாப். வி. 21 மேற்.)

இஃது ஒன்றிய வஞ்சித்தளையும் ஒன்றாத வஞ்சித்தளையும் வந்த செய்யுள்.

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த
சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
[37]எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம் பாய்ந் தொளித்ததே"
(யாப். வி. 15 மேற்.)

இது கலித்தளையான் வந்த செய்யுள்.

---

உரை.பா.வே. 32. தோழி, 33. மார்பா -(த)
34. வந்தசைப்ப -இலக்.வி.செய்.9மேற்.
35. புடைபெயர்தர, 36. நாண்மலர்மிசை-யாப்.வி.5 மேற்.
37. எல்லையினீர்

அங்கண்வானத்து' (யாப். வி. 13 மேற்.) இது நாலசை[ப் பொதுத்] தளைக்கு வந்த உதாரணம்.

திருமமழ உள்ளா ரகவல் சிலைவிலங் காகும்வெள்ளை
மருளறு வஞ்சிமந் தாநிலம்[38] வந்துமை தீர்கலியின்
தெரிவுறு பந்தநல்லாய் செல்வப் போர்கதக் கண்ணனென்ப
துரிமையின் கண்ணின்மை ஒரசைச் சீருக் குதாரணமே (யாப். கா. 11)

இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே முதனினைத்துக்கொள்க. (5)

## அடி

சூ. இருசீர் [குறளடிமுச்] சீர்சிந்து நாற்சீர்
தருமளவு நேரடியைந் தாகி - வருசீர்
நெடில்மிக்க சீர்விருத்தம் நீடலெண்ணி[39]ரண்டும்
குடிலக் கழிநெடிலாம்[40] கூறு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அடிகளது வேறுபாடும் சீரின்[41] அளவும் உணர்த்திற்று.

இருசீரான் வந்தவடி குறளடியென்றும்,
முச்சீரான் வந்தவடி சிந்தடியென்றும்,
நாற்சீரான் வந்தவடி அளவடியென்றும் நேரடியென்றும்,
ஐஞ்சீரான் வந்தவடி நெடிலடியென்றும், [42]அதனின்
மிக்கசீரான் விருத்தமென்றும், எண்சீர் முதற் பதினாறு சீரளவும்
கழிநெடிலடி யென்றும் வழங்கப்படும் (என்றவாறு).

'குடிலக் கழிநெடில்' என்று சிறப்பித்தவதனால் சந்தம் மிகுந்தும், அகவற்சீர் விரவியும், அகவற்சீர் வெண்சீர் [விரவியும் தம்முள்] வேறுபட்டும் வருவன மிகுதியாதலால் 'குடிலக்கழிநெடில்' என்று கூறினார். இவற்றுக்கு உதாரணம் வருமாறு.

---

உரை.பா.வே. 38. வந்தமை-(த)
சூ. பா. வே: 39. ரண்டு -(த)
உரை.பா.வே. 40. உறும்-(உ)
41. வரையறையும் , 42. ஐந்துசீரின் -(பே)

"திரைத்த சாலிகை
நிரைத்த போனிரந்
திரைப்ப தேன்களே
விரைக்கொள் மாலையாய்" (சூளா. 744)

இது குறளடிக்கு வந்த உதாரணம்.

"இருது வேற்றுமை யின்மையாற்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய்" (சூளா. 742)

இது சிந்தடிக்கு வந்த உதாரணம்.

"தேம்பழுத் தினியநீர் மூன்றும் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டீட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே" (சூளா. 49)

இஃது அளவடிக்கு வந்த உதாரணம்.

"வென்றான் வினையின் தொகையாய விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வினொழி யாது முற்றும்
சென்றான் திகழும் சுடர்சூழொளி மூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்"
(சூளா. 1)

இது நெடிலடிக்கு வந்த உதாரணம்.

"இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள் எனப்பெயர்
இனவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமிக் குழம்புகொண் டெதிர்ந்தெழ
நுடங்கிய இலையத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலர்ச் சந்தனத்
[43]திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடல் [44]திரையொடும்
பொருதல தவியாதே" (சூளா. 877)

இஃது அறுசீர்க்கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

---

உரை.பா.வே: 43. திரைகளைக், 44. திரையொடு -(த) (பே)

"தோ டணி மகளிர் போன்ற
[45]துணை மலர்க் கொம்பர் கொம்பின்
ஆடவர் போலத் [46]தும்பி
அடைந்தன [47]வளியின் ஒல்கி
ஊடிய மகளிர் போல
ஒசிந்தன ஊடல் தீர்க்கும்
சேடரில் சென்று புல்லிச்
சிறுபுறம் தழீஇய [48]வண்டு" (சீவக. 852)

இதில் பேதமும் கண்டு கொள்க.

"கணிகொண் டலர்ந்த நறவேங்கை யோடு
கமழ்கின்ற காந்த ளிதழால்
அணிகொண் டலர்ந்த வனமாலை சூடி
அகிலாவி குஞ்சி கமழ
மணிகுண் டலங்கள் இருபாலும் வந்து
வரையாகம் மீது திவளத்
துணிகொண் டிலங்கு சுடர்வேலி னோடு
வருவானி தென்கொ றுணிவே" (சூளா. 1327)

இஃது எழுசீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

"மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரும் நாண
முழுதுலக[49] மூடியெழில் முளைவயிரம் நாற்றி
தூவடிவி னாலிலங்கு வெண்குடையி னீழற்
சுடரோயுன் அடிபோற்றிச் சொல்லுவதொன் [50]றுண்டால்
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலங்கொளா வாலெமது புண்ணியர்தங் கோவே"
(சூளா. 1904)

இஃது எண்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

---

உரை: பா.வே: 45. துணர்மலர்க், 46. வண்டு,

47. வளியிற் கொல்கி, 48. தும்பி - சீவக.852 உ.வே. சா. பதிப்பு

49. முடிவினை-(த), முடிநெடு-(பே) 50. றுண்டேல் -(பே)

"இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின்
எதிர்ந்த தாமரை இலங்கு மாழியின்[51] விலங்கியாள்
முடங்கு வாலுளை மடங்கல் மீமிசை
முனிந்து சென்றுடன் முரண்ட ராசனை[52] முருக்கியாள்
வடங்கொள் மென்முலை நுடங்கு நுண்ணிடை
மடந்தை சுந்தரி வலங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை இடங்கொள் சேவடி
தலைக்கு வைப்பவர் தமக்கு வெந்துயர் தவிர்க்குமே"
(யாப்.வி.25 மேற்.)

இஃது ஒன்பதின் சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

"கொங்கு தங்கு கோதை ஒதி மாத ரோடு
கூடு நீடு மோடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
நாத வென்று நின்று தாழ
அங்க பூர்வ மாதி யாய ஆதி நூலின்
நீதி[53] ஒது மாதி யாய
செங்கண் மாலை[54] மாலை காலை சேர்நர் சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே" (யாப்.வி.25 மேற்.)

இது பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

இவ்வாறு பதினாறு சீரளவும் ஒன்றுக்கொன்று பேதமாய் வருவன [வும் கண்டுகொள்க]

திரைத்த விருது குறள்சிந் தளவடி தேம்பழுத்த
விரிக்கு நெடிலடி வேனெடுங் கண்ணிவென் றான்வினையின்
இரைக்கும் கணிகொண்ட முவடி யோடிடங் கொங்குமற்றும்
கரிக்கைக் கவான்மருப் பேர்முலை மாதர் கழிநெடிலே (யாப்.கா.13)

இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே முதனினைத்துக்கொள்க.(6)

---

உரை. பா. வே: 51. விலங்கியோள்,
52. முருக்கியோள்,
53. யோடும்,
54. காலை மாலை - யாப்.வி. 25 மேற்.

## இனவெழுத்து அனு

எ. அகரமோ டாகாரம் ஐகாரம்[55] ஔவாம்
இகரமோ டீகார எஏ - உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ[56] தச்சகரம்
ஆகாத அல்ல அனு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் [மோனைக்கு] இவ்வெழுத்தினமாம் என்பது உணர்த்திற்று.

அகரம் ஆகாரம் ஐகார ஔகாரம் ஒன்றுக்கொன்று இனமாம்;
இகரம் ஈகாரம் எகரம் ஏகாரம் ஒன்றுக்கொன்று இனமாம்;
உகரம் ஊகாரம் ஒன்றுக்கொன்று இனமாம்;
ஒகரம் ஓகாரம் ஒன்றுக்கொன்று இனமாம்;

மெய்யினும்,

ஞகரமும் நகரமும், மகரமும் வகரமும், தகரமும் சகரமும் ஒன்றுக்கொன்று இனமாம்[57] என்றவாறு.

ககரத்துக்குக் ககரமே பகரத்துக்குப் பகரமே மோனை; மற்ற மெய்களெல்லாம் [மொழிக்கு முதலாகா] மையின் மோனை யாகாது என்றவாறு. (7)

## தொடை

அ. மோனை எதுகை முரணளவோ டிறியைபும்
ஏனை[58] [வழியும் இடைகடையும்] - ஆனதோர்
அந்தாதி[59] ரட்டையி தல்லாத செந்தொடையும்
தந்தார் கவிக்கணிய [தாய்]

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அம் மோனை முதலியவற்றிற்குப் பெயரிடுதல் நுதலிற்று.

---

எ. பா. வே: 55. ஔவ்வாம், 56. தச்சாகாரம்.(உ)
57. மோனைவருமிடத்து என்றவாறு.(பே)

அ. பா. வே: 58. மோனை - (பே.) 59. ரட்டையது வல்லாத - (உ.)

CENTRAL LIBRARY
Accession No. 16308
Date of purchase:
Call Number: 499 ...



அடிமோனை, அடியெதுகை, அடிமுரண் [illegible] அடியியைபும் வழிமோனை, இடைமோனை, கடைமோனையும் அந்தாதித்தொடையும் இரட்டைத் தொடையும் செந்தொடையும் என்னும் பதினொரு விதமும் பாவும் பாவினமுமாகப் பாடப்பட்ட கவிகளுக்கும் [பொதுத் தொடை] களாம் என்றவாறு. (8)

கூ முதலிறுதி ஒரெழுத்தேல் மோனையியை பென்ப
எதுகையிரண்[60] டாமெ[ழுத்தங் கெய்தில்- வி]தியின்
முரண்முரணாய்[61] நின்ற முறையளபும் அப்பேர்
சரண்முழு தும்பெறுவ தால்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் முறையானே அம் மோனை (முதலியவற்றிற்கு) இலக்கணம் உணர்த்திற்று.

அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடிமோனைத் தொடை யென்றும், அடிதோறும் இறுதியெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடியியைபுத்தொடையென்றும், அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடியெதுகைத்தொடையென்றும், அடிதோறும் முரண்வரத் தொடுப்பது அடிமுரண் (தொடை) யென்றும், அடிதோறும் அளபெடை வரத்தொடுப்பது அடியளபெடைத்தொடை யென்றும்[62] வரும் என்றவாறு.

அதற்கு உதாரணம் வருமாறு:

"மாவும் புள்ளும்[63] வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவும் கூம்ப
மாலை தொடுத்த கோதையும் கமழ
மாலை வந்த வாடை
மாயோள் இன்னுயிர் புறத்திறுத் தற்றே" (யாப்.வி.35மேற்.)

அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவந்தமையால் அடிமோனைத் தொடைக்கு வந்த உதாரணம்.

---

கூ. பா. வே: 60. எதுகை யிரண்டா மெழுத்தங்கெய்தல் -(பே)
61. முரண் முரணாநின்ற -(உ) (பே)
62. பெயராம் என்றவாறு -(பே) 63. பதிவயிற் -(த) (பே)

"இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே
நன்மா மேனிச் சுணங்குமார் அணங்கே
ஆடமைத்[64] தோளி ஊடலும் அணங்கே
அரிமதர் மழைக்கண்ணும் அணங்கே
திருநுதல் பொறித்த திலதமும் அணங்கே" (யாப்.வி.40 மேற்.)

அடிதோறும் இறுதியெழுத்து ஒன்றிவந்தமையால் அடியியைபுத் தொடைக்கு வந்த உதாரணம்.

"வடியேர்கண் ணீர்மல்க வான்பொருட்கண் சென்றார்
கடியார்[65] கனங்குழலாய் காணார்கொல் காட்டின்
இடியின் முழக்கஞ்சி ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை" (யாப்.வி.36 மேற்.)

அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவந்தமையால் அடி யெதுகைத் தொடைக்கு வந்த உதாரணம்.

"[66]இருள்பரந் தன்ன மாநீர் மருங்கின்
நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை
இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின் அன்ன நுண்தா திரைக்கும்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே"
(யாப்.வி.38 மேற்.)

அடிதோறும் முரணத்தொடுத்தமையால் அடிமுரண்தொடைக்கு வந்த உதாரணம்.

"ஆஅ அளிய அலவன்தன் பார்ப்பினோ
டீஇர்[67] இரையுங்கொண் டீரளைப் பள்ளியுள்
தூஉந் திரையலைப்பத் துஞ்சா[68] திறைவன்தோள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதல்
ஓஒ உழக்கும் துயர்" (யாப்.வி.41 மேற்.)

இஃது அடிதோறும் அளபெடை வரத் தொடுத்துவந்தமையால் அடியளபெடைத் தொடைக்கு வந்த உதாரணம். (9)

உரை.பா.வே.64. தோளிக்கூடலும் -(த) (பே) 65. கனங்குழாய்- யாப். வி. 36 மேற்.
66. இருள் விரிந்தன்ன -யாப்.வி.38 மேற். 67. இலைக்கொண் -(த)
68. துறைவன்தோள் -யாப். வி. 41 மேற்.

## தொடை விகற்பம்

ம. இணைப்பொழிப்பொ ரூஉக்கூழை எய்துமேல்கீழ் முற்றாம்
துணையுதித்து மூன்றுடனே தோன்றிப் - பிணைவிழிக்கண்
மானேநான் கெய்தி வருநான் கிரண்டுமூன்
றூனமுற நான்குமுற ஒக்கும்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் முன்சொன்ன இவ் வைந்து தொடைகளையும் விகற்பித்து முப்பத்தைந்து [தொடைகளாக] விரித்துக் கூறுதல் உணர்த்திற்று.

'இணைப்பொழிப் பொரூஉக்கூழை எய்து மேல்கீழ் முற்றாம்' என்பது இணைமோனைத்தொடை, பொழிப்பு மோனைத் தொடை, ஒரூஉ மோனைத்தொடை, கூழைமோனைத் தொடை, மேற்கதுவாய் மோனைத்தொடை, கீழ்க்கதுவாய் மோனைத் தொடை, முற்றுமோனைத்தொடையெனவும்;

இணையியைபுத்தொடை, பொழிப்பியைபுத்தொடை, ஒரூஉ வியைபுத்தொடை, கூழையியைபுத்தொடை, மேற்கதுவா யியைபுத்தொடை, கீழ்க்கதுவா யியைபுத்தொடை முற்று இயைபுத்தொடை யெனவும்;

இணையெதுகைத்தொடை, பொழிப்பெதுகைத்தொடை, ஒரூஉவெதுகைத்தொடை,கூழையெதுகைத்தொடை,மேற்கதுவா யெதுகைத்தொடை, கீழ்க்கதுவாயெதுகைத் தொடை, முற் றெதுகைத்தொடையெனவும்;

இணை முரண்தொடை, பொழிப்புமுரண்தொடை, ஒரூஉ முரண்தொடை, கூழை முரண்தொடை, மேற்கதுவாய் முரண்தொடை, கீழ்க்கதுவாய்முரண்தொடை, முற்றுமுரண் தொடையெனவும் ;

இணையளபெடைத்தொடை, பொழிப்பளபெடைத்தொடை, ஒரூஉ வளபெடைத்தொடை, கூழையளபெடைத்தொடை, மேற்கதுவாயளபெடைத் தொடை, கீழ்க்கதுவாயளபெடைத் தொடை, முற்றளபெடைத்தொடை யெனவும் இவ்வாறு விரித் துரைத்துக்கொள்ளவும்.

உ

இவற்றின் விகற்பம் அறியுமாறு: 'நுணையுதித்து மூன்றுடனே தோன்றி' [என்பது] முதற்சீரும் இரண்டாம் சீரும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது இணைமோனைத்தொடையென்றும், முதற்சீரும் மூன்றாம் சீரும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது பொழிப்புமோனைத்தொடையென்றும்;

'நான்கெய்தி' என்பது முதற்சீரும் நான்காம்சீரும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது ஒரூஉ மோனைத் தொடையென்றும்;

'வருநான்கு இரண்டுமூன்று [ஊனமுற' என்பது] நிரல்நிறையாக நான்காம் சீரொழிய மற்ற மூன்று சீரும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது கூழைமோனைத் தொடையென்றும்; இரண்டாம் சீரொழிய மற்றமூன்றுசீரும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது மேற்கதுவாய் மோனை யென்றும்; மூன்றாம்சீரொழிய மற்றமூன்றுசீரும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது கீழ்க்கதுவாய் மோனையென்றும்;

'நான்குமுற' என்பது நான்குசீரும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது முற்றுமோனைத்தொடையென்றும் வழங்கப்படும்.

இணையியைபு முதலான ஏழு தொடையும் நான்காம்சீர் முதற்கொண்டு சொல்லிக்கொள்ளவும். [இணையெதுகை], இணைமுரண், இணையளபெடை முதலானதும் இணைமோனைக் கேற்றபடி சொல்லிக்கொள்ளவும்.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"அணிமலர் அசோகின் தளிர்நிலம் கவற்றி
அரிக்குரற் கிண்கிணி அரற்றும் சீறடி
அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி
அகன்ற அல்குல் அந்நுண் [69] மருங்குல்
அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள்
அவிர்மதி அனைய திருநுதல் அரிவை
அயில்வேல் அனுக்கி அம்பலைத் தமர்த்த
கருங்கயல் நெடுங்கண் நோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே"

(யாப். வி. 35 மேற்.)

உரை.பா.வே: 69. மருங்கில் -(த) (பே)

இஃது இணைமோனைத்தொடை முதலாகிய ஏழுவிகற்பத் தொடைக்கும் முறையானே வந்த செய்யுள்.

"மொய்த்துடன் தவழும் முகிலே பொழிலே
மற்றதன் அயலே முத்துறழ் மணலே
நிழலே[70] அனையதன் அயலது கடலே
மாதர் நகிலே வல்லே இயலே
வில்லே நுதலே வேற்கண் கயலே
பல்லே தளவம் பாலே சொல்லே
புயலே குழலே மயிலே இயலே
அதனால்
இவ்வயின் இவ்வுரு இயங்கலின்
எவ்வயி னோரும் இழப்பர்தம் நிறையே" (யாப்.வி.40.மேற்.)

இஃது இணையியைபுத்தொடை முதலாகிய ஏழுவிகற்பத் தொடைக்கும் முறையானே வந்த செய்யுள்.

"பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்திப்
[71]பன்னரும் கோங்கின நன்னலம் கவற்றி
மின்னவிர் ஒளிவடம் தாங்கி மன்னிய
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி
என்னையும் இடுக்கண் துன்னுவித் தின்னடை
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க்
கன்னியம் புன்னை இன்னிழல் துன்னிய
[72]மயிலேய் [73]சாயல் வாணுதல்
அயில்வேல் உண்கணெம் அறிவு தொலைத் தனவே"
(யாப்.வி.36 மேற்.)

இஃது இணையெதுகைத்தொடை முதலாகிய ஏழுவிகற்பத் தொடைக்கும் முறையானே வந்த செய்யுள்.

"சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு
சுருங்கிய நுசுப்பிற் [74]பெருகுவடந் தாங்கி
குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து
சிறிய பெரிய [75]நிகர்மலர்க் கோதைதன்

பா. வே: 70. இனியதன் -(யாப்.வி.40 மேற்.) 71. பன்மலர்க் -யாப்.வி.36 மேற்.
72. மயிலேர் -(பே) 73. சாயலவ் -யாப்.வி.36 மேற்.
74. பெருங்குவடந் -(த) 75. நிகர்மலைக் -(த) (பே)

வெள்வளைத் தோள்களும் சேயரிக் கருங்கணும்
இருக்கையும் நிலையும் ஏந்தெழில் : இயக்கமும்
துவர்வாய்த் தீஞ்சொலும் உவந்தெனை முனியா
தென்றும் இன்னணம் ஆகுமதி
பொன்திகழ் நெடுவேல் [76]போர்வல் லோயே"
(யாப்.வி.38 மேற்.)

இஃது இணைமுரண்தொடை முதலாகிய ஏழுவிகற்பத் தொடைக்கும் முறையானே வந்த செய்யுள்.

"[77]தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப்
[78]பூஉங் குவளைப் போஒ தருந்திக்
காஅய்ச் செந்நெல் கறித்துப் போஒய்
மாஅத் தாஅள் மோஒட் டெருமை
தேஎம் புனலிடைச் சோஒர் பாஅல்
பீஇன் ஆஅர்ந் துகளும் சீஇர்
[79]ஏஎர் ஆஅர் நீஇள் நீஇர்
ஊரான் செய்த கேண்மை
ஆய்வளைத் தோளிக் கலரா[80]னாதே" (யாப். வி. 41 மேற்.)

இஃது இணையளபெடைத்தொடை முதலாகிய ஏழுவிகற்பத் தொடைக்கும் முறையானே வந்த செய்யுள்.

'பிணைவிழிக்கண் மானே' என்பது மகடூஉ முன்னிலை. (10)

௰க. அந்தமுதல் ஆகுதலந் தாதி அடுக்குச்சொல்
வந்ததி ரட்டையிது [81]வாராதேல் - செந்தொடையாம்
ஐஞ்சீர் முதல்பதி னாறுசீர்ப் பாவுக்கும்
மிஞ்சு தொடைவிகற்பம் [82]வேண்டு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அந்தாதித்தொடையும், இரட்டைத்தொடையும், செந்தொடையும் இதுவல்லாத பாவினத்துட் பிறந்த பல செய்யுட்கும் வேண்டிய தொடைவிகற்பமும் உணர்த்துதல் நுதலிற்று.

---

பா.வே: 76. பரவல்லோயே -(த) 77. அதானுட் -(த) (பே)

78. பூஉக் குவளைப் -யாப்.வி.41. மேற்.

79. ஆஅ னாஅ நீஇர்-(த), ஏஎர் ஆஅ நீஇர் -(பே) 80. னாவே -(த) (பே)

௰க. பா.வே: 81. வாராதே -(த) 82. வேண்டும் -(த) (பே)

ஒரு செய்யுளின் அந்தம் ஒரு செய்யுளுக்கு ஆதியாகுதல் அந்தாதித்தொடை யென்றும் அது எழுத்தந்தாதியும்,[83] அசையந்தாதியும், சீரந்தாதியும், அடியந்தாதியும் என நான்கு வகைப்படும்.

ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத்தொடுப்பது[84] இரட்டைத்தொடை யென்றும், முற்ப (டக்கூறிய) மோனை முதலாகிய தொடையும் தொடை விகற்பமும் போலாமை வேறுபடத்தொடுப்பது செந்தொடையென்றும் பெயரிட்டு வழங்கப்படும்.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"உலகுடன் விளக்கும் ஒளிகிளர் அவிர்மதி.
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை ஆசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தர் அஃதென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே"

(திருப்பாமாலை, யாப். வி. 52 மேற்.)

இது நான்கந்தாதித் தொடைக்கும் வந்த உதாரணம்.

"ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்
விளக்கினிற் சிறெரி ஒக்குமே ஒக்கும்
குளக்கொட்டிப் பூவின் நிறம்" ( யாப். வி. 51 மேற்.)

இஃது ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத்தொடுத்து வந்தமையால் இரட்டைத் தொடைக்கு வந்த உதாரணம்.

"பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே" (தமிழ்நெறி.17)

---

83. வேறு சில அந்தாதித்தொடைவகைகள்: மண்டல எழுந்தந்தாதி செந்நடை எழுத்த்ந்தாதி, மண்டல அசையந்தாதி, செந்நடை அசையந்தாதி, மண்டலச்சீரந்தாதி, செந்நடைச் சீரந்தாதி, மண்டல அடியந்தாதி, செந்நடை அடியந்தாதி, மண்டல மயக்கந்தாதி, செந்நடை மயக்கந்தாதி, மண்டல இடையிட்ட அடியந்தாதி, செந்நடை இடையிட்ட அடியந்தாதி (யாப். வி. 52 மேற்.)

84. இவ்விடத்தில் தெளிவில்லாதிருக்கிறது-(பே).

இது முதற்றொடையும் விகற்பத்தொடையும்[85] போலாது வேறுபட்டு வந்தமையாற் செந்தொடைக்கு வந்த உதாரணம்.

இவ்விலக்கணத்தில் 'ஐஞ்சீர்முதற் பதினாறுசீர்ப் பாவுக்கு மிஞ்சு தொடைவிகற்பம் வேண்டு' என்ற[86] விகற்பத்திலே இங்கெடுத்துரைத்த தொடைகளெல்லாம் நாற்சீரடிப் பாவுககு அல்லது நாற்சீரின் மேற்பட்ட செய்யுட்கு[87] ஏறாதென்று அறிக; மற்றச் செய்யுட்கு வேறெடுத்து ஓதுகின்றார்.

"ஐஞ்சீர் [முதலா அமை] தரு பாவினத்
தெஞ்சா இயல்கடை இடைவழி யென்ப"

என்றாராகலின், அப்பாவினத்துக்கெல்லாம் (தொடைவிகற்ப) வேற்றுமை[88] உண்டென்றறிக. (11)

## சிறப்பு மோனைகள்

௧௨. நாற்சீ ரடிபொழிப்பு நன்றேஐஞ் சீர்கடையாம்
மேற்சீ ரடிகணடு வீறெய்தும்- [வாச்ச]தொரு
பன்னிருபன் னான்கு பதினாறு சந்தமுதல்
துன்னுவழி மோனையெனச் சொல்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் நாற்சீரடிச் செய்யுள் முதலாகப் பதினாறு சீரளவும் வரும் பாவிகற்பங்களுக்கு வரும் சிறப்பு மோனை கூறுதல் உணர்த்திற்று.

நாற்சீரடிப் பாவுக்கும் பாவினங்களுக்கும் சிறப்புமோனை பொழிப்புமோனை எனப்படும்.

ஐஞ்சீரடிக்குக் கடைமோனை சிறப்பு எனப்படும்; அறுசீர்முதற் பதின் சீரளவும் இடைமோனை சிறப்பு எனப்படும்; பதினொரு சீர்முதற்பதினாறு சீரளவும் வழிமோனை சிறப்பு எனப்படும்.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"என்னே சிலமடவார் எய்தற் கெளியவோ
பொன்னே [அனபாயன்] பொன்னெடுந்தோள்-முன்னே

பா. வே: 85. போலாமை, 86. விகற்பத்தினாலே-(பே)
87. ஏறாது-பொருந்தாது, 88. உண்டேயென்றறிக -(பே)

தனவேயென் றாளுஞ் சயமடந்தை தோளாம்
புனவேய் மிடைந்த பொருப்பு" (தண்டி. 3 மேற்.)

இது பொழிப்பு மோனைக்கு வந்த உதாரணம்.

"வண்டார் [மதுவொடு சததள] நெகிழ்தரு மலர்வாச
வெண்டா மரையில்வெண் ணிலவுமி ழுழகிய மெய்யாளைக்
கொண்டா டிய[வெழில் வசினி]முன் னோர்புடை குடியாகக்
கண்டார் பலகலை கற்றார் கதிநிலை கண்டாரே"

இது கடைமோனைக்கு வந்த உதாரணம்.

'நன்றே ஐஞ்சீர் கடையாம்' என்றே மிகுதியால் இடையிலே வருதலும் சிறப்புடைத்து. அதற்கு உதாரணம், 'வென்றான் வினையின்' (சூளா. 1) எனவும் கொள்க.

'தோட்டணி மகளிர்' (சீவக. 852) இடைமோனைக்கு வந்த உதாரணம். 'கணிகொண்ட' (சூளா. 1327), 'மூவடிவி' (சூளா. 1904) யென்பன [முதலாயினவும்] இடைமோனைக்கு வந்த உதாரணம்.

'பன்னிருபன் னான்கு பதினாறு சந்தமுதல்' என்பதற்குத் 'துன்னுவழி மோனையென' மிகுத்தெடுத்தோதியவதனால் செய்யுள் ஒருவழிப் பட்டதல்ல வென்பதூஉம், சிறுகியும் பெருகியும் வருதலுமுண்டென்பதூஉம், சந்தமுடைத் தென்பதூஉம் அறிதற்பொருட்டுச் செய்யுள் தொடைகளை விரிக்கில் எனைத்தும் பல [வாம் மோ] னைக்கு அளவில்லை ஆதலில் இவ்விலக்கணத்தில் தொகுத்துணர்த்தின விகற்பத் தானே விரித்துணர்ந்துகொள்க. (12)

ம ங. அடுத்தும் இடையிட்டும் அந்தந்தப் [பாவுக்கு
எடுத்தப் படியங் கெதிர்ந்தும்] - தொடுத்து
நடைபெறுதல் பாவினத்தி னல்வழியாம் என்று
தொடைவிகற்பம் கண்டறிந்து சொல்

என்பது, இவ்விலக்கணம்என்னுதலிறம்றாவெனின் வழி [மோனை விரித்து] உணர்த்திற்று.

சீருக்குச்சீர் அடுத்தும், ஒன்றுவிட்டு ஒன்றுபற்றியும், செய்யுட்கேற்றபடி ஓசை குன்றா [தெதிர்ந்தும்], முச்சீர்மேல் வந்தும், எழுசீர்மேல் வந்தும், பதினொருசீர்மேல் வந்தும்,

சந்தப்பா முதலானதெய்தில் இனம்வழுவாமல் [இடையிட்டும்] எதிரெதிர் தோன்றியும், இன்னும் விகற்பம் மிக்கும் நடக்கும் என்றவாறு.

உதாரணம் வருமாறு:

"துனைவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேம்
துணைவிழிசேர் துயிலை நீக்கி
இனவளைபோல் இன்னலம்சோர்ந் திடருழப்ப
இறந்தவர்நாட் டில்லை போலும்
தனியவர்கள் தளர்வெய்தத் தடங்கமலம்
தளையவிழ்க்கும் தருண வேனில்
பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலில்
பரப்பிவரும் பருவத் தென்றல்" (தண்டி. பொது. 19 மேற்.)

இது சீர் முழுதும் அடுத்துவந்தமையால் அடுத்தவழிமோனை.

"முன்னைத் தஞ்சிற்றில் முழங்கு கடலோதம் மூழ்கிப் போக
அன்னைக் குரைப்ப னறிவாய் கடலேஎன் றலறிப் பேரும்
தன்மை மடவார் தளர்ந்துகுத்த வெண்முத்தம்[89] தகைசால் கானல்
புன்னை[90] அரும்பென்னப் போவாரைப் பேதுறுக்கும்
புகாரே எம்மூர்"
(தண்டி. பொது. 19 மேற்., பேரா. தொல். பொருள். 405 மேற்.)

இஃது இடையிட்டுவந்த வழிமோனை. என்னை?

"மோனை இயைபெதுகை முரணளபோ டாதி
தான மின்ன [தென்னும்] தாமளவில் என்ப"

என்றாராகலின்.

அளவில்லாத மோனை விகற்பமெல்லாம் தத்தம் பாவினிற் கண்டு கொள்க என்றவாறு.

என்னே பொழிப்பு வண்டார் கடைதொடுவென் றானிடையாம்
கொன்னே கணிகொண்ட மூவடி [வோடிடங்கை கொங்கு] ம:தே
இன்னே துணையடுத் தெய்தல்முன் னைக்கிடை யிட்டதுவாம்
மின்னேர் [கொடி] மாதே வழியின் விகற்பமிதே

பா. வே. 89. தயங்கு, 90. அரும்பேய்ப் -(தண்டி. பொது. 19 மேற்.)

என்னும் உதாரணச் சூத்திரத்தின் வழியே முதனிலைத்துக் கொள்க. (13)

## பாவுக்குரிய அடிச்சிறுமை பெருமை

ய௪. வெண்பா இரண்டகவல் மூன்றுகலி நான்குவஞ்சி
ஒண்பா இரண்டுமூன் [91]றொத்தெய்தி- [92]பண்பார்
அடிச்சிறுமை யாகும் அதன்பெருமை சொல்லும்
படிக்களவே துள்ளத்தின் பண்பு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் [பாவின் அடி] களது சிறுமையும் பெருமையும் உணர்த்திற்று.

வெண்பாவிற்கு இரண்டடியே சிறுமை;
ஆசிரியப்பாவிற்கு மூன்றடியே சிறுமை;
கலிப்பாவிற்கு நான்கடியே சிறுமை;
வஞ்சிப்பாவிற்கு இரண்டடியே சிறுமை;
மூன்றடியானும் (வரப்பெறும்).

இப்பா நான்கிற்கும் பெருமைக்கு எல்லை, பாடுவோர் உள்ளமும் சொல்லும் பொருளும் தோற்றும் அளவே என்றவாறு.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள். 37)

இது வெண்பாவின் சிறுமைக்குக் காட்டிய உதாரணம்.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேல் கண்ணி
[93]முலையும் வாரா முதுக்குறைந் தனளே" (யாப். வி. 32. மேற்)

இஃது ஆசிரியப்பாவிற்குக் காட்டிய உதாரணம்.

'செல்வப்போர்க் கதக்கண்ணன்' (யாப். வி. 20 மேற்.); இது கலிப்பாவின் சிறுமைக்குக் காட்டிய உதாரணம்.

---

ய௪. பா. வே: 91.றொத்தை, 92. கண்பார் -(உ)

93. முலையினம் வாராள்-(யாப்.வி.32 மேற்.), முலையும் வாரார்-(பே)

"பூத்ததாமரை [மேற்சிறந்தருள்]
வாக்கின்மெல்லியல் தாட்டுணைத்தளிர் தோளவே
கல்வியும் அறிவும் எய்தும்
செல்வமும் புகழும் [94] சிறக்கமுந் துறவே"

இது வஞ்சிப்பா இரண்டடிச் சிறுமைக்குக் காட்டிய உதாரணம்.

"செங்கண்மேதிக் கரும்புழக்கி
அங்கண்ணிலத் தலரருந்திப்
பொழிற்காஞ்சி நிழற்றுயிலும் செழுநீர்
நல்வயல் கழனி யூரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே" (யாப்.வி. 15 மேற்.)

இது வஞ்சிப்பா மூன்றடிச்சிறுமைக்குக் காட்டிய உதாரணம்.

"பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார்
அதனால்
அறிவன தடியிணை பரவப்
பெறுகுவர் யாவரும் [95] பிறவியில் நெறியே"
(திருப்பாமாலை, யாப். வி.93 மேற்.)

இது வஞ்சிப்பா இரண்டடிச் சிறுமைக்குக் காட்டிய உதாரணம்.

இனி, இப்பா நான்கினது பெருமையும் ஆற்றுப்படையினும்; உலா மடல் தூதினும், பஃறொடை வெண்பாவினும்,வஞ்சிநெடும்பாட்டினும், புகழ்ச்சிமாலையினும், மயங்கிசை முதலான நெடுங்கலியினும் கண்டுகொள்க.

அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபக வற்கிழிபு
[96] குறித்தா றுரைப்பின் முதுக்குறைந் [97] தாங்குறை யாக்கலியின்
திறத்தா றிதுசெல்வப் [98] போர்பூத்த செங்கண் [பூந் தண்] வஞ்சியாம்
புறத்தாழ் கருமென் குழற்றிரு வேயென்ன பூங்கொடியே (யாப். கா. 15)

இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே முதனினைத்துக் கொள்க. (14)

பா. வே: 94. சிறந்தினி துறவே -(பே) 95. பிறவா-யாப்.வி.93 மேற்.
96. குறித்தாங் குரைப்பின், 97. தாங்குறை யாக்கலின்,
98. போர்ச் செங்கண் மேதிவஞ்சிச்சிறுமை -யாப்.கா.15

## பாக்களது சீர்வரையறை

ரு. ஒருசீ[99]ரடிசதுக்கம் ஓரிருசீர் முச்சீர்
வரு[சீ ரடி] வஞ்சி மற்ற - தொருநான்கு
சீரகவல் வெள்ளை சிறந்தகலி[100]என்றறிஞர்
ஊரறியச் சொன்னார் உகந்து

என்பது, இவ்விலக்கணம் என் நுதலிற்றோ வெனின் இப் பாகளது சீர் வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

ஒரு சீரடி சதுக்கமென்றும்,
[101] இரு சீரடி முச்சீரடி வஞ்சிப்பாவென்றும்,
நாற்சீரடி அகவலென்றும் (வெண்பாவென்றும்)
கலிப்பாவென்றும்

அப் பாவினது இலக்கணத்தோடு நடைபெறும் என்றவாறு.

உதாரணம் வருமாறு:

"தவளமெய் யவளே
பவளவா யவளே"

இது சீர் [ஈரசைச்சீரான்] வந்த சதுக்கம்.

"அத்திமுகத்
துத்தமனை
நித்தநினை
சித்தமே"

இது மூவசையான் வந்த சதுக்கம்.

"[மருதிடைதவழ்ந்]
தெருதொடுபொரும்
குருசிலைநினைந்
தருள்பெறுதுமே"

இது கனிச்சீரான் வந்த சதுக்கம்.

ரு. பா. வே. 99. ரடிச்சதுக்கம், 100. என்றாரறிஞர்-(உ)

101. ஒருசீரடி (தவறுக எழுதப்பட்டுள்ளது) -(பே)

"[வெண்டாம]ரை மேற்சிறந்தருள்
வண்டார்மலர் குழல்வாணியைக்
கொந்தார்நறை மலர்கொண்டடிச்
செந்தாமரை [தொழு] தேத்திய
அடியார்
நடைபெறு பலகலை உணர்வார்
தொடர்படு பவநனி வினைவிடு படவே"

இஃது இருசீரடியான் வந்த வஞ்சிப்பா.

"பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார்
அதனால்
அறிவன தடியிணை பரவப்
பெறுகுவர் யாவரும் பிறவியில் நெறியே" (திருப்பாமாலை
யாப்.வி. 93 மேற்.)

இது முச்சீரடி வஞ்சிப்பா.

"எண்ணிய எண்ணியயாங் [102]கெய் துவ கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே"

இது நாற்சீரடி ஆசிரியப்பா.

"வடியேர்கண் ணீர்மல்க வான்பொருட்கண் சென்றார்
கடியார் [103]கனங்குழலாய் காணார்கொல் காட்டின்
இடியின் முழக்கஞ்சி ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை" (யாப். வி. 36 மேற்.)

இது நாற்சீரடி இன்னிசை வெண்பா.

"செல்வப்போர்க் கதக்கண்ணன்" (யாப். வி. 32. மேற்.) என்பது நாற்சீரடிக் கலிப்பா.

---

உரை.பா. வே: 102. கெய்துவ -(பே)

103. கனங்குழாய் -(யாப்.வி. 36 மேற்.), (பே)

[104]தவளமெ யத்தி மருதம் சதுக்கம்வென் டாமரை [யோ]
டிவர்தரு பூந்தண் சினைவஞ்சி எண்ணிய எண்ணியயாங்
கவிரக வல்வடி யேர்கண்வென் பாசெல்வ மார்கலியாம்
பவளச்செவ் வாய்செம்பொன் மேனிப்பைங் கிள்ளைப் பணிமொழியே

*இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே முதனினைத்துக் கொள்க.* *(15).*

# பாவியல்

## வெண்பாவியல்

### வெண்பாவின் பொதுவிலக்கணம்

ம சூ. மூவசைச்சீர் ஈரசைச்சீர் முற்றியிறும் முச்சீரில்
ஓவிலசைச் சீரிறும் உவ்விறுதி - மேவுமதன்
ஈறும்வெண் சீரியற்சீர் வெண்டளையும் செப்பலொலிக்
கூறுமுறும் வெண்பாக் குலம்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வெண்பாவினது இலக்கணமெல்லாம் பொதுப்படத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

'மூவசைச்சீர் ஈரசைச்சீர் முற்றி'என்றது ஒருவெண்பா முற்றும் மூவசைச்சீரான் நடந்தும், ஈரசைச்சீரான் நடந்தும், மூவசைச்சீரும் ஈரசைச்சீரும் கூடிநடந்தும் என்றவாறு.

'இறும் முச்சீரில் ஓவில் அசைச்சீர் இறும்' என்றது முடியும் மூன்றாம் [சீர் ஓரசையாக] நேரசையானும் நிரையசையானும் என்றவாறு.

'உவ்விறுதி மேவும் அதன் ஈறும்' என்றது நாள், மலர் என்னும் அசைச்சீர் உகரம் ஊர்ந்து காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டானும் முடியும் என்றவாறு.

'வெண்சீர் இயற்சீர் வெண்டளையும் செப்பலொலிக் கூறுமுறும்' என்றது தனியே வெண்சீர்வெண்டளையானும்,

104. இக்காரிகை இந்நூலுரையாசிரியரால் இயற்றப்பெற்றது.

இயற்சீர்வெண்டளையானும், இவ்விரண்டு தளையானும் வருவது செப்பலொலிக் கூறுமாம் என்றவாறு.

'வெண்பாக்குலம்' என்றது வெண்பாப் பலவிகற்பமாய் நடத்தலால் 'வெண்பாக்குலம்' என்றார் என்றவாறு.

இவற்றுக்கு உதராணம் வருமாறு:

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு" (குறள். 397)

இது வெண்சீர்வெண்டளையான் வந்த ஏந்திசைச்செப்பலோசை; என்னை?

"வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்ம னார் புலவர்"
(யாப்.வி. 57 மேற்; சங்கயாப்பு)

(என்றாராகவின்).

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" (குறள். 1121)

இஃது இயற்சீர் வெண்டளையான் வந்த தூங்கிசைச் செப்பலோசை; என்னை?

"இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்பல் என்மனார் புல்வர்"
(யாப்.வி. 57 மேற்., சங்கயாப்பு)

(என்றாராகவின்).

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்" (குறள். 260)

இது வெண்சீர்வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் பெற்ற ஒழுகிசைச் செப்பலோசை; என்னையோவெனின்,

"வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல்"
(யாப். வி. 57 மேற்., சங்கயாப்பு)

(என்றாராகவின் ).

[105]யாதானும் பாலொடு கொல்லான் புலால்செப்ப லோசையென்பர்
போதான போதணி குன்ற மகவல் பொலிவுதரு
மீதான செல்வம் குடநிலை துள்ளல் வினைத்திண்பகை
வாதான வானோர்மந் தாநிலம் (தூங்கல்) மலர்க்கொடியே
(இலக். சூ. 19, 22, 29)

இவ்வுதாரணச்சூத்திரத்தின் வழியே முறையானே வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நான்கு பாவிற்கும் ஏந்திசைச்செப்பல், தூங்கிசைச்செப்பல், ஒழுகிசைச் செப்பலோசை என்றும்; ஏந்திசையகவல், தூங்கிசையகவல், ஒழுகிசையகவலோசை என்றும்; ஏந்திசைத்துள்ளல், அகவற்றுள்ளல், பிரிந்திசைத்துள்ளலோசை என்றும்; ஏந்திசைத்தூங்கல், அகவற்றூங்கல், பிரிந்திசைத்தூங்கலோசை என்றும் நான்கு பாவிற்கும் காட்டிய உதாரணச்செய்யுள் (கண்டுகொள்க).

## குறள்வெண்பா, நேரிசைவெண்பா

௰எ. நாற்சீர்முச் சீர்குறளாம் நாடும் குறளிரண்டில்
வாச்ச தனிச்சொலிடை வந்தெய்தி -[106]ஒச்சமுறும்
ஓராசி[107]ராசடையின் ஓரோர் விகற்பத்தின்
பேராகும் நேரிசையின்[108]பேர்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் குறள்வெண்பாவிற்கும், நேரிசை வெண்பாவிற்கும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

நாற்சீரடியும் முச்சீரடியு[மாய்] ஈரடியான் வருவது குறள்வெண்பா எனப்படும். அஃது இருவிகற்பமாயும் ஒருவிகற்பமாயும் வரும்.

இவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்
கச்சாணி அன்னார் உடைத்து" (குறள். 667)

105. இவ்வுதாரண முதனினைப்புக்காரிகை இவ்வுரையாசிரியரால் இயற்றப்பட்டுள்ளது.

௰எ. பா. வே: 106. ஒச்சமுறு -(த) 107. ராசிடையின் -(உ) 108. பேறு -(த)

இஃது இரு [109]விகற்பமாய் வந்த குறள்வெண்பா.

"உடையார்முன் னில்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்" (குறள். 395)

இஃது ஒரு [110]விகற்பமாய் வந்த குறள்வெண்பா.

இனி, நேரிசைவெண்பாவாவது இரண்டுகுறளின் நடுவே ஒரு தனிச்சொல் பெற்று [இரு] குறள் நேரிசைவெண்பா என்றும், முதலிரண்டடியும் ஒரு விகற்பமாய்க் கடைபிரண்டடியும் ஒருவிகற்பமாய் வரினும், நான்கடியும் ஒருவிகற்பமாய்வரினும் அஃது இருகுறள் நேரிசை எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"தடமண்டு தாமரையின் தாதா டலவன்
இடமண்டிச் செல்வதனைக் கண்டு-பெடைஞெண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்
தூழி நடாயினான் ஊர்" (யாப். வி. 60 மேற்.)

இஃது இருவிகற்பத்தால் வந்த இருகுறள் நேரிசைவெண்பா.

"அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே
பெரிய வரைவயிரம் கொண்டு-தெரியிற்
கரிய வரைநிலையார் காய்ந்தால் [111]என்செய்வர்
பெரிய வரைவயிரம் கொண்டு" (யாப். வி. 60. மேற்.)

இஃது ஒருவிகற்பத்தால் வந்த இருகுறள் நேரிசைவெண்பா.

'ஓச்சமுறும் ஓராசிர் ஆசடையின்' என்று சிறப்பித்தவதனால் முதற்குறட்பாவினோடு தனிச்சொல் இடைவேறுபட்டு விட்டிசைப்பின், ஒற்றுமைப்படாத உலோகம் ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஒன்றும் இரண்டும் அசைகூட்டி உச்சரிக்கப்பட்டு, இரண்டுவிகற்பத்தானும் ஒருவிகற்பத்தானும் வருவனவும் உள ஒருசார் ஆசிடைநேரிசைவெண்பா என்றவாறு.

"தாமரையின் தாதாடித் தண்டுவலைச் [112]சேறணைந்து
தாமரையின் நாற்றமே தானாறும்-தாமரைபோல்

பா.வே: 109. விகற்பத்தால், 110. விகற்பத்தால்-(பே)

111. என்செய்வார்- 112. சேறளைந்து-யாப்.கா.24 மேற்.

கண்ணான் முகத்தான் கர தலத்தான் சேவடியெம்
கண்ணார்வம் செய்யும் கருத்து" (யாப். கா. 24 மேற்.)

இஃது ஈராசிடையிட்டு இருவிகற்பத்தான் வந்த இருகுறள் நேரிசைவெண்பா.

"கருமமும் உள்படாப் போகமும் [113]துவ்வா
தருமமும் [114]தக்கோர்க்கே செய்யா-ஒருநிலையே
[115]முட்டின்றி மூன்று முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்" (நாலடி. 259)

இஃது ஒராசிடையிட்டு இருவிகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசைவெண்பா.

"ஆர்த்த அறிவினர் ஆண்டிளையர் ஆயினும்
காத்தோம்பித் தம்மை அடக்குப-மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோல்
போத்தறார் புல்லறிவி னார்" (நாலடி. 351)

எனவும்,

"வஞ்சியேன் என்றவன்தன் ஊருரைத்தான் யானுமவன்
வஞ்சியான் என்பதனால் வாய்நேர்ந்தேன்-வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியேன் என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் [116]கோ" (யாப். வி. 60 மேற்.)

எனவும் இவை ஒராசிடையிட்டும் ஈராசிடையிட்டும் ஒருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பா.

உருவுகண் டெள்ளா உடையார் குறள்மட வாய்தடமண்
டரிய வரைகீண் டிருகுற ணேரிசை [117]தாமரையும்
கருமமு [118]மார்த்தமும் வஞ்சியும் காமர் [119]தனிச்சொன்முன்
நெரிநுண் கருங்குழல் நேரிழை ஆசிட்ட நேரிசையே (யாப். கா. 26)

இவ்வுரைச் [120]சூத்திர விலக்கணத்தின் வழியே குறள்வெண்பாவும் நேரிசை வெண்பாவும் முதனினைத்துக்கொள்க. (17)

---

பா.வே: 113. தூவாத் -(த) (பே) 114. தக்கார்க்கே - நாலடி.259

115. முட்டின்று - நாலடி.259 116. கோன்-(பே)

117. தாமரையின்-யாப்.கா.26 118. மார்த்தவும் -யாப்.கா.26

119. தனிச்சொன்முன்னா-யாப்.கா.26; (பே) 120. இப்பகுதியின் ஏடு சிதைந்துள்ளது -(பே)

## சிந்தியல், இன்னிசை, பஃறொடை, சவலை வெண்பாக்கள்

ய அ. சிந்தியல் வெண்பாச் சிறப்புமொரு [மூவடியாம்]
நந்தலிலா[121] இன்னிசையும் நான்கடியாம் - சந்தப்
பலவடியாம்[122] பஃறொடையும் பண்பிலிது குன்றி
மெலிவுபெறு மேல்சவலை யாம்

என்பது, சிந்தியல்வெண்பாவிற்கும், இன்னிசைவெண்பாவிற்கும், பஃறொடை வெண்பாவிற்கும், சவலைவெண்பாவிற்கும் இலக்கணம் உணர்த்திற்று.

'சிந்தியல்வெண்பாச் சிறப்புமொரு மூவடியாம்' என்று சிறப்பித்தவதனால் சிந்தியல்வெண்பாவே நேரிசைவெண்பாப் போல இரண்டாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று இருவிகற்பத்தானும் ஒருவிகற்பத்தானும் [மூன்றடியான்] வருவது நேரிசைச்சிந்தியல் வெண்பா எனப்படும்.

இன்னிசை வெண்பாவே போலத் தனிச்சொலின்றி ஒரு விகற்பத்தானும் இருவிகற்பத்தானும் மூன்றடியான் வருவது இன்னிசைச் சிந்தியல் வெண்பா எனப்படும் என்றவாறு. என்னை?

„[123] இன்னிசைச் சிந்தும் நேரிசைச் சிந்துமென்
ரீரடி முக்கால் இருவகைப் படுமே" (யாப். வி. 59 மேற்.)

என்றாராகலின்.

வரலாறு:

"நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும் வண்டார்ப்பப் புடைத்தாளே-பொற்றேரான்
[124]பாலனல் வாயில் மகள்" (யாப். வி. 59 மேற்.)

இஃது இரண்டாமடியின் இறுதி தனிச்சொற்பெற்று மூன்றடியாய் இரண்டு விகற்பத்தான் வந்த நேரிசைச்சிந்தியல் வெண்பா.

---

ய அ. பா.வே: 121. நந்தலில்லா -(த).

122. பஃறொடையும் -(உ)

உரை.பா.வே. 123. நேரிசைச்சிந்தும் இன்னிசைச் சிந்துமென் -யாப்.வி. 59 மேற்.

124. பாலைநல் -யாப்.வி.59 மேற்., மாலைநல் -யாப்.கா.28 மேற்.

"அறிந்தானை ஏத்தி அறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செவ்வன் [125]உரைப்ப-சிறந்தார்
[126]செறிந்தமை ஆராய்ந்து கொண்டு" (யாப். வி. 59 மேற்.)

இஃது இரண்டாமடியின் இறுதி தனிச்சொற்பெற்று மூன்றடியாய் ஒருவிகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல்வெண்பா.

"நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
[127]பிறநாட்டுப் பெண்டீ ரடி" (யாப். வி. 59 மேற்.)

இது தனிச்சொல் இன்றி ஒருவிகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

"சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
[128]ஆனைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை" (யாப். வி. 59 மேற்.)

இது தனிச்சொல் இன்றி இருவிகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல்வெண்பா.

"முல்லை முறுவலித்துக் காட்டின மெல்லவே
[129]சேயிதழ் காந்தள் துடுப்பீன்ற போயினார்
திண்டேர் வரவுரைக்கும் கார்" (யாப். வி. 59 மேற்.)

இது பலவிகற்பத்தான் வந்த இன்னிசைச்சிந்தியல் வெண்பா.

[130]நற்கொற்ற வாயில் அறிந்தா னையுநறும் பூங்குழலாய்
சொற்பெற்ற நேரிசைச் [131]சிந்தியல் வாழ்சுரை யாழவம்மி
நிற்றற் குரிய நறுநீல நெய்தலு முல்லையுமென்
றெற்றப் படாதன இன்னிசைச் [132]சிந்துக் கிலக்கியமே (யாப். கா. 29)

---

பா.வே: 125. உரைக்கும், 126. சிறந்தமை, 127. பறநாட்டுப் பெண்டி,
128. யானைக்கு-யாப்.வி.5 மேற். 129. செய்தடை -(த)

130. இந்நூற்பாவின் உரைமுற்றுப்பெறாது தொடர்ந்து சென்ற பொழுதும் இவ்வுதாரண முதனினைப்புக்காரிகை உரையின் இடையில் அமைந்துள்ளது. பேரூர்ச் சுவடியிலும் தமிழ்ப் பல்கலைக்கழகச்சுவடியிலும் இக்காரிகையின் முடிவில் நூற்பா எண்ணிட்டு முடித்துக் காட்டப்பட்டுள்ளது.

131. சிந்திய லாம் சுரை-யா. கா. 29. (பே) 132. சிந்திற்-யாப். கா. 29.

இவ்வுரைச் சூத்திரவிலக்கியத்தின் வழியே நேரிசைச்சிந்தியல் வெண்பா விற்கும், இன்னிசைச்சிந்தியல் வெண்பாவிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க.

'நந்தவிலா இன்னிசையும் நான்கடியாம்' என்று சிறப்பித்தவதனால் ஒரு விகற்பத்தாலும் இருவிகற்பத்தானும் வந்து நான்கடியாய்த் தனிச்சொல் இன்றி நடப்பதுமன்றி இரண்டாமடியின் இறுதி தனிச்சொற்பெற்று மூன்று விகற்பத் தான் வருவனவும், மூன்றாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று இரண்டு விகற்பத்தான் வருவனவும் இன்னிசை வெண்பா எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்" (நாலடி.39)

எனவும்,

"துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்" (நாலடி . 2)

எனவும் இவை நான்கடியாய்த் தனிச்சொல் இன்றி ஒருவிகற் பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"கடற்குட்டம் [133]போழ்வர் கலவர்; படைக்குட்டம்
பாய்மா வுடையா னுடைக்கிற்கும்; தோமில்
தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக்குட்டம்
கற்றான் கடந்து விடும்" (நான்மணிக். 16)

இஃது அடிக்கடி ஒரூஉ வெதுகையான் வந்த இன்னிசை வெண்பா.

"இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையான்
மருவுமின் மாண்டார் அறம்" (நாலடி 36)

---

உரை.பா.வே. 133. போழ்வார்-நான்மணிக்.16

இது தனிச்சொல் இன்றிப் பலவிகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.

'ஒன்றல்லவை பல' என்பது தமிழ்நடை. என்னை?

"ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல்
இரண்டல் லவைபல என்றிசி னோரே" (யாப். கா. 26 மேற்.)

என்றார் மேலோர்.

"அங்கண் விசும்பின் [134]அணிநிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்-திங்கள்
மறுவாற்றும் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்" (நாலடி. 151)

எனவும்,

"மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்-மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ [135]தெல்லாம் படும்" (யாப். வி. 61 மேற்.)

எனவும் இவை இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை
அளந்தன போகம் அவரவர் [136]ஆற்றான்
விளங்காய் திரட்டினார் இல்லை-களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்" (நாலடி. 103)

இது மூன்றாமடியின் இறுதி தனிச்சொற்பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"இன்னாமை வேண்டின் இரவெழுக-இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக-தன்னொடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க-வெல்வது
வேண்டின் வெகுளி விடல்" (நான்மணிக். 17)

---

பா. வே. 134, அகனிலாப்-நாலடி.151

135. கடல்படுவ வெல்லா-யாப்.வி.61 மேற்., கடல்படுதலெல்லாம்-(வே)

136. ஆற்றால்-நாலடி.103

இஃது அடிதோறும் தனிச்சொற்பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

'சந்தப் பலவடியாம் பஃறொடையும்'என்று சிறப்பித்த வதனால் நேரிசைவெண்பாவிற்கும் இன்னிசை வெண்பாவிற்கும் நான்கடியே உரிமை சொன்னமையால் நான்கடியின் மிக்க பலவடியாய் நடப்பது பஃறொடை எனக்கொள்க.

வரலாறு:

[137]"வைய்யக மெல்லாம் [138]கழனியாய்-வையகத்துச்
செய்யகமே நாற்றிசையும் [139]தேசங்கள்-செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு-வான்கரும்பின்
சாறேயந் நாட்டுத் தலையூர்கள்-சாறட்ட
கட்டியே கச்சிப் [140]புறமெலாம்-கட்டியுட்
டானேற்ற [141]மாய சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம்" (யாப். வி. 62 மேற்.)

இது பலவிகற்பத்தான் வந்த ஏழடிப் பஃறொடைவெண்பா.

"சேற்றுக்கா னீலம் செருவென்ற வேந்தன்வேல்
கூற்றுறழ் மொய்ம்பின் பகழி பொருகயல்
தோற்றம் தொழில்வடிவு தம்முட் டடுமாற்றம்
வேற்றுமை யின்றியே ஒத்தன [142]மாவேடர்
ஆற்றுக்கா லாட்டியர் கண்" (யாப். வி. 62 மேற்.)

இஃது ஐந்தடியான் வந்த ஒருவிகற்பப் பஃறொடைவெண்பா.

"பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்" (யாப். வி. 62 மேற்.)

---

உரை.பா.வே.137. வையகம், 138. கழனியாம், 139. தேயங்கள்,

140. புறமெல்லாம், 141. மான- 142. மாவடர், யாப்.வி.62 மேற்.

இஃது ஆறடியான் வந்த பலவிகற்பப் பஃறொடைவெண்பா.

இனி, ஏழடியின் மிக்க பஃறொடை வெண்பா யாப்பருங்கல விருத்தி யுள்ளும் தேசிகமாலை முதலானவற்றுள்ளும் கண்டுகொள்க. (என்னை?)

"தொடையடி இத்துணை என்னும் வழக்கம்
உடையதை [143]அன்றி [144]உறுப்பழி வில்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே"

(யாப்.வி. 62., காக்கை.)

என்றாராகலின்.

'பண்பிலிது குன்றி மெலிவு பெறுமேல் சவலையாம்' என்பது [145]இவ்வைந்து வகை வெண்பாக்களும் எழுத்து அசை சீர் குறைந்தும், எதுகையின்றியும், தொடை வேறுபட்டும் வருவது சவலை வெண்பாவாம் என்றவாறு. அது வருமாறு:

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவிலா
நட்டாலும் நண்பல்லார் நண்பல்ல
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்" (மூதுரை)

இது தனிச்சொல் இன்றி நான்கடியான் வந்த சவலைவெண்பா.

"பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூறா யிரம்;
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா [146]நின்சே
வடிசெவ்வித் திருக்காப்பு" (பெரியாழ்வார் திருமொழி, காப்பு)

இது தனிச்சொல் இன்றி ஒரசை வேறுபட்டு இரண்டு விகற்பத்தான் வந்த சவலை வெண்பா. மற்றும் வந்தவழிக் கண்டுகொள்க.

பா. வே: 143. இன்றி, யாப்.வி.62 மேற். 144. உறுப்பள-(பே).

145. இவ்வைந்துவகை வெண்பாக்களும் என்றமையால் இவ் வெண்பாக்கள் எழுத்து அசை சீர்குறைந்து வருமேல் அவற்றைச் சவலை வெண்பாக்கள் என்றல் வேண்டும். நேரிசைவெண்பா சிதையின் நேரிசைச் சவலைவெண்பா என்றும் குறள்வெண்பா சிதையின் குறள்சவலைவெண்பா என்றும் கூறப்படும்; ஏனையவற்றிற்கும் இவ்வண்ணமே ஏற்றிக்கொள்க.

பா.வே: 146. உன்செவ்வடி-பெரியாழ்வார் திருமொழிகாப்பு.

வைகலும் வைகல் துகடீர் கடற்குட்ட மின்னுமங்கண்
[147] நெய்தல் மலிதேரான் வளம்பட லின்னாவின் னிசையாகும்
வையக மெல்லாம் [148] பலவிகற்பம் பெற்றது சேற் றொருகால்
[149] பெய்தபன் மாடம் பஃறொடை பல்லாண் டட்டதே (யாப்.கா.27.)

இவ்வுரைச் சூத்திரவிலக்கியத்தின் வழியே இன்னிசைவெண்பா விற்கும் சவலை வெண்பாவிற்கும் காட்டிய உதாரணங்களை முதனினைத்துக் கொள்க. (18)

## ஆசிரியவியல்

### ஆசிரியப்பாவின் பொதுவிலக்கணம்

௰௧. நேரொன்றி நேரே நிரையொன்றி நேர்நிரையின்
சீரொன்றி ஈரசைச் சீரெய்திப் [150] பேரொன்றும்
ஆசிரிய ஓசை அகலாமல் [151] எய்துவது
[ஆசில்] அகவல் வகை

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஆசிரியப்பாவினது பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

'நேரொன்றி நேரே நிரையொன்றி நேர்நிரையின் சீரொன்றி ஈரசைச்சீரெய்தி' என்பது நேரொன்றாசிரியத்தளையின் நடந்தும், நிரையொன் றாசிரியத் தளையின் நடந்தும், இவ்விரண்டு தளையும் கூடி நடந்தும் அகவலோசைகுன்றாமல்

---

பா.வே: 147. எய்துமலிதேர் வளமழை யின்னாமை யின்னிசைபோல்,

148. பலவிகற்ப பேற்றது-(பே)

149. பையரவல்குற்பன் மாடம் -(பே); யாப்பருங்கலக் காரிகையில் இவ்வடியே மாறுபட்டுள்ளது.

''பையரவல்குல்பன் மாடம் பஃறொடைப் பல்விகற்பே'' (யாப்.கா.27)

* யாப்பருங்கலக் காரிகையின் இவ்வுதாரண முதனினைப்புக் காரிகையை எடுத்துக்காட்டப்பெற்ற மேற்கோளுக் கேற்ப மாற்றியுள்ளார்.

௰௧.பா. வே: 150. பேரொன்று-(உ) 151. எய்துவதும் -(உ) (பே)

ஈரசைச்சீர் எய்தி நடப்பது அகவலது பொதுவிலக்கணம் என்றவாறு.

என்னை?

"அகவ லோசையோ டளவடித் தாங்கியும்
இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும்
தன்றளை தழுவியும் பிறதளை மயங்கியும்
ஈரசைச் சீ[ரான் எ]ய்துவ தகவல்"

வரலாறு:

"போது சாந்தம் பொற்ப ஏந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி பாதம் துன்னு வோரே" (யாப்.வி. 6 மேற்.)

இது நேரொன்றாசிரியத்தளையானும் ஏந்திசையகவலானும் வந்த செய்யுள்.

"அணிநிழல் அசோகமர்ந் தருணெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே" (யாப். வி. 8 மேற்.)

இது நிரையொன்றாசிரியத்தளையானும் தூங்கிசையகவலானும் வந்த செய்யுள்.

'குன்றக்குறவன்,' (ஐங்குறு. 255) என்பது இவ்விரு தளையானும் ஒழுகிசையகவலானும் வந்த செய்யுள்.

இவ்வுதாரணங்கட்கெல்லாம் 'யாதானும் பாவொடு' (இலக். சூ. 16 மேற்.) என்னும் உரைச்சூத்திரத்தின் முதனினைத்துக்கொள்க. (19)

## நேரிசையாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா

உ௰. முச்சீர்மேல் நாற்சீராய் முற்றுவது நேரிசையாம்
அச்சீர் இடையிடையே அற்றுவரில் - நிச்சம்
இணைக்குறளாம்[152] மற்றவடி யெல்லாநாற் சீராம்
பிணக்கறுவேற் கண்ணாய் பெரிது

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் நாற்சீரடியானும்

உ௰ பா. வே: 152. மற்றடி -(த), மற்றபடி -(பே)

அகவலோசையானும் வரும் ஆசிரியப்பாவினை அடியானும் ஓசையானும் பொருளானும் (பெயர்) வேறுபாடு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவற்றுள் இவ்விலக்கணம் நேரிசையாசிரியப்பாவிற்கும் இணைக்குற ளாசிரியப்பாவிற்கும் இலக்கணம் உணர்த்திற்று.

'முச்சீர் மேல் நாற்சீராய் முற்றுவது நேரிசையாம்' என்பது நாற்சீர் நாற்சீராய்ப் பலவடி நடந்து[153] முச்சீர்வந்து நாற்சீராய் முற்றுவது நேரிசையாசிரியப்பா எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந். 3)

இது நேரிசையாசிரியப்பாவிற்கு வந்த உதாரணம்; என்னை?

"[154]ஈற்றதன் அயலடி முச்சீ ராக
நிற்ப நேரிசை யாசிரி யம்மே" (யாப். வி. 71 மேற்.)

'அச்சீர் இடையிடையே அற்றுவரில் நிச்சம் இணைக் குறளாம்' என்பது ஈற்றடியும் முதலடியும் ஒழிந்து மற்றவடி குறளடியானும் சிந்தடியானும் வருவது இணைக்குறளாசிரியப்பா எனப்படும் என்றவாறு; என்னை?

"இணைக்குறள் இடைபல குறைந்திறல் இயல்பே"
(யாப். 72)

என்றாராகலின்.

"நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே" (யாப். வி. 72 மேற்.)

---

உரை.பா.வே.153. முச்சீராய் நாற்சீராய் -(பே)

154. இற்றதன் மேலடி ஒருசீர் குறைய நிற்பது நேரிசை ஆசிரி யம்மே (யாப். வி. 71 மேற்.)

(இஃது) இடையடி இரண்டு மூச்சீரான்வந்த இணைக் குறளாசிரியப்பா.

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயு மன்னே
[155]அம்பொடு வேலுழை வழியெல்லாம் தானிற்கு மன்னே
நரந்தம் நாறும் தன்கையால்
புலவு நாறும் என்தலை தைவரும் மன்னே
அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் [156]துளையொரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
[157]அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன்
[158]அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநரு மில்லைப் பாடுநருக்கொன் [159]றீகுநருமில்லை

பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே" (புறநா. 235)

(இஃது) இடையடி பலவும் ஒருசீரும் இருசீரும் குறைந்து வந்த இணைக்குறளாசிரியப்பா.

"அகவல் இசையன அகவல் மற்றவை
ஏஓ ஈஆய் என் ஐ என் றிறுமே" (யாப். 69)

இவ்வாறு அசைச்சொல் பெற்றிறுவது ஆசிரியப்பாவிற்குச் சிறப்பென்றவாறு.

'பிணைக்கறுவேற்கண்ணாய்' என்பது மகடூஉ முன்னிலை.(20)

---

உரை.பா.வே. 155. அம்பொ டுவேலுழை-(த) 156. கலையொரீஇ -(த), (பே)

157. வன்சொல்-(பே) 158. அருநிறம் தாங்கிய -(த) (பே)

159. றீயுநரு-(த) (பே)

## நிலைமண்டில ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா

உயிக. எல்லாம் அளவடியாய் எய்தனிலை[160] மண்டிலமாம்
அல்லா[161] அடிகணடு ஆதியந்தம் - எல்லாம்
வடிவுறுவேற் கண்ணாய் வகுத்துரைக்க[162] லாமேல்
அடிமறித லாமென் றறி

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கும் அடிமறிமண்டில ஆசிரியப்பாவிற்கும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

எல்லா அடியும் ஒத்துவருமெனின் அது நிலைமண்டில ஆசிரியப்பா எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாராற்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந். 18)

இஃது எல்லா அடியும் ஒத்துவந்த நிலைமண்டில ஆசிரியப்பா; என்னை?

"ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண் டிலமே"
(யாப். கா. 35 மேற்., காக்கை.)

என்றாராகலின்.

எல்லா அடிகளும் நடுவு ஆதி அந்தமாக, முதல் நடு ஆதி அந்தமாக உச்சரித்தால் ஓசையும் பொருளும் பிழையாது வருவது அடிமறி மண்டில ஆசிரியப்பாவாம் என்றவாறு.

---

உக. பா.வே: 160. மண்டிலம் -(த)

161. அடிக்டிணடு,

162. லாமே -(உ)

வரலாறு:

> "சூரல் பம்பிய சிறுகான் யாறே
> சூரர மகளிர் ஆரணங் கினரே
> வாரல் எனினே யானஞ் சுவலே
> சாரல் நாட நீவர லாறே" (யாப். வி. 73 மேற்.)

இஃது எல்லாஅடியும் தொடக்கம் முதலாக உச்சரித்தால் ஓசையும் பொருளும் பிழையாது வந்த அடிமறி மண்டில ஆசிரியப்பா.

'வடிவுறு வேற்கண்ணனாய்' என்பது மகடூஉ முன்னிலை.

> நேரிசையாகு நிலத்தினு மெஃப திணைக்குறட்பா
> [163]நீரின்தண் ணென்னும் சிறியகள் ளாம்நிலை மண்டிலப்பா
> வேரலென் றாகும் விரைமலர்க் கோதைவில் லேர்நுதலாய்
> சூரல்பம் பென்பது [164]மண்டில மாகத் துணிந்தனரே (யாப்.கா.35)

இவ்வுரைச்சூத்திரக் காரிகையின் வழியே நான்காசிரிய உதாரணமும் முதனினைத்துக் கொள்க. (21)

## கலிப்பாவியல்

### கலிப்பாவின் பொதுவிலக்கணம்

உ௰உ. கலித்தளையும் வெண்டளையும் எய்தியே பாவின்
ஒலிக்கிசைய மற்றுமெதிர் உற்றுக் - கலிப்பாவாம்
நேரீற்று வெண்சீர் நிரையீற் றகவற்சீர்
நேர்நடுவாம் வஞ்சிச்சீர் நேர்ந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் துள்ளலோசையுடைத்தாய், நேரீற்று வெண்சீரும் நிரையீற்றகவற்சீரும் நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வந்து, நேரடி உடைத்தாய்க் கலித்தளையும் வெண்டளையும் அயற்றளையும் எய்தி நடப்பது கலிப்பாவாம் என்றவாறு. என்னை?

> "ஏந்திசைத் துள்ளல் கலித்தளை [165]இயையின்
> வெண்டளை தன்றளை என்றிரண் டியையின்
> ஒன்றிய அகவல் துள்ளலென் றோதுப" (யாப். கா. 22 மேற்.)

---

பா.வே 163. நீரின் சிறிய நிலைமையை தாநிலை மண்டிலப்பா - யாப்.கா.35.,

164. அடிமறியாகத் துணிந்தனரே-யாப்.கா.35

22. உரை. (பா.வே): 165. இயைபின் -(த) (பே)

"தன் தளை பிறதளை என்றிவை அனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்"
(யாப். கா. 22 மேற்.

என்றாராகலின்.

வரலாறு:

"பொலியுநறை நிறைதவளாம் புயமலர்மா ளிகையினிடை
குலவுமெண்மர் வசினிமுதற் கொடிமடவார் புடைபரவ
வலிமைபெறு கலைமகளை மனதினினை வுறுமடியார்
மலிவுறுசொற் கவிமழையால் வசுமதியை மகிழ்செய்வரே"

இது கலித்தளையான் வந்த ஏந்திசைத்துள்ளல்.

'செல்வப்போர்க் கதக்கண்ணன்' (யாப்.வி.32 மேற்.) கலித்தளையும் வெண்டளையும் வந்த அகவற்றுள்ளல்.

"குடநிலைத் தண்புறவில் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவில் தகையேறு மரம்பாய்ந்து
[166]வீங்குபணிக் கயிறொரீஇத் [167]தாங்குவனர்
தோன்றப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப
எனவாங்கு
ஆனொடு புல்லிப் பெரும்புதர் முனையும்
கானுடைத் தவர்தேர் சென்ற வாறே" (யாப். வி. 22 மேற்.)

இது தன்றளையும் பிறதளையும் மயங்கின பிரிந்திசைத்துள்ளல்.

இவ்விலக்கணங்கட்கு 'யாதானும்' (இலக். சூ. 16, 19 மேற்.) என்னும் உரைச்சூத்திரத்தின் வழியே முதனினைத்துக் கொள்க.
(22)

## நேரிசையொத்தாழிசைக்கலி

உ௰ ௩. தரவொன்று தாழிசைமுன் றோர்தனிச்சொல் [168]பெற்றோர்
சுரிதகத்தால் முற்றுவது தோகாய் - நிரல்முந்து
நேரிசையொத் தாழிசையாம் என்று நியமித்தே
ஆரியத்தார் சொன்னார் அறிந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் முன் கலிப்பாவுக்

22. உரை: பா.வே: 166. வீங்குபிணிக்-யாப்.வி.22 மேற்.
167. தாங்குவனத் தொன்றாப்போய்க்-யாப்.வி. 22 மேற்.
உ௩. பா. வே: 168. பெற்றால்-(த) (பே)

கெல்லாம் பொதுப்படவைத்த இலக்கணத்தின் வழியே, தரவு தாழிசை என்னும்உறுப்பு முதற்கண்ணுடைத்தாய் அராகம், அம்போதரங்கம், தனிச்சொற் சுரிதகம் என்னும் நான்குறுப்பும் இடைக்கண்ணும் உடைத்தாய்ப் பலவிதமாய் நடக்கும் கலிப்பாக்களுள் இவ்விலக்கணம் நேரிசையொத் தாழிசைக் கலிப்பாவாமாறு உணர்த்திற்று.

உறுப்பினானும் ஓசையானும் பொருளானும் சீரானும் தளையானும் வேறுபாடுடைத்தாய் நடத்தலில் இக்கலிப்பாவுக் குத் தனித்தனியே பெயர் வேறுபாடாயின.

முன் ஒரு தரவுவந்தும், அதன்பின் மூன்று தாழிசை வந்தும், அதன்பின் ஒருதனிச்சொல் வந்தும், அதன்பின் ஆசிரியத்தினானாதல் வெண்பாவினானாதல் சுரிதக உறுப்புப் பெற்றுச்[169] சொற்பெற்றியில் திரியாது வருவது நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா எனப்படும் என்றவாறு.

வரலாறு:

தரவெனினும் எருத்தமெனினும் ஒக்கும்; தாழிசையெனினும் இடைநிலைப் பாட்டெனினும் ஒக்கும்; தனிச்சொல் எனினும் தனிநிலை எனினும் ஒக்கும்; சுரிதகமெனினும் அடக்கியலெனினும் வாரமெனினும் வைப்பெனினும் போக்கியலெனினும் ஒக்கும்; என்னை?

"தந்துமுன் னிற்றவிற் றரவே; [170]தாழிசையே
[171]தந்தா முந்திறி னஃதொத்தாழிசையே"
(யாப்.வி. 82 மேற்.)

என்றாராகலின்.

வரலாறு:

"வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றாய்த்திரிந்து
தோணெடும் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
[172]பூணொடுங்கும் முலைக்கண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ;
இது தரவு

---

23. உரை.பா. வே: 169. சொன்னபெற்றியில் -(பே).

170. தாழிசை-யாப்.வி.82 மேற்.

171. ஒத்தா ழத்தின தொத்தா -

172. பூணடுங்கும், பாப்.வி.82 மேற்.,

சுருடைய [173]கருந்தடங்கள் சொலற்கரிய என்பவால்
பீருடைய நலந்தொலையப் [174]பிரிவரேர் பெரியவரே;

சிலம்படைந்த வெங்கானம் சீரிலவே என்பவால்
[175]புலம்படர்ந்த நலந்தொலையப்
[176]போவரோ பொருளிலரே;

சேணுடைய கருந்தடங்கள் செலற்கரிய என்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பரோ நலமிலரே;

வை மூன்றும் தாழிசை

எனவாங்கு

அருளெதும் இலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்

பன்னெடும் காலமும் வாழியர்
பொன்னொடும் தேரொடும் தானையிற் பொலிந்தே"
(யாப் வி. 82 மேற்.)

இது சுரிதகம்

இது, தரவு மூன்றடியாய்த் தாழிசைமூன்றும் இரண்டடியாய்த் தனிச்சொற் பெற்று மூன்றடி ஆசிரியச்சுரிதகத்தால் இற்றுவந்த நேரிசையொத்தாழிசைக் கலிப்பா.

வெள்ளைச்சுரிதகத்தால் இற்றுவந்தன வந்தவழிக் கண்டு கொள்க. என்னை?

"தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம்
[177]எனநான் குறுப்பின தொத்தா ழிசைக்கலி"
(யாப். கா. 38 மேற்.,காக்கை.)

'தோகாய்' என்பது மகடூஉ முன்னிலை. (23)

---

பா. வே: 173. கடுங்கடங்கள், 174. பிரிவாரோ, 175. புலம்படைந்து,
176. போவாரோ -யாப்.வி.82 மேற்.

இந்நூலுள் உள்ள இரண்டாம் தாழிசை யாப்பருங்கல விருத்தியுள் மூன்றாம் தாழிசையாக உள்ளது. இச்சுவடியில் காணப்படும் தாழிசை அமைப்பு பேரூர்ச்சுவடியை ஒத்துள்ளது.

177. எனநான்-யாப்.கா.38 மேற்.

## அம்போதரங்கவொத்தாழிசைக்கலி

உ௰ ௪. இருமுன்[178]றடித்தரவும் ஈரிரண் டாகி
வருமூன்று தாழிசையும் வந்திங் - கொருமூன்று
தம்பே[179]ருறுப்பும் தனிச்சொல்மற் [180]றைந்துண்டேல்
அம்போ தரங்கமென வாம்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா உணர்த்திற்று.

'தம்பேருறுப்' பென்று சிறப்பித்தவதனால் கரைசாரக் கரைசார ஒருகாலைக்கொருகால் சுருங்கிவரும் நீர்த்தரங்கம் போல நாற்சீரடியும் முச்சீரடியும் இருசீரடியுமாகிய அசையடிகள் தாழிசைக்கும் தனிச்சொற்கும் நடுவே தொடுத்துத் தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சரிதகமென்னும் ஐந்துறுப்பினையும் உடைத்தாய் வருவது அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா எனப்படும் என்றவாறு.

'ஒருமூன்று தம்பேருறுப்பும்' என்றது இப்பாவுக்கு நாற்சீரடியே [181]அளவடியாதலால் நாற்சீரடி அம்போதரங்கமும், முச்சீரடி அம்போதரங்கமும், இருசீரடி அம்போதரங்கமும் எனவாம். என்னை?

"ஈரடி இரண்டும் ஓரடி நான்கும்
முச்சீர் எட்டும் இருசீர் இரட்டியும்
அச்சீர் குறையினும் அம்போ தரங்கம்" (யாப். வி. 83 மேற்.)

அம்போதரங்க உறுப்பெனினும் அசையடியெனினும் ஒக்கும்; சொற்சீரடியெனினும் எண்ணெனினும் ஒக்கும்.

வரலாறு:

"[182]கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைஇ
ஆரழல் சுழல்செங்கண் அரிமாவாய் மலைந்தானைத்

உ௪. பா. வே: 178. றடிதரவும்-(த) 179. தம்பெயருறுப்பும் -(உ)
180. றைந்துமுண்டேல் -(பே)

உரை.பா.வே. 181. அளவாதலால் -(பே) 182. கெடலரு, யாப்.வி. 83 மேற்.

தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புனல் இழிகுருதி அகலிடம் உடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்!

இது தரவு

முரைசதிர் வியன்மதுரை முழுவதூஉம் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோள் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ?

[183]கலிவலி வியனுலகம் கலந்துடன் [184]நீநீங்க
வலியியல் அவிராழி மாறெதிர்ந்த மருட்சோவும்
மாணாதார் [185]உடம்பொடு மறம்பிதிர [186]வெதிர்கலங்கிச்
சேணுயர் இருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ?

படுமணி[187]இனநிரை பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு
வெரிநொடு மறுப்படா[188]விழுந்ததின் திறல்வேறா
எருமலி பெருந்தொழுவில் இறுத்ததுநின் இகலாமோ?

இவை மூன்றும் தாழிசை

இலங்கொளி மரகதம் எழில்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅல்! நின்னிறம்;
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையும் நின்னுடை;

இது பேரெண்

கண்கவர் [189]கதிர்முடி கனலும் சென்னியை;
தண்சுடர் உறுபகை தவிர்த்த ஆழியை;
ஒலியியல் உவணம் ஓங்கிய கொடியினை;
வலிமிகு சகடம் மாற்றிய அடியினை;

இது சிற்றெண்

---

உரை.பா.வே. 183. கலியொலி -யாப்.வி.83 மேற்., 184. நனிநடுங்க -(பே)
185. உடம்போடு, 186. வெதிர்கலங்கச், 187. இனநிரைகள்,
188. வீழ்ந்துதிறம் வேறாக
189 கதிர்மணி யாப்.வி.83 மேற்.

போரவுணர்க் கடந்தோய்நீ
புணர்மருதம் பிளந்தோய் நீ
நீரகலம் அளந்தோய் நீ
நிழறிகழும் படையோய் நீ

இஃது இடையெண்

ஊழிநீ உலகுநீ
உருவுநீ அருவுநீ
ஆழிநீ அருளுநீ
அறமுநீ மறமுநீ

இஃது அளவெண்

என வாங்கு

இது தனிச்சொல்

அடுதிறல் ஒருவநிற் பரவுதும் எங்கோன்
தொடுகழல் கொழும்பூட் பகட்டெழில் மார்பிற்
[190] கலையொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைச் செவ்வேல் அச்சுதன்
தொன்றுமுதிர் கடலகம் முழுதுடன்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே"

(யாப். வி. 83 மேற்., விளக்கத்தனார்)

இது சுரிதகம்

இஃது எட்டும் பதினாறும் சொல்லப்பட்ட முச்சீரடி அம்போ தரங்கமும், இருசீரடி அம்போதரங்கமும் குறைந்து முச்சீரடி நான்காய் இருசீரடி எட்டாய்ச் சிறப்பில்லா வெண்டளையால் வந்த அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா.

எட்டும் பதினாறும் என்று சொல்லப்பட்ட அம்போதரங்க உறுப்புக் குறையாது வந்தது வந்த வழிக்கண்டுகொள்க. (24)

---

உரை: பா. வே: 190. கயலொடு-யாப்.வி.89 மேற்.

## வண்ணகவொத்தாழிசைக்கலி

உ௫ ரு. ஆதி உறுப்பிரண்டும் அத்தொகைய ஆகியே
ஏதமில்[191] அராகவடி ஈரிரண்டாய்ப் - பேதமிலா
தோதியவம் போதரங்கம் ஓர்தனிச்சொல் மற்றாறும்
கோதிலா வண்ணகத்தின் கூறு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா வருமாறு உணர்த்திற்று.

'ஆதி உறுப்பிரண்டும் அத்தொகைய ஆகியே' என்பது முன் கலிப்பாவுக் கொத்தபடி ஆறடித்தரவும், நான்கடியில் மூன்று தாழிசையும், நான்கடிஅராகமும், அம்போதரங்க உறுப்பும், தனிச்சொல்லும் சுரிதகமுமாம் ஆறுறுப்பும் பெற்றுவருவது வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா எனப்படும் என்றவாறு.

அராகமெனினும், அடுக்கியலெனினும், முடுகியலெனினும், வண்ணகமெனினும், போக்கியலெனினும் ஒக்கும்.

'ஏதமில் அராகவடி' என்று சிறப்பித்தவதனால் அராக வுறுப்புத்தான் அளவடி முதல் ஆதி எல்லா அடியானும் வரப்பெறும் எனக்கொள்க. என்னை?

"அளவடி முதலா அனைத்தினும் நான்கடி
முதலா இரட்டியும் முடுகியல் நடக்கும்" (யாப். வி. 84 மேற்.)

என்றாராகவின்.
வரலாறு:

"விளங்குமணிப்[192] பசும்பொனன விசித்தமைத்துக்
கதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்கா லுறுமலர் நறும்பைந்தார்
[193] பருஉத்தடக்கைப் பணைமார்பிற் பகட்டெழில்
[194] எரிகுழுமிக்

---

உ௫ ரு., பா.வே: 191. அரவடிகள் -(உ)

உரை: பா.வே: 192. பசும்பொன்னின் விரித்தமைத்துக்- யாப்.வி.84 மேற்.

193. பருஉத் தடக்கை மதயானைப்-யாப்.வி.84 மேற்.

194. நெரிகுஞ்சி-யாப்.வி.84 மேற்.

குருஉக்கொண்ட மணிப்பூணோய் குறையிரந்து
[195]முன்னாட்டன்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கு [196]மெல்லார்க்கும்
தாயாகித் [197]தலையளித்த தண்டுறை ஊரநீ

இது தரவு

காட்சியாய்க் கலப்பெய்தி ஈந்திறத்துக் [198]கதிர்ப்பாகி
[199]மாட்சியாய்த் திரியாத மரபொத்த கரவினாற்
பிணிநலம் பிரிவெய்தப் பெருந்தடந்தோள் வனப்பழிய
அணிகலந்த கனியேவந் தருளுவதும் அருளாமோ?

அன்பினால் [200]அமிர்தளைஇ அறிவினால் பிறிதின்றிப்
[201]பொன்புரை பூணாகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோள் அருளுதற் கிருளிடைத் [202]தமியராய்க்
கருவரைத்தோள் [203]கதிப்பிக்கும் காதலும் காதலோ?

பாங்கனையே [204]வாயிலாய்ப் பலகாலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையும் தெளிவாக இருளிடைக்கண்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான்
தமியையாய்த்
[205]தடமலர்த் தாரருளும் தகுதியும் தகுதியோ?

இவை மூன்றும் தாழிசை

தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்;
போதுறு நறுவிரை புதுமலர் [206]விரிதரு
கருநெய்தல் விரிவன கழி;

---

உரை:பா.வே 195. முன்னாட்கண்-யாப்.வி.84 மேற்.
196. அல்லார்க்கும், 197. தலையளிக்கும்-யாப்.வி.84 மேற்.
198. கதிப்பாகி, 199. மாட்சியாறறியாத-யாப்.வி.84 மேற்.
200. அமிழ்தளைஇ, 201. பொன்புனை-யாப்.வி.84 மேற்.
202. தமியையாய்க், 203. கதிர்ப்பிக்கும்-யாப்.வி.84 மேற்.
204. வாயிலாப், 205. தடவரைத்தார் அருளும்நின் -யாப்.வி.84 மேற்.
206. தெரிதரு-யாப்.வி.84 மேற்.

தீதுறு[207] திறமுறு சினைநனி சினைதொறும்
துணையொடு மிணைவன துறை;
[208]முதுறு மொளியொடும் குழிகெழு மொலிகலி
வலிசெல அறைவது கடல்

இவை நான்கும் அராகம்

கொடுதிற லுடையன சுறவேறு கொட்பதனால்
[209]விடுங்கழி இரவருதல் [210]வேண்டாமென் றுரைத்திலமோ?
கருநிறப் பெருந்தொழுவில் கராம்பெரி துடைமையால்
இருணிறத் தொருகானல் இரவாரல் என்றிலமோ?

இவை ஈரடி இரண்டம்போதரங்கம்

நாணொடு கழிந்தன்றால் பெண்ணரசி நலத்தகையே;
துஞ்சலும் ஒழிந்தன்றால் தொடித்தோளித் தடங்கண்ணே;
அரற்றொடு கழிந்தன்றால் [211]ஆரிரு ளாயிழைக்கே;
நயப்பொடு கழிந்தன்றால் [212]நனவிலும் நன்னுதற்கே

இவை நாற்சீரோரடி நான்கம்போதரங்கம்

அத்திறத்தால் அசைந்தன தோள்;
அலரதற்கு மெலிந்தன கண்;
பொய்த்துரையால் புலர்ந்தது முகம்;
பொன்னிறத்தால் போர்த்தது முலை;
அடியினால் [213]அசைந்தது நகை;
அணியினால் அசைந்தது இடை;
குழலினால் [214]நிமிந்தது முடி;
குறையினாற் கோடிற்று நிறை

இவை முச்சீரோரடி எட்டம்போதரங்கம்

உட்கொண்ட தகைத்தொருபால்
உலகறிந்த அலர்த்தொருபால்

---

உரை: பா.வே: 207. திறமறு கெனநனி முனமுனம்-யாப்.வி.84 மேற்.

208. முதுறும் ஒலிகலி நுரைதரு திரையொடு-யாப்.வி.84 மேற்.

209. இடுங்கழி, 210. வேண்டாவென் றிசைத்திலமோ-யாப்.வி.84 மேற்.

211. ஆரிருளெம், 212. நனவதுவும்-யாப்.வி.84 மேற்.

213. ஒசிந்தது, 214. அவிர்ந்தது - யாப்.வி.84 மேற்.

[215]கற்கொண்டல் துணித்தொருபால்
[216]கழிப்பெய்தும் படிந்தொருபால்
பரிவுறூஉம் தகைத்தொருபால்
[217]படிதொறூஉம் தகைத்தொருபால்
இரவுறூஉம் துயரொருபால்
[218]இனிவந்த வெளிற்றொருபால்
[219]மெலிவுறூஉம் துயரொரு பால்
விளர்ப்புவந் தடைந்தொருபால்
[220]பொலிவுவந் தகன்றொருபால்
பொறைவந் தகன் றொருபால்
காதலில் [221]கழித்தொருபால்
கட்படாத் துயரொருபால்
[222]ஓதிற்சென் றணைத்தொருபால்
[223]இயனாணிச் செறித்தொருபால்

இவை இருசீரோரடிப் பதினாறம்போதரங்கம்

எனவாங்கு

இது தனிச்சொல்

இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவணலம்
என்னவு [224]முன்னாட் டுன்னா யாகில்
கலந்த வண்மையை ஆயினும் நலந்தகக்
கிளையொடும் [225]கெழீஇய தளையவிழ் கோதையைக்
கற்பொடு [226]காணியம் யாமே
பொற்பொடு [227]பொலிகினும் புணர்ச்சி தானே"

(யாப். வி. 84. மேற்.)

---

உரை:பா.வே: 215. கட்கொண்டால் துளித்தொருபால்-யா.வி.84 மேற்.
216. கழிவெய்தும், 217. படர்வுறூவம் பசப்பொருபால்-யாப்.வி.84 மேற்.
218. இளிவந்த, 219. மெலிவுவந்ததலைத்தொருபால்-யாப்.வி.84 மேற்.
220. பொலிவுசென், 221. கதிர்ப்பொருபால்-யாப்.வி.84 மேற்.
222. ஏதிலர்சென் றணைந்தொருபால்-யாப்.வி.84 மேற்.
223. இயனாணிற் செறிவொருபால்-யாப்.வி.84 மேற்.
224. முன்னாள் துன்னாய் , ஆகி-யாப்.வி.84 மேற்.
225. கெழீஇத், 226. காணிய-யாப்.வி.84 மேற்.
227. பொலிகநும்-யாப்.வி.84 மேற்.

இஃது ஆறுறுப்பும குறையாது வந்த வண்ணக வொத்தாழிசைக்கலிப்பா; என்னை?

"அராக வடியோ டாறுறுப் புடைத்தாய்
வராத தன்றே வண்ணகத் தாழிசை"

என்றாராகலின் அறிந்துகொள்க. (25)

## வெண்கலிப்பா

உ௬ சூ. தன்றளையும் வெண்டளையும் தக்கவக வற்றளையும்
ஒன்றிக் கலியின் உறுப்பின்றிக் - குன்றி
அடியள வின்றி அளவடியாய் முச்சீர்
முடிவினுற[228] வெண்கலியாய் முற்றும்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோ வெனின் வெண் கலிப்பாவாமாறுணர்த்திற்று.

கலித்தளையும் வெண்டளையும் ஆசிரியத்தளையும் எய்திக் கலிப்பாவின் உறுப்புகளான தரவு தாழிசை அராகம் முதலான உறுப்புகளின்றி, ஓசை குன்றி, அடியளவின்றி, நாற்சீரடியாய் நடந்து, முச்சீரால் முடியுமேல் வெண்கலிப்பா என்று முற்றும் என்றவாறு.

அவற்றுக்கு உதாரணம் வருமாறு:

"வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணாகம் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்தச்
சோலைதாழ் பிண்டிக்கிழ்ச் சூழ்ந்தவர்தன் சொல்முறையால்
மனையறமும் துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த
தொன்மைசால்[229] கழிகுணத்தெந் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்துமாறு" (யாப். கா. 40 மேற்.)

---

உ௬சூ. பா.வே: 228. முடிவினுழை -(பே)

உரை. பா.வே: 229. மிகுகுணத்தெந்-யாப்.கா.40 மேற்.

இஃது ஈற்றடி முச்சீராய் வெண்டளையானும் கலித்தளையானும் வந்த வெண்கலிப்பா.

[230] "சுடர்தொடி கேளாய் தெருவில் நாமாடும்
மணற்சிற்றில் காலிற் [231] சிதைபு அடர்ச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ரூட்டிவா என்றாள் [232] எனையானும்
தன்னை அறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னாய் இவனொருவன் செய்ததுகாண் [233] என்றேனுக்
கன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
[234] உண்ணுநா விக்கினான் என்றேனா அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன்" (கலி. 51)

இது வெண்டளை தட்டு ஒரு பொருள்மேல் வந்தமையான் வெண்கலிப்பா.

"[235] ஏர்மலி நறுங்கோதை எருத்தலைப்ப இறைஞ்சித்தன்
வார்மலர்த் [236] தடங்கண்ணார் வலைப்பட்டு வருந்தியவென்
தார்வரை அகன்மார்பன் தனிமையை அறியுங்கொல்
[237] சீர்மலி கொடியிடை சிறந்து" (யாப். வி. 85 மேற்.)

இஃது ஆசிரியத்தளையானும் தன்தளையானும் வந்த வெண்கலிப்பா.

வளங்கெழு வாணெடுங் [238] (கண்ணால்) கெடலறு மாமுனியும்
உளங்கெழு நேரிசை அம்போ தரங்கவொத் தாழிசையாம்

உரை: பா.வே: 230. சுடர்த்தொடி, 231. சிதையா-யாப்.கா.40 மேற்.
232. எனயானும், 233. என்றேனா-யாப்.கா.40 மேற்.
234. உண்ணுநீர்-கலி.51. 235. ஏர்மலர் -யாப்.வி.85 மேற்.
236. தடங்கண்ணாள்- 237. சீர்நிறையாப்.வி.85 மேற்.
238. இவ்விடத்தில் பேரூர்ச் சுவடியிலும் விடுபாடுள்ளது.

விளங்கும ணிப்பசும் பொன்னாகும் வண்ணகம் வெண்கலிப்பா
துளங்கிய வாளார் சுடர்தொடி ஏர்மலி சொல்லினவே

இவ்வுரைச்சூத்திரத்தின் வழியே கலிப்பா நான்கிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (26)

## தரவு, தரவிணை, சிஃறாழிசை, பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாக்கள்

உ௰எ. தரவும் தரவிணையும் சார்ந்த தனிச்சொல்
சுரிதகமுற் றெய்தலுமாம் தோகாய் - விரவிய
சிஃறா ழிசையும்[239] சிலவாகி நான்குறுப்பாம்
பஃறா ழிசையுமதன் பண்பு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் தரவு கொச்சகக் கலிப்பாவும், தரவிணைக் கொச்சகக் கலிப்பாவும், சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவும், பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும் ஆமாறு உணர்த்திற்று.

ஒருதரவு வந்தால் தரவு கொச்சகக்கலிப்பா என்றும், தரவு இரண்டு வந்தால் தரவிணைக் கொச்சகக்கலிப்பா என்றும், சில தாழிசை வந்தால் சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா என்றும், பல தாழிசைவந்தால் பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா என்றும் பெயரிட்டு வழங்கப்படும் என்றவாறு. வரலாறு:

'செல்வப்போர்க்கதக்கண்ணன்' (யாப். வி. 23 மேற்.) என்பது சுரிதகமில்லாத தரவு கொச்சகக்கலிப்பா.

"குடநிலைத் தண்புறவிற் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவில் தகையேறு மரம்பாய்ந்து
வீங்குபணிக் கயிறொரீஇத் தாங்குவனர் தோன்றப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடி.முல்லை முறுவலிப்ப

எனவாங்கு

ஆனொடு புல்லிப் பெரும்புதர் முனையும்
கானுடைத் தவர்தேர் சென்ற வாறே" (யாப். வி. 22 மேற்.)

இது தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த தரவு கொச்சகக் கலிப்பா.

---

உ௰எ. பா.வே: 239. சிலவாக்கை நான்குறுப்பாச் -(உ)

"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்கும் காவலனாம்
கொடிபடு [240] வரைமார்பிற் கூடலார் கோமானே
துணை வளைத்தோள் இவள்மெலியத் தொன்னலம்
தொடர்புண்டாங்

கிணைமலர்த்தார் அருளுமாய் இதுவிதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் [241] புலணயாகக் கருதாரோ?

அதனால்

செவ்வாய்ப் பேதை இவள்திறத்
தெவ்வா றாங்கொலிஃ தெண்ணிய வாறே"
(யாப்.வி.86 மேற்.)

இது சுரிதகத்தால் இற்ற தரவிணைக்கொச்சகக்கலிப்பா.

சுரிதகமில்லாத தரவிணைக்கொச்சகக்கலிப்பா வந்தவழிக் கண்டு கொள்க.

"பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின்
மிசைதோன்றக்
குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ் [242] கோமன்னர்
புடைசூழப்
படைப்பரிமான் தேரினொடும் பரந்துலவும் மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே;

இது தரவு

ஆங்கொருசார்,

உச்சியார்க் கிறைவனாய் [243] உலகெலாம் காத்தளித்த
பச்சியார் மணிப்பைம்பூண் [244] புரந்தரனாய்ப் பாவித்தார்
[245] வச்சிரம் காணாத காரணத்தான் மயங்கினரே;

ஆங்கொருசார்,

மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்த மயங்காச்செங்

உரை: பா-வே: 240. வரைமாடக், 241. துணையாகக்- யாப். வி. 86 மேற்.

242. குடைமன்னர், 243. உலகமெலாம் - யாப். வி. 86 மேற்.

244. புரந்தரனாய், 245. வச்சிரங்கைக் -யாப். வி. 86 மேற்.

கோல்கொண்ட சேவலங்[246]கொடியவனாய்ப் பாவித்தார்
வேல்கொண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே;

ஆங்கொருசார்,

அக்காலம் அணிநிரைகாத் தருவரையால்[247]பணிகவித்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாய்ப் பாவித்தார்
சக்கரம் காணாத காரணத்தால் சமழ்த்தனரே;

அஃதான்று

கொடித்தேர் அண்ணல் கொற்கைக்கோமான்
[248]நிறைபுகழ் ஒருவன் செம்பூட் சென்று
[249]நனியறிந் தனனவர் பலரே யானும்
ஐவருள் ஒருவனென் றறியல் ஆகா
மைவரை யானை[250]மயங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி தெருவொடும் பொலிந்தே"

(யாப். வி. 86 மேற்.)

இது சுரிதகம்

இஃது இடையிடை தனிச்சொற்பெற்று நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவிற் சிறிது வேறுபட்டுத் தாழிசை மூன்றேயாய் வந்தமையால் சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

"தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியும் உடனிறைவும் உடன்தளர்வும் முன்னாட்கண்
கண்மதியோர்ப் பிவையின்றிக்[251]காரிகையை நிறைகவர்ந்த
[252]பெண்மதியை நிகழ்ந்ததுநின் பேரருளும் பிறிதாமோ?

இது தரவு

இளநலம் இவள்வாட இரும்பொருட்குப் பிரிவாயேல்
[253]தளவகவல் முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ?

---

உரை:பா.வே. 246. கொடியோனாய், 247. பனிதவிர்த்து - யாப். வி. 86 மேற்.
248. நின்றபுகழ், 249. என்றுநனி அறிந்தனர் பலரே தானும் யாப். வி 86 மேற்.
250. மடங்கா, 251. காரிகையின்-யாப். வி. 86 மேற்.
252. வெண்மதியின் மகிழ்ந்தநின், 253. தளநலம்-யாப். வி. 86 மேற்.

தகைநலம் இவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல
வகைநலம் இவள்வாடி[254] வருந்தியவள் இருப்பாளோ?

அணிநலம் இவள்வாட அரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசோடு[255] மடிவாளோ?

நாம்பிரியோம் என்றுரைத்துநறுநுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியோம்[256] என்றுரைத்த உயர்மொழியும் பழுதாமோ?

[257]குன்றழித்த திரடோளாய் கொய்புனத்துக்[258] கூடியஞான்
[259]றன்றெழில் அருமொழியால் அருளுவதும் அருளாமோ?

சில்பகலும் ஊடியக்கால் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலும் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ?

இவையாறும் தாழிசை

அதனால்

இது தனிச்சொல்

அரும்பெறல் இவளினும் தரும்பொருள் அதனினும்
பெரும்பெறல்[260] இனியன வெறுக்கைமற் றதனால்
[261]விழுமதி அறிமதி அறிவாம்
[262]கெழுமிய காதலில் தரும்பொருள் சிறிதே''

இது சுரிதகம் (யாப். வி. 86 மேற்.)

இது நான்கடித்தரவும், இரண்டடித்தாழிசை ஆறும், ஒரு தனிச்சொல்லும், நான்கடிச்சுரிதகமும் பெற்றுவந்த பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா.

'தோகாய்' என்பது மகடூஉ முன்னிலை. (27)

---

இந்நூலுள் பின்னிரண்டு தாழிசைகளும் இடம் மாறியுள்ளன.

உரை:பா.வே. 254. வருந்தியல்- 255. மலிவாளோ-யாப். வி. 86 மேற்.
256. என்றநின் 257. குன்றளித்த-யாப். வி. 86 மேற்.
258. கூடியநாள்· 259. அன்றளித்த அருண் மொழியால் அருளியதும் -யாப்.வி. 86 மேற்.
260. அரியன-யாப். வி. 86 மேற்.
261. விழுமியது-யாப்.வி. 86 மேற்.
262. கழுமிய-யாப்.வி. 86 மேற்.

## மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா

உ௰ அ. தரவுமுதல் ஆறுறுப்பும் தத்தம் முறைநீங்கி
வருதலுமொன் றொன்று மயங்கி - விரவுதலும்
மிக்கும் குறைந்தும் விகற்பத்தின் வந்துறலும்
ஒக்கும்மயங் கற்கென் றுரை

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவாமாறு உணர்த்திற்று.

'தரவுமுதல் ஆறுறுப்பும் தத்தம் முறைநீங்கி' என்றது தரவு தாழிசைக்கு மேல் ஒன்றன்பின் வேறொன்றாகியும், ஒவ்வொன்று மிகுந்தும், ஒன்று குறைந்தும், விகற்பம் எய்தியும் அவ்வாறுறுப்பும் பெற்றுவருவது மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா ஏனப்படும் என்றவாறு.

வரலாறு:

[263]"மணிதிகழா நெடுமுடி மாயவனும் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலும் கானலும் தோன்றுமால்
[264]நுரையறைந் தவையன்ன [265]நொய்ப்பறைய
சிறையன்னம்
இரைநயந் திறைகூரும் ஏமஞ்சார் துறைவகேள்;

[266]மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
[267]கடலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி [268]இறக்கல்லா
எழுமுந்நீர் பரந்தோங்கும் ஏமஞ்சார் துறைவகேள்;

இவை இரண்டும் தரவு

[269]கொடிபுரை நுழைநுசுப்பில் குழைக்கமர்ந்த
திருமுகத்தோள்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டும் துறவலனே என்றியால்;

---

உரை:பா.வே: 263. மணிகிளர, 264. நுரைநிவந்-யாப். வி. 86 மேற்.
265. நொய்பறைய, 266. வரையென-யாப். வி. 86 மேற்.
267. கரையெனக்,கடலெனக் -யாப். வி. 86 மேற்.
268. இறக்கில்லா, 269. கொடிபுரையும்-யாப். வி. 86 மேற்.

கண்கவர் மணிப்பைம்பூண் கயில்கவைய சிறுபுறத்தோள்
தெண்பனிநீர் உகக்கண்டும் திரியலனே என்றியால்;

நீர்பூத்த நிரையிதழ்கண் நின்றொசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே என்றியால்;
கனைவரல்யாற் றிடுகரைபோல கைந்நில்லா
துண்ணெகிழ்ந்து
நினையுமென் நிலைகண்டும் நீங்கலனே என்றியால்;

வீழ்சுடரின் [270]நெய்போல விழுமநோய் பொறுக்கல்லா
தாழுமென் நிலைகண்டும் [271]தாங்கலனே என்றியால்;

கலங்கவிழ்த்த நாய்கன்போல் [272]களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் நிலைகண்டும் போகலனே என்றியால்;

இவை ஆறும் தாழிசை

[273]அஃதான்று

இது தனிச்சொல்

[274]அடும்பமல் இறும்பின் நெடும்பணை மிசைதொறும்
கொடும்புற மடலிடை ஒடுங்கின குருகு;

செறிதரு [275]செறிவிடை எறிதொழில் இளையவர்
நெறிதரு புரவியின் மறிதரும் [276]திமிலம்;

அரைசுடை நிரைபடை விரைசெறி முரசென
துறைதரு திரையொடு கரைபொரும் கடல்;

[277]அலங்கொளிர் விரிசுடர் [278]இலங்கொளி மனைதொறும்
கலந்தெறி காலொடும் புலம்பின பொழில்;

இவை நான்கும் அராகம்

---

உரை:பா.வே. 270. நெய்யேபோல், 271. அகல்கிலனே-யாப். வி. 86 மேற்.

272. களைதுணை, 273. அதனால்- யாப்.வி. 86 மேற்.

274. அடும்பயில் இறும்பிடை நெடும்பனை, யாப்.வி. 86 மேற்.

275. செருவிடை, 276. திமில்-யாப். வி. 86 மேற்.

277. அலங்கொளி-யாப். வி. 86 மேற்.

278. இலங்கெழில் - யாப். வி. 86 மேற்.

[279]விடாது கழலுமென் வெள்வளையும்[280]செறிப்பாய்மன்
[281]கெடாது பெருகுமென் கேணமையும் நிறுப்பாயோ?

ஒல்லாது கழலுமென் ஒளிவளையும்[282]செறிப்பாய்மன்
நில்லாது பெருகுமென் நெஞ்சமும் நிறுப்பாயோ?

தாங்காது கழலுமென் தகைவளையும்[283]செறிப்பாய்மல்
நீங்காது பெருகுமென் நெஞ்சமும் நிறுப்பாயோ?

மறவாத[284]அன்பினேன் மனநிற்கு மாறுரையாய்
துறவாத தமருடையேன் துயர்திரு மாறுரையாய்

காதலர்[285]மார்பின்றிக் காமக்கு மருந்துரையாய்
ஏதிலர் தலைசாய யானுய்யு மாறுரையாய்

இணைபிரிந்தார்[286]மார்பின்றி இன்பக்கு மருந்துரையாய்
துணைபிரிந்த தமருடையேன் துயர்திரு மாறுரையாய்
இவை ஆறும் தாழிசை

எனவாங்கு

இது தனிச்சொல்

பகைபோன்றது துறை;
[287]பரிவான குறி;
நகையிழந்தது முகம்;
நனிநாணிற்[288]றுடம்பு;
[289]தகையிழந்தன தோள்;
தலைசிறந்தது துயர்;
புகைபரந்தது மெய்;
[290]பொறையாயிற்றென் உயிர்
இவை இருசீரோரடி எட்டம்போதரங்கம்

---

உரை:பா.வே: 279. விடா அது 280. தவிர்ப்பாய்மன்-யாப். வி. 86 மேற்.
281. கெடா அது, 282. தவிர்ப்பாய்மன்-யாப். வி. 86 மேற்.
283. தவிர்ப்பாய்மன், 284. அருளுடையேன்-யாப். வி. 86 மேற்.
285. மார்பன்றி, 286. மார்பன்றி யாப்.வி. 86 மேற்.
287. பரிவாயின, 288. றுளம் - யாப்.வி. 86 மேற்.
289. தகையிழந்தது, 290. பொறையாகின்றென் - யாப்.வி. 86 மேற்.

இனையது நிலையால் அனையது பொழுதால்
இனையல் வாழி தோழி [291] தொலையாப்
பனியொடு கழிக உண்கண்
என்னொடு [292] கழிகத் துன்னிய நோயே"

இது சுரிதகம். *(யாப். வி. 86 மேற்.)*

இது தரவு இரட்டித்துத் தாழிசை ஆறும், தனிச்சொல்லும், அராகம் நான்கும் பெயர்த்து ஆறுதாழிசையும், ஒருதனிச்சொல்லும், எட்டு அம்போதரங்க உறுப்பும், தனிச்சொல்லும் பெற்று நான்கடியே சுரிதகமாய்க் கலிக்கு ஓதப்பட்ட ஆறுறுப்புமே வந்து மிக்கும் குறைந்தும் [293] உறழ்ந்தும் பிறழ்ந்தும் மயங்கிசையும் வந்தமையால் மயங்கிசைக்கொச்சகக் கலிப்பா. என்னை?

[294] தரவிரண்டு தாழிசையா றோர்தனிச்சொல் நான்காய்
வருமராகம் தாழிசை யாறாய்-ஒரு தனிச்சொல்
அம்போ தரங்கம் தனிச்சொல் சுரிதகமும்
தம்போல் மயங்கிசைய தாம்

என்றாராகலின் (28)

## வஞ்சிப்பாவியல்

### வஞ்சிப்பாவின் பொதுவிலக்கணமும் வகையும்

உய கூ. ஒன்றியும் ஒன்றாத் தளையும் பிறதளையும்
சென்று தனிச்சொற் சிறந்தகவற் - கொன்றியதோர்
ஈறின் முடியும் எழில்வஞ்சி நாலசைச்சீர்
கூறுந்தன் வெண்டளையும் கொண்டு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஒன்றிய

---

உரை:பா.வே: 291. துனைவரல்,292. கழிகவித் - யாப்.வி. 86 மேற். 293. பிறழ்ந்தும்-
294. இந் நூற்பா இருசுவடிகளிலும் பிழைபடவே அமைந்திருந்தது. (லு)
வெண்பாவின் அமைதிக்கேற்ப இதன் இரண்டாம் அடி திருத்தப்பட்டுள்ளது. சுவடியில் உள்ள நூற்பா வடிவம்:

தரவிரண்டு தாழிசையா றோர்தனிச்சொல் நான்காய்
வருமராகந் தாழிசையா றொருதனிச்சொல்
அம்போ தரங்கம் தனிச்சொல் சுரிதகமும்
தம்போல் மயங்கிசைய தாம்.

வஞ்சித்தளையும், ஒன்றாத வஞ்சித்தளையும், வெண்சீர்வெண்டளையும், பெற்றுக் குறளடியாகத்தான் சிந்தடியாகத்தான் நடந்து, தலிச்சொற்பெற்று 'முசிவில் ஆசிரியம்' போல் முச்சீர்மேல் நாற்சீராய் இறுவது குறளடி வஞ்சிப்பா என்றும் சிந்தடி வஞ்சிப்பா என்றும் பெயர்பெற்று நடக்கும் என்றவாறு.

'நாலசைச்சீர் கூறுந்தன் வெண்டளையும் கொண்டு' என்ற விதப்பினால் [நால]சைச்சீர் எய்தியும் அப்பொதுச்சீர்க்குத் தளை வெண்டளைபோலச் சொல்லிக்கொள்ளவும்.

உதாரணம் வருமாறு:

"வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்தினார்
[295]என்றும்
அயலார் நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே" (யாப். கா. 22 மேற்.)

இஃது ஒன்றிய வஞ்சித்தளையால் வந்த ஏந்திசைத் தூங்கல்.

"வானோர்தொழ வண்டாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாவருள் [296]சூர்கோவினைக்
கானார்
மலர்கொண் டேத்தி வுணங்குநர்
[297]பலர்கொண் டேத்தப் பரவுவர் கதியே"
(யாப். கா. 22 மேற்.)

இது ஒன்றாத வஞ்சித்தளையான்வந்த அகவல் தூங்கல்.

'மந்தா நிலம்' (யாப். வி. 21 மேற்.) என்பது ஒன்றிய வஞ்சித்தளையும் ஒன்றாத வஞ்சித்தளையும் பிறதளையும் வந்த பிரிந்திசைத் தூங்கல்.

'யாதானும்' (இலக். 16, 19, 22) என்னும் உரைச்சூத்திரத்தின் வழியே வஞ்சிப்பாவிற்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க. (29)

---

உரை:பா.வே: 295. நாளும் - யாப்.கா. 22 மேற்.

296. சூரறிவனைக், 297. பலர்புகழ் முத்திப் பெறுகுவர் - யாப்.கா. 22 மேற்., லேர்கண் டேத்த-(பே)

## மருட்பா

ங ம. புறநிலையும் கைக்கிளையும் போந்தபொருள்[298]மெய்வா
யுறவாழ்[299] செவியறிவு றூவும் - உறுபொருளாய்
வெண்பா முதலாய் விதியகவல் ஈறாகிப்
பண்பாய் முடியுமருட் பா

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் மருட்பாவாமாறு உணர்த்திற்று.

புறநிலைவாழ்த்து மருட்பாவும், கைக்கிளை மருட்பாவும், வாயுறைவாழ்த்து மருட்பாவும், செவியறிவுறூஉ மருட்பாவும் ஆமாறு உணர்த்திற்று.

இந்நான்கு பொருள்மேலும் வெண்பா முதலாக ஆசிரியம் ஈறாய் வருவது மருட்பா என்று வழங்கப்படும் என்றவாறு.

மருட்பா வருமாறு:

"தென்றல் இடைபோழ்ந்து[300]தேனார்ந்து முல்லை
முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோளூர்
குன்றமர்ந்த கொல்லேற்றான் நிற்காப்ப என்றும்
திரா நண்பிற்[301]றேறு
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே"

(யாப்.வி. 55 மேற்.)

இது 'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப் பழுதில் செல்வமொடு ஒருகாலைக் கொருகால் பொலிமின்' என்று சொன்னமையால் புறநிலைவாழ்த்து மருட்பா.

"திருநுதல்[302]வேர்வரும்பும் தேங்கோதை வாடும்
இருநிலக்கு சேவடியும் தோயும்-[303]அரிபரந்து
போகிதழ் உண்கண் இமைக்கும்
ஆகு மற்றிவள் அகலிடத் தணங்கே" (யாப். வி. 55 மேற்.)

இது துணிதலை நுதலிய ஒருதலைக்காமமாதலிற் கைக்கிளை மருட்பா.

---

ங ம. பா.வே. 298. மெய்யுற, 299. பிறவாழ்-(உ)
உரை.பா.வே: 300. தேனார் நறுமுல்லை - யாப்.வி. 55 மேற்;(பே)
301. றேவர், 302. வேரரும்பும், 303. அரிபரந்த - யாப்.வி. 55 மேற்.

"பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையின் ஆண்ட [304] நிகரிலார் மாட்டும்
சிலமுறை அல்லது [305] செல்வம்நில் லாது
இலங்கும் எறிபடையும் ஆற்றலும் அன்பும்
கலந்ததம் கல்வியும் தோற்றமும் ஏனைப்
பொலஞ்செய் புனைகலனோ டிவ்வாறா னாலும்
விலங்கிவரும் கூற்றை [306] நீக்கலும் [307] ஆகா
அனைத்தாதல் நீயிரும் [308] கண்டீர் [309] நினைத்ததைக்
கூறிய [310] அம்மொழி பிழையாது
[311] சேறுநீர் ஒழுகின் சென்றுபயன் தருமே"
(யாப். வி. 55 மேற்.)

இது மெய்ப்பொருள் சொன்னமையான் வாயுறைவாழ்த்து மருட்பா.

"பல்யானை மன்னர் முருங்க அமருழந்து
கொல்யானைத் [312] தேரொடும் கோட்டந்து-நல்ல
தலையாலங் கானம் பொலியத்-தொலையாப்
படுகளம் [313] பாடுழந் தாற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக-அடுதிறல்
ஆளி நிமிர்தோள் பெருவழுதி-எஞ்ஞான்றும்
ஈரம் உடையையாய் என்வாய்ச் சொற்கேட்டி
உடைய உழவரை [314] நெஞ்சனுகக் கொண்டு
வருங்கால் உழவர்க்கு வேளாண்மை [315] செய்மின்;
மழவர் இழைக்கும் [316] மழைக்கால் நிதியீட்டம்
காட்டும் அமைச்சரை ஆற்றத் தெளியல்
அடைத்த அரும்பொருள் ஆறன்றி [317] வெளவலின்
[318] அத்தைப் பெரும்பொருள் ஆசையாற் சென்று
பெருங்குழிசி மன்ற மறுக அகழாதி என்றும்
மறப்புறமாக மதுரையார் ஓம்பும்

---

உம் கூ.உரை: பா.வே: 304. நிகரில்லார், 305. செல்வங்கள் நில்லாது - யாப்.வி. 55 மேற்.
306. விலக்கலும், 307. ஆகாது - யாப்.வி. 55 மேற்.
308. காண்டீர், 309. நினைத்தகக் - யாப்.வி. 55 மேற்.
310. வெம்மொழி, 311. தேறிநீர், 312. தேரொடு உற். ப்வி.
313. பாடுபுக் காற்றிப், 314. நெஞ்சனுங்கக் - யாப்.
315. செய்யல், 316. வரைகாண் - யாப்.வி. 55 மேற்.
317. வெளவல், 318. ஈகைப் - யாப்.வி. 55 மேற்.

அறப்புறம் ஆசைப்பா டேற்க-அறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி-நவையாக
நட்டார் குழிசில் சிதையாதி-ஒட்டார்

செவிப்புதைக்கும் தீயகடுஞ்சொல்[319] கலியுடைத்தாய்க்
கற்றார்க் கினனாகிக் கல்லார்க் கொடிந்தொழுகிச்
செற்றார்ச்[320] செறிந்துநிற் சேர்ந்தாரை ஆக்குதி
அற்றம் அறிந்த அறிவினாய்-மற்றும்
இவையிவை நீயாய்ந் தொழுகின் நிலையாப்
பொருகடல் ஆடை நிலமகள்
ஒருகுடை நிழல் துஞ்சுவள் மன்னே" (யாப்.வி.55 மேற்.)

இது வியப்பின்றி உயர்ந்தோர்கண் அவிந்தொழுகுதல் கடன் என்றமையான் செவியறிவுறூஉ மருட்பா. என்னை?

"வாயுறை வாழ்த்தே வயங்கநாடின்
வேம்பும் கடுவும்[321] போல்வன வெஞ்சொல்
தாங்குதல்[322] இன்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத்[323] தன்றே"
(தொல். பொருள். 417)

"புறநிலை வாயுறை செவியறி வுறுவெனத்
திறநிலை மூன்றும் திண்ணிதின் தெரியின்
வெண்பா வியலினும் ஆசிரிய வியலினும்
பண்புற மொழியினும் பாவின[324] தென்பர்"
(தொல். பொருள். 453)

என்றாராகலின்.

தென்ற லிடையும் திருநுதல்[325] வேரும் பலமுறையென்
றொன்றிய பாவும்பல் யானையு மென்பவொண்[326] போதமர்ந்த
பொன்றிக ழோதி புறநிலை கைக்கிளை வாயுறைவாழ்த்
தொன்றிவற் றிற்குஞ் செவியறி விற்கு மிலக்கியமே (யாப். கா. 49);

இவ்வுதாரணச் சூத்திரத்தின் வழியே மருட்பா நான்கிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க. (30)

உரை.பா.வே: 319. கலி படைத்தாய், 320. செருத்து - யாப்.வி. 55 மேற்.
321. போல, 322. இன்று - தொல். பொருள். 417
323. தன்றே - தொல். பொருள். 417 324. என்ப - தொல். பொருள். 463
325. வேர்வரும் பன்முறையென், 326. போதமைந்த - யாப்.கா. 49

# பாவினவியல்

## வெண்பாவினம்,

### வெண்டாழிசை

ங ய க. சீர்பலவாய் ஈற்றடியின்[327] சீர்குறைந்தும்[328] செந்துறையின்
பேர்பிறழ்ந்தும்[329] சந்தம் பிறழ்ந்துமுறின் - ஈரடியாய்ச்
சேர்குறட் டாழிசையாம்; தாழிசையாம் சிந்தியலின்
ஒர்பொருள்மேல் மூன்றாய் உறின்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் குறள் வெண்பாவிற்கு இனமாகிய குறட்டாழிசைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

சீர்பலவாய் ஈற்றடியின் சீர்குறைந்தும் செந்துறை பிறழ்ந்தும் குறள்வெண்பாவிற் சிதைந்து வருவனவும் குறட்டாழிசை எனப்படும் என்றவாறு.

சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் வரப்பெறும் எனக்கொள்க.

வரலாறு:

"நண்ணு வார்வினை நைய நாடொறும்
நற்றவர்க் கரசாய்[330] ஞானக்
கண்ணினான் அடியே அடைவார்கள் கற்ற வரே"

(யாப். வி. 64 மேற்.)

எனவும்,

"நீல[331] மால்கடல் நீடு வார்திரை
நின்ற போற்பொங்கிப் பொன்று மாங்கவை
காலம் பல்காலம்[332] சென்ற செல்வ
யாக்கை கழிதலுமே"

(யாப். வி. 64 மேற்.)

எனவும் ஈற்றடி குறைந்து இரண்டடியாய்ப் பலசீரான் வந்த குறட்டாழிசை.

---

ய க. பா.வே : 327. சீர்குழைந்தும், 328. செந்துடையின், 329. பேர்பிதிர்ந்தும் (உ)
உரை. பா.வே: 330. ஞானநற், 331. மாகடல், 332. சென்று-யாப்.வி. 64 மேற்.

'செந்துறையின் பேர்பிறழ்ந்தும்' என்றமையால் அடி இரண்டாய் அளவொத்தும், விழுமியபொருள் இன்றாகியும், ஓசை இன்றாகியும் செந்துறையில் சிதைந்து வருவன தாழிசைக்குறள் எனப்படும் என்றவாறு.

"பிண்டியின் நீழற் பெருமான் பிடர்த்தலை
மண்டிலம் தோன்றுமால் வாழி அன்னாய்" (யாப்.வி. 64 மேற்.)

"அறுவர்க் கறுவரைப் பெற்றும் கவுந்தி
மறுவறு பத்தினி[333]போல்வை யீரே" (யாப்.வி.64 மேற்.)

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றி வந்த செந்துறைச் சிதைவுத் தாழிசைக்குறள்.

"வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்
பண்டையள் அல்லள் படி" (யாப்.வி. 64 மேற்.)

இது சந்தழி குறட்டாழிசை. என்னை?

"அந்தடி[334]குறைநவுறு செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே" (யாப். 64),

[335]"உரைத்த இரண்டும் குறட்பா இனமே" (யாப். 65),

"அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடினது[336]ஆகும் வெள்ளொத் தாழிசை" (யாப். 56)

என்றாராகலின்,

"நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று[337]முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்" (யாப். வி. 66 மேற்.)

இஃது ஆசிரியத்தளையான் வந்த வெண்டாழிசை.

"அன்னாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னா ருடைப்புறம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்;

---

உரை.பா.வே: 333. போல்வயி னீரே-யாப் வி. 64 மேற்.
334. குறைநவும்-யாப். 64; குறைவும்-(பே). 335. உரைத்தன-யாப் 65
336. வெள்ளொத்தாழிசை ஆகும்-யாப். 66
337. முனிவ-யாப்.வி. 66 மேற்.

ஏடீ அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடா ருடைப்புறம் போல நலங்கவர்ந்து
[338]நீடான் துறந்து விடல்;
பாவாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவா ருடைப்புறம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்" (யாப். வி. 66 மேற்.)

இவை ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்த வெள்ளொத்தாழிசை.

"ஈரடி முக்கால் இசைகொள நடந்து
மூன்றுடன் அடுக்கித் தோன்றினொத் தாழிசையே"

எனவும் கொள்க. (யாப். கா. 32 மேற்., மயேச்.) (31)

## வெண்டுறை

ங ய உ. ஈரடிநாற் சீராகி எய்துவது [செந்துறையாம்]
நேருமடி ஏழுக்குள் [339]நின்றிடையில் - சேருமொரு
சீரளவில் லாதிறுதி தேய்ந்திறுதல் [வெண்டுறையாம்]
ஒரொலிபோல் வேற்றொலியும் ஒத்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வெண்பாவிற்கு இனமாகிய துறையும் (அதன்) அடிவரையறையும் உணர்த்திற்று.

விழுமியபொருளும் ஒழுகிய ஓசையும் பெற்று ஈரடியாய் வருவது வெண்செந்துறையாம், என்னை?

"ஒழுகிய [340]ஓசையும் ஒத்தடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே" (யாப். 63)

என்றாராகலின்.

வரலாறு:

"ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை" (முதுமொழி. 1)

எனவும்,

---

உரை.பா.வே: 338. வீடான்-யாப். வி. 66 மேற்.
ங ய உ .பா.வே: 339. ஈறிடையில்-(உ)
உரை.பா.வே: 340. ஓசையின்-யாப். 63

"கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம்[341] நாமே" (கொன்றை. 1)

எனவும் ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும பெற்றுவந்த வெண்செந்துறை.

'நேரும் அடி ஏழுக்குள் நின்று இடையில்' என்ற விதப்பினால் மூன்றடிச்சிறுமையாய் ஏழடிப்பெருமையாய் இடை நான்கடியானும் ஐந்தடியானும் ஆறடியானும் வந்து பின் பிறவடி சிலவடி சீர் குறைந்து [வருவது] வெண்டுறை எனப்படும்.

'ஒரொலிபோல் வேற்றொலியும் ஒத்து' என்ற மிகுதியால் முன்பு ஒர் ஒசையாகவும் பின் சிலவடி மற்றோர் ஒசையாகவும் வரும் எனக்கொள்க; என்னை?

"மூன்றடி முதலா ஏழடி காறும்வந்
திற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை ஆகும்" (யாப். 67)

என்றாராகலின்.

வரலாறு:

"குழலிசைய [வண்டினங்கள் கோழிலைய] செங்காந்தள்
அழலெரியின் மூழ்கினவால் அந்தோ[342] வெளியவென்
றயல்வாழ் மந்தி
[கலுழ்வன] போல்[343] நெஞ்சகழ்ந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாடன்[344] நீப்பானே அல்லன்"

(யாப். வி. 15 மேற்.)

இது நான்கடியாய் ஈற்றடி இரண்டும் இரண்டுசீர் குறைந்து வந்த ஒரொலி வெண்டுறை.

"தாளாளர்[345] அல்லர் தாம்பலர் ஆயக்கால் என்னாம்
என்னாம்

---

உரை:பா.வே: 341. யாமே கொன்றை.1
342. அளியஎன், 343. நெஞ்சகைந்து யாப்.வி.15 மேற்.
344. நீப்பனோ, 345. அல்லாதார்-யாப்.வி. 15 மேற்.

யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்த்துவிடும்[346] பிளறி யாங்கே" (யாப்.வி.67.மேற்.)

இது மூன்றடியாய் ஈற்றடி இரண்டும் இரண்டுசீர் குறைந்து வந்த ஓரொலி வெண்டுறை.

"முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகும்[347]
ஏவல்செய்ய மொழியும் கோமான்
வழங்குதிறல் வாள்மாறன் மாச்செழியன் தாக்கரிய
வைவேல் பாடிக்
கலந்துநின்[348] றார் எல்லாம் கருதலாகா வண்ணம்
இலங்குவாள் இரண்டினால் இருகைவீ[349] சிப் பெயர்த்
தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்இவள்
[350]பொலங்கொள்பூந் தடங்கட்கே
புரிந்துநின்[351] றார் எல்லாம்
விலங்கியுள் ளம்தபவி ளிந்துவே[352] றாயவே"
(யாப்.வி. 67 மேற்.)

இஃது ஏழடியாய் முதல் இரண்டடியும் அறுசீராய்ப் பின்பில் ஐந்தடியும் நாற்சீராய் வேறோர் ஓசையான் வந்த வேற்றொலி வெண்டுறை. ஐந்தடியானும் வருவன கண்டுகொள்க. என்னை?

[353] மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும் தாழிசை மூன்றிழிபேழ்
ஆன்றடி தாஞ்சில அந்தத் தடிகள் அவைகுறைந்து
தோன்றும் துறைவெள்ளை தள்ளா விருத்தம் தனிச்சொல்வந்து
மூன்றடி யானும் முடியும் முடிவொரு நான்கினுமே (யாப். கா. 32)

எனவும் கொள்க. (32)

---

உரை. பா. வே: 346. பிளிற்றி, 347. ஏவல்செய் மொழியும் கோமான்-யாப். வி. 67 மேற்.

348. றாரெலாம், கருதலா காவணம். 349. சிப்பெய-யாப். வி. 67 மேற்.

350. புலங்கொள், 351. றாரெலாம். 352. றாயவே-யாப். வி. 67 மேற்.

353. பேருர்ச்சுவடியிலும் இவ்வண்ணமே உள்ளது.

இவ்வுதாரண முதனினைப்புக் காரிகை யாப்பருங்கலக் காரிகையினுள் முறைமாறி அமைந்துள்ளது.

"மூன்றடி யானும் முடிந்தடி தோறும் முடிவிடத்துத்
தான்றனிச் சொல்பெறும் தண்டா விருத்தம் வெண்டாழிசையே
மூன்றடி யாய் வெள்ளை போன்றிறு மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாம்சில வந்தங் குறைந்திறும் வெண்டுறையே"

## வெளிவிருத்தம்

௩௰௩. அடிதொறும் ஈற்றொருசொல் லாகியடி மூன்றின்
முடியுமடி நான்குடனும் முற்றும் - குடிகொள்
அளிகளிக்கும் கூந்தல் அணங்கே அணங்கும்
வெளிவிருத்தம் வெண்சீர் மிகுந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வெளிவிருத்தத்திற்கு இலக்கணம் உணர்த்திற்று.

அடிதோறும் ஈற்றுச்சீர் ஒருசொல்லாகி மூன்றடியின் முடிவது வெளிவிருத்தம் எனப்படும்; (இது) நான்கடியாயும் அடிதோறும் ஒரு சொல்லாகிச் சீர்வரையறை இல்லாது நடப்பதுமாம் எனக்கொள்க; என்னை?

"ஒருமூன்று ஒருநான்கு அடியடி தோறும்
தனிச்சொற் றழுவி[354] நடப்பது வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப் படுமே"
(யாப். வி. 68 மேற்., காக்கை.)

என்றாராகலின்.

வரலாறு:

"கொண்ட ல் முழங்கினவால் கோபம்
பரந்தனவால்-என்செய்கோயான்
வண்டுவரிபாட வார்தளவம்
பூத்தனவால்-என்செய்கோயான்
எண்டிசையும் தோகை[355] இயைந்தகவி ஏங்கினவால்-என்
செய்கோயான்" (யாப்.கா.32 மேற்.)

இது மூன்றடியாய் 'என்செய்கோயான்'என்னும் தனிச்சொல் பெற்றுவந்த வெளிவிருத்தம்.

"ஆவா வென்றே அஞ்சினர்[356] ஆழா-ஒரு சாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டார்-ஒரு சாரார்
மாமா வென்றே மாய்ந்தனர்[357] நீந்தா-ஒரு சாரார்
எகீர் நாகீர் என்செய் தும் என்றார்- ஒரு சாரார்"
(யாப். வி. 68 மேற்.)

இது நான்கடியாய் 'ஒரு சாரார்' என்னும் தனிச்சொல் பெற்று வந்த வெளிவிருத்தம்.

---

உரை.பா.வே: 354. நடப்பன-யாப்.வி. 68 மேற்., 355. இருந்தகவி-யாப். வி. 32 மேற்-
356. ஆழ்ந்தார், 357. நீந்தார்-யாப்.வி. 68 மேற்..

'அளிகளிக்கும் கூந்தல் அணங்கே' என்பது மகடூஉ முன்னிலை.

*அருள்நண் ணுவார்நில மால்பிண்டி வண்டார் அறுவர் நண்பீது
ஒருசொலன் னாய்வெண்டா ழிசையார் கலிகொன்றைதுறை
மருள்குழல் தாளாள் முழங்கும் வெறியுறு மற்றொலியாம்
விருதுகொள் கொண்டலும் ஆவாவும் வெள்ளை விருத்தமென்னே

இவ்வுரைச் சூத்திரத்தின் வழியே தாழிசை, துறை, விருத்தம் என்னும் மூன்றற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க. (33)

## ஆசிரியவினம்

### ஆசிரியத்தாழிசை

ந:டு ச. மூன்றடி ஒர்பொருளாய் மும்மூன் றடியாகில்
[358]சான்றதோர் ஆசிரியத் தாழிசையாம் - தோன்றித்
தனியே வருதலுமாம் [359]தன்சீர்வெண் சீரின்
நனிநாற்சீர் [360]மேலும் நடந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஆசிரியத்தாழிசைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

'மூன்றடி ஒர்பொருளாய் மும்மூன்றடியாகில்' என்பது மூன்றடி ஒர்பொருளாய் அப்படி மும்மூன்றாய் ஒன்பது பாதமாய் வருவது ஆசிரியத்தாழிசையாம்; தனியே வருவது [முளவெனக்] கொள்க.

வரலாறு:

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ!

*இவ்வுரைச் சூத்திரத்தின் இரண்டாம் அடி இரண்டு சுவடிகளிலும் இந்நிலையிலேயே உள்ளது.

ந:டு ச. பா. வே: 358. சான்றோர்-(பே)., 359. தண்சீர் 360. மேலே (உ)

கொல்லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன்
[361]எல்லிநம் மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ!"

(சிலப். ஆய்ச். 19, 21)

இவை ஒருபொருள் மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

"வானுற நிமிர்ந்தனை வையகம் அளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயிர் ஓம்பினை
நீனிற வண்ண நின் இணைகழல் தொழுதனம்"

(யாப். வி. 75 மேற்.)

இது தனியே வந்த ஆசிரியத்தாழிசை.

[362]ஓர் வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் மூவடியாய் வரப்பெறும் எனக்கொள்க. (34)

## ஆசிரியத்துறை

௩ ௫ ரு. ஈற்றினயல் தேய்ந்தும் இடையில் மடக்காயும்
தோற்றும் இடையிடையே சொல்குறைந்தும் - சாற்றும்
நடுவில் மடக்காயும் நான்கடியாய் நிற்கும்
தொடைசேர் அகவற் றுறை

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஆசிரியத்துறைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

நான்கடியாய் ஈற்றயலடி குறைந்தும், நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து இடையில் மடக்காயும், நான்கடியாய் இடையிடை குறைந்தும், நான்கடியாய் இடையிடை குறைந்து நடுவில் மடக்காயும் வருவனவெல்லாம் ஆசிரியத்துறை எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"கரைபொரு[363]கான்யாற்றங் கல்லதர் எம்முள்ளி
வருதி ராயின்
அரையிருள் யாமத்[364]தடுபுலியோ நும்மஞ்சி அகன்று போக

உரை. பா. வே: 361. எல்லை-சிலப். ஆய். 19, 21
362. இதனையே கூறினர் யாப்பருங்கல விருத்திகாரரும் யாப்பருங்கல உரையாசிரியரும்.
363. காவின் யாற்றங்-(பே) 364. தடுபுலி யேறஞ்சி. யாப்.வி. 76

[365]நரையுரும் மோதும்நும் கைவேல் அஞ்சுதும்
வரையர மங்கையர் வவ்வுதல் அஞ்சுதும் [366]வாரலையே"
(யாப்.வி. 76 மேற்.)

இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து எல்லா அடியும் தம்முள் அளவொத்து வந்த ஆசிரியத்துறை.

"வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்சேய் வடிவே போலத்
தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி மாவினவித் தணந்தோன்யாரே
தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி [367]வந்தும்
பண்டைப் பதிவினவிப் பாங்கு படமொழிந்து
படர்ந்தோனன்றே" (யாப். வி. 76 மேற்.)

இது நான்கடியாய் ஈற்றயலடி (சீர்கு)றைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை.

"கொன்றார்ந் [368]தமர்ந்த குருமுகத் தெழில்நிறக்
குருதிக் [369]கோட்டின் இருந்தாட் பெருங்கைக்
குன்றாமென அன்றாமெனக்
குமுறா நின்றன கொடுந்தொழில் வேழம்;
வென்றார்ந் [370]தமர்ந்த விளங்கொளி இளம்பிறை
துளங்குவாள் இலங்கெயிற் றழலுளைப் பரூஉத்தாள்
அதிரும் வானென எதிரும் கூற்றெனச்
சுழலாநின்றன சுழிகண் யாளி;
சென்றார்ந் [371]தமர்ந்த சிறுநுதி வள்ளுகிர்ப்
பொறியெருத் [372]துருவவிப் புலவுநா றழல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை
என்றாங் கிவையிவை இயங்கலின் எந்திறத்து

---

உரை. பா. வே: 365. நரையரு மேறு நுங்கை வேலஞ்சும் நும்மை,
366. வாரலையோ, 367. வந்துநம்-யாப். வி. 76 மேற்.,
368. தமைந்த,369. கோட்டன, 370. தமைந்த 371. தமைந்த,
372. தெறுழ்வழிப் யாப்.வி.16 மேற்.

இனிவரல் வேண்டலம் தனிவரல் எனத்தலை
விலக்கலின் இறுவரை மிசைபெறி குறும்பிடை
இதுஎன் னெனவது நோனார்[373] கவிர்விடைக்
களவுள மதுகற்[374] றோரது கற்பன்றே"
(யாப். வி. 16 மேற்.)

இது முதலடியும் மூன்றாமடியும் பதினான்கு சீராய் அல்லாத அடியிரண்டும் பதினாறுசீராய் இடையிடைக் குறைந்துவந்த ஆசிரியத்துறை.

"இரங்கு குயில்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கம் அணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்
அரங்கம் அணிபொழிலா ஆடு மாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சம் என்செய்த
இளவேனில்" (யாப்.வி.52 மேற்.)

இது நான்கடியாய் இடையிடை குறைந்து நடுவடி மடக்காய் வந்த ஆசிரியத்துறை; என்னை?

"கடையதன் அயலடி கடைதபு[375] நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி ஆகி
இடையடி குறைநவும் அகவற் றுறையே" (யாப். 76)

என்றாராகலின் எனவும் கொள்க. (35)

## ஆசிரியவிருத்தம்

௩௰சூ. நெடில்முதல் ஒவ்வொருசீர் நேர்பெற்றி ரெண்சீர்
முடிவளவாய் நான்கடியின் முற்றும்[376] அடிபரவி
மூவினம் சந்தம் முடுகுமுறை சேர்விருத்தம்
மேவுமெல்லை இன்றி மிகுந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஆசிரியவிருத்தத்திற்கு இலக்கணம் உணர்த்திற்று.

---

உரை;பா.வே: 373. கரவர விடைக், 374. றோரோதும் கற்பன்றே-யாப்.வி. 16

375. நடைநவும் (பே)

௩௰சூ. பா. வே: 376. அடிபரவின்-(உ)

அறுசீர்விருத்தம் முதலாகப்[377] பதினறுசீரளவும் வருவது கழிநெடில் என்றும் ஆசிரியவிருத்தம் என்றும் பெயரிட்டு வழங்கப்படும் என்றவாறு.

'மூவினம் சந்தம் முடுகுமுறை சேர்விருத்தம்' என்ற விகற்பத்தினால் வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் குழிப்பில் சந்தப்பா ஆகியும், முடுகுவிருத்தம் ஆகியும், பின்னும் சில வேறுபாடாகியும் வருமெனக்கொள்க.

வரலாறு:

"விடம்சூழ் அரவின் இடைநுடங்க
[378]மின்வாள் வீசி விரையார்வேங்
கடம்சூழ் நாடன் [379]காளிம்பன்
கதிர்வேல் பாடும் மாதங்கி
380வடம்சேர் கொங்கை மலைதாந்தாம்
வடிக்கண் நீல மலர்தாந்தாம்
தடந்தோள் இரண்டும் வேய்தாந்தாம்
என்னும் தன்கை தண்ணுமையே" (யாப். வி. 77 மேற்.)

இஃது அறுசீர்க்கழி நெடிலடியான் வந்த [ஆசிரிய] விருத்தம்.

'கணிகொண்டலர்ந்த' (சூளா. 1327) எனவும், 'மூவடிவினா விரண்டு'(சூளா. 1904) எனவும், 'இடங்கை வெஞ்சிலை' (யாப். வி. 25 மேற்.) எனவும், 'கொங்குதங்கு' (யாப். வி. 25 மேற்.) எனவும் பதின்சீரளவும் கண்டுகொள்க.

பதின்சீரின் மிக்க சீரான் வருவனவும், சந்தப்பா முதலானவும் வரும்வழிக்கண்டு கொள்க.

[381]கன்றுகு ணில்வானும் தாழிசை ஆகும் கரைபொருகான்
என்றது வண்டுளர் பூந்தார் இரங்கு குயில்முழவாக்

---

உரை: பா.வே: 377. பன்னிருசீரளவும் - (த) 378. விறல்வாள், 379. காளிங்கன்
380. மடஞ்சேர் நோக்கம் மாதாந்தாம்-யாப்.வி.77 மேற்.,

381. இவ்வுதாரண முதனினைப்புக்காரிகை யாப்பருங்கலக்காரிகை அமைப்பினிறும் சிறிது வேறுபட்டுள்ளது.

கன்று குணில்வா னுறத்தா ழிசையாங் கரைபொருகான்
என்றலும் வண்டுளர் பூந்தா ரிரங்கு குயின்முழவாக்
கொன்றார்ந் தமைந்த வகவற் றுறைகுறை யரவிருத்தம்
பின்றாழ் குழலி விடங்கணி மூவடி வாதியவே"

கொன்றார்ந் தமர்ந்த அகவற் றுறையாகும் நல்விருத்தம்
பின்தாழ் குழலி விடம்சூழ் கணிகொண்ட மூவடிவே (யாப்.கா.37)

இவ்வுரைச் சூத்திரத்தின் வழியே ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தங்கட்கு முறையே முதனிலைத்துக் கொள்க. (36)

## கலிப்பாவினம்
## கலித்தாழிசை, கலித்துறை

௩௰எ. அடியள வில்லா தளவொத்தும் தன்சீர்
  டையடி மிக்கெய்தல் கலியின்-இடைநிலையாம்
  ஐஞ்சீரடிநான் [382]கடைதல் கலித்துறையாம்
  எஞ்சா விகற்பம் இசைந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் கலித்தாழிசைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

'அடியளவு இல்லாது அளவொத்தும் தன்சீர் கடையடி மிக்கெய்தல் கலியின் இடைநிலையாம்' என்றது இரண்டடியானும் பலவடியானும் வந்து, ஈற்றடி மிக்கு அல்லாத அடிகள் தம்முள் அளவொத்து வரும் எனின் அது கலித்தாழிசை எனப்படும்.

'அடியளவொத்தும்' என்ற உம்மையால் ஈற்றடிமிக்கு ஏனை அடிகள் ஒத்தும் ஒவ்வாதும் வரப்பெறும் எனக்கொள்க. ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருதல் 'சிறப்புடைத்து; தனியே வரப்பெறுமாயினுமாம்.

வரலாறு:

"கொய்தினை காத்தும் குளவி அடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்;

ஆய்தினை காத்தும் அருவி அடுக்கத்தெம்
[383]மாசில் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்;

மென்தினை காத்தும் மிகுபூங் [384]கட்சாரல்
[385]குன்றிற் குறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்"
(யாப். வி. 87 மேற்.)

இஃது இரண்டடியாய் ஈற்றடிமிக்கு ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த கலித்தாழிசை.

---

௩௰எ. பா.வே: 382. கடைசேரல்-(உ)

உரை: பா.வே: 383. ஆசில், 384. கமழ்சாரல், 385. குன்றச்-யாப்.வி. 78 மேற்.

வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தில் எழால்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போழ்தில் எழாதாய்க் குறாலியரோ
நீள்வரி நாகத்து எயிறே வாழி வெண்டிங்காள்"
(யாப்.வி.87 மேற்.)

இஃது ஈற்றடி மிக்கு ஏனைய மூன்றும் தம்முள் அளவொத்து இடை மடக்காய்த் தனியே வந்த கலித்தாழிசை.

"பூண்ட பறையறையப் பூதம் மருள
நீண்ட சடையான் ஆடுமே
நீண்ட சடையான் ஆடும் என்ப
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே"

(யாப். வி. 87 மேற்.)

இஃது ஈற்றடி மிக்கு இரண்டாமடி குறைந்து முதலடியும் மூன்றாமடியும் ஒத்துவந்த கலித்தாழிசை; என்னை?

"அடியெனைத் தாகியும் ஒத்துவந் தளவினில்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே" (யாப். 87)

என்றாராகலின்.

ஐஞ்சீரடி நான்காய் வருவது கலித்துறை எனப்படும் என்றவாறு.

'வென்றான் வினையின்' (சூளா. 1) எனவும், 'யானும் தோழியும்' (யாப்.வி.88 மேற்.) எனவும் கண்டுகொள்க. (37)

௩௭ அ. பதினறுபன்[386]னேழெழுத்தாய்ப் பண்புறுசீர் ஐந்தாய்க்
கதிபெறுமோர்[387] மோனை கடையாய்-விதிவகையின்
நேர்நிரையும்[388] மற்றும் நெடிலடியும் காப்பியத்தின்
பேர் நிலையும் எய்தும் பிற

என்பது, இவ் விலக்கணம் என்னுதலிற்றோ வெனின் கலித்துறைக்கு இலக்கணம் உணர்த்திற்று.

இவ்விலக்கணத்தின் வழியே நான்கடியாய், அடியொன்றுக்குப் பதினாறு எழுத்தாய், ஐந்துசீராய்க் கடைமோனையோடு எய்துவது நேரசைக் கலித்துறை என்றும், நிரைமுதலாய்ப் பதினேழு எழுத்தாய் நான்கடியாய் முற்றுவது நிரையசைக் கலித்துறை என்றும், எழுத்து வரையறை இல்லாததாய் ஐந்து சீரின் அடி

௩௭ அ. பா.வே: 386. மேலெழுத்தாய், 387. கதிர்பெறுமோர், 388. நேர்நிரையின்-(உ)

நான்கின் முற்றுவது நெடிலடி என்றும், காப்பியக்கலித்துறை என்னும் பெயர்பெற்று நடக்கப்பெறும் என்றவாறு.['பிற' என்ற மிகையானே சிறிது ஓசைகுன்றி நடப்பது திலதக்கலித்துறை என்னும் பெயர்பெற்று நடக்கப்பெறும் என்றவாறு].

சிற்றம்பலக்கோவை, வாணன் கோவை முதலாயின நேரசை, நிரையசைக்கலித்துறை.

'வென்றான் வினையின்' (சூளா. 1), 'யானும் தோழியும்' (யாப். வி. 88 மேற்.) முதலாயின காப்பியக்கலித்துறை; நெடிலடி என்றும் பேராம்.

"குவளைநல் நாள்மலர்க் கண்ணாளைக் கோகன
கத்தில்வளர்
அவளைஅல் லார்குழல் முக்கண்மின் னாளை அமர்மகளை
எவளைப் பரவினும் எல்லாப் பதவியும் எய்தும் என்பர்
தவளமெய் யாளைக் கலைமாதை ஏத்திச் சரண்புகவே"

எனவும் கொள்க. (38)

## கலிவிருத்தம்

நூ ௰ ௧. பொலிவிருக்கும் நாற்சீரால் போந்தவடி நான்கேல்
கலிவிருத்தம்; எண்சீர் கதித்து-மெலிவில்
அடிநான்கில் கட்டளையாம் ஆசிரியச் சீரின்
முடிவாதி[389] முன்னும் முயன்று

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் கலிவிருத்தம் ஆமாறு உணர்த்திற்று.

'பொலிவிருக்கும்' என்று சிறப்பித்தமையால் எல்லா விருத்தத்திலும் மிக்கு வழங்குமாதலின் பொலிவென்றாரென்க.

வரலாறு:

"வேய்தலை நீடிய வெள்ளிவி லங்கலின்
ஆய்தவின் ஒண்சுடர் ஆழியி[390]னான்றமால்
வாய்தவின் நின்றனர் வந்தென[391]மன்னர்முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்" (சூளா. 659)

எனவும், 'தேம்பழுத் தினியநீர்' (சூளா. 49) எனவும் கொள்க.

---

நூ ௰ ௧ பா.வே: 389. முன்னாய்-(உ)
உரை: பா.வே: 390. னான்றமர், 391. மன்னன்முன்-சூளா. 659

'அடிநான்கில் கட்டளையாம்' என்பது அடி ஒன்றுக்கு எண்சீராய் ஆசிரியச்சீரின் முடிவது கட்டளைக்கலிப்பா எனப்படும்.

"அண்ட ராதிபன் ஆயிர லோசனன்
அமர ராதி அருந்தவத் தோர்பலர்
வண்ட ளாவிய மந்தர மாமலர்
மாலை காலை மலரடி தூவியே
கொண்ட தீவினை போக்கி மனோரதம்
[392]கூட வேயருள் பூத்தருள் கோமளப்
புண்ட ரீகப்பொன் மாளிகை மேவிய
பூவை பாதம் பொழுதும் தொழுதுமே"

[393]கொய்தினை ஆய்தினை மென்றினை வாளரி பூண்டகலிக்
கெய்திய தாழிசை யானும்வென் றானும் துறைவிருத்தம்
வெய்தலை நீடிய தேம்பழுத் தாம்விளை கட்டளைப்பாச்
செய்தவ நீளண்ட ராதிப னாம்செல்வச் சேயிழையே

இவ்வுரைச் சூத்திரத்தின் வழியே கலிப்பாவினம் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (39)

## வஞ்சிப்பாவினம்

### வஞ்சித்தாழிசை துறை விருத்தம்

சய. இருசீ[394]ரடிநான்காய் இத்திறத்தில் மூன்றேல்
ஒருதா ழிசை; துறையேல் ஒன்றாம் - செருமோதி

---

உரை: பா.வே: 392. கூட்ட-(பே)

393. இதனுள் 'குவளை நல்நாள்மலர்' சுட்டப்பெறவில்லை. இவ்வுதாரண முதனினைப்புக்காரிகை யாப்பருங்கலக்காரிகை 45ஐ அடியொற்றி இங்குக் கூறப்பட்ட எடுத்துக்காட்டுகளுக்கு ஏற்ப மாறி அமைந்துள்ளமை காண்க.

"கொய்தினை ஆய்தினை மென்தினை வாள்வரி பூண்டபறை
எய்திய தாழிசை யானும்வென் றாலும் கலித்துறையே
மைதிக ழோதி வரிநெடுங் கண்ண வாமுலையாய்
மெய்தரு வேய்தலை தேம்பழுத் தென்ப விருத்தங்களே" (யாப். கா. 45)

சூ. பா.வே: 394. நான்காய்-(உ)

வந்தவடி வேற்கண்ணாய்! வஞ்ச விருத்தப்பா
சிந்தடி நான்கெய்தும் சிறந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வஞ்சித்தாழிசையும், வஞ்சித்துறையும், வஞ்சிவிருத்தமும் ஆமாறு உணர்த்திற்று.

'இருசீரடி நான்காய் இத்திறத்தில் மூன்றேல்' என்றது அடியொன்றுக்கு இரண்டுசீராய் இத்திறம் நான்கடியாய் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வரப்பெறும் எனக்கொள்க.

வரலாறு:

*"மடப்பிடியை மதவேழம்
தடக்கையால் வெயில்மறைக்கும்
இடைச்சுரம் [395]இறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்;

பேடையை இரும்போத்துத்
தோகையால் வெயில்மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்;

இரும்பிடியை இகல்வேழம்
பெருங்கையால் வெயில்மறைக்கும்
அரும்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண் (யாப். வி. 91 மேற்.)

இவை ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவந்த வஞ்சித்தாழிசை. இருசீரடி நான்காய்த் தனியே வரப்பெறுமாயின் வஞ்சித்துறையாம்.

"மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
[396]மெய்சிறந்தநல் விளங்கிழாய்" (யாப். வி. 28 மேற்.)

---

உரை.பா.வே.: 395. நடந்தார்க்கே-யாப். வி. 91 மேற்.

*இவ்வெடுத்துக்காட்டுப்பாடல் யாப்பருங்கல விருத்தியினின்றும் மாறுபட்டுள்ளது. இதனுள் இரண்டாம் தாழிசை முதலாவதாகவும் மூன்றாம் தாழிசை இரண்டாவதாகவும் முதல் தாழிசை மூன்றாவதாகவும் மாற்றம் பெற்றுள்ளன. யாப்பருங்கலக்காரிகை அமைப்பை இது பின்பற்றியுள்ளது.

396. மெய்சிறந்திலர்-யாப். வி. 28 மேற்.,

எனவும் [397]'இரைத்த சாலிகை' (சூளா. 744) எனவும் கொள்க.

'சிந்தடி நான்கு' என்றது வஞ்சிவிருத்தம் எனப்படும் என்றவாறு.

வரலாறு:

"சோலை ஆர்ந்த சுரத்திடை
காலை[398] ஆர்ந்த கழலார்ப்ப
மாலை மார்பன் வருமாயின்
நீல[399] வொண்கண் இவள்வாடும்" (யாப்.வி. 28 மேற்.)

'இருது வேற்றுமை' (சூளா.742) எனவும் கொள்க; என்னை?

"சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய
தெஞ்சா விருத்தம் என்மனார் புலவர்" (யாப். 92)

என்றாராகலின்.

[400]மடப்பிடி பேடை யிரும்பிடி வஞ்சியின் தாழிசையாம்
தொடுத்த திரைத்தொடு மைசிற வஞ்சித் துறையதுவாம்
விடுத்திடு சோலை இருதுவும் வஞ்சி விருத்தமதாம்
வடுப்படு மைக்கண் கருங்குழல் நாண்மதி வாணுதலே (யாப். கா. 47)

இவ்வுரைச் சூத்திரத்தின் வழியே வஞ்சியினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க. (40)

நான்கு இனமும் ற்றும்

## பிரபந்தவியல்

### உலா, மடல், தூது

சயிக. தனிச்சொல் அளவாகித் தன்தளையோ டோசை
தொனித்துப் பலவடியாய்த் தோன்றிச்[401] செனிக்கும்
உலாமடல் தூதுமற் றுள்ளதும் வெள்ளைக்
கலாபவகை[402] எய்தல் கலி

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் உலாவுக்கும், தூதுக்கும்,

397. திரைத்தமாலையாய்-(த) (பே). (தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது)

398. ஆர்கழல் ஆர்ப்பவும்;399. வுண்கண் இவள் வாழுமே-யாப்.வி. 28 மேற்.

400. இவ்வுதாரண முதனினைப்புக்காரிகை யாப்பருங்காரிகை 47ஐ அடியொற்றியுள்ளது, இங்குக் காட்டப்பெற்ற எடுத்துக்காட்டுகளுக்கேற்ப மாற்றம் பெற்று அமைந்துள்ளது. காண்க: யாப். கா. 47

சயிக. பா.வே: 401. சனிக்கும்,-(த) 402. ஒதல் இ..கல்-(த), ஒதல் கலி (பே)

மடலுக்கும் மற்றுள்ளன மஞ்சரி, மன்மதசாரம் முதலான பிரபந்தங்கட்கு எல்லாம் நாற்சீரும் முச்சீரும் தனிச்சொல்லும் ஓர் எதுகையாய் இப்படிப் பல கண்ணி உடைத்தாய், வெண்பாவுக் கொத்தபடி சீர், தளை சிதையாமல் நினைத்தபொருள் அளவேஎல்லையாகப் பாடுவது கலிவெண்பா என்று பெயரிட்டு வழங்கப்படும் என்றவாறு.

இதற்கு உதாரணம் மூவர் உலா முதலாக உலகத்தில் நடக்கின்ற உலா, மடல், தூதே இலக்கியமாகக் கண்டுகொள்க. (41)

## பரணி

சயஉ. மூவசைச் சீரின் முறைபிறழா தெய்தியும்
மேவியதோர் நாற்சீரின் மேற்பட்டும்—பாவினத்தின்
ஈரடித் தாழிசையாய் எய்துமின் சந்தமுடன்
ஓரடிபோல் ஈரடியும் ஒத்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் பரணி என்னும் பிரபந்தம் பாடுதற்குப் பாவிலக்கணம் கூறிற்று.

ஈரசைச் சீரானும் மூவசைச்சீரானும் நாற்சீரடி முதலாக எண்சீரடி ஈறாக உயிர்த்தொடைச்சொல் அடுத்தும், இன்சந்தமுடன் கூடியும் இரண்டடித்தாழிசை என்று பெயரிட்டு வழங்கப்படும் என்றவாறு.

இதற்கு இலக்கியம் கலிங்கத்துப்பரணி முதலானதைக் கண்டுகொள்க. (42)

## பிள்ளைத்தமிழ்

சயங. நான்மூன்று நான்மூன்றாய் நான்முதலும் ஒரெழுத்தாய்த்
தான்மூண்டு[403] நான்கடியாய்த்[404] தானடக்கும்-பான்மூன்றாய்
ஆசிரியத்[405] தாழிசையோ டான கழிநெடிலும்
பேசியவெண் சீரகவல் பெற்று

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஆசிரியவிருத்தமும், தாழிசையும், கழிநெடிலும் ஆமாறு உணர்த்திற்று.

---

சயங. பா.வே: 403. தான்மூன்று, 404. தானடுக்கும், 405. ஆசிரியம்-(த)

பிள்ளைத்தமிழ், [406]யானைவிருத்தம் முதலான பிரபந்தம் பாடுமிடத்து 'நான்மூன்றாய்' என்றது நாற்சீரும் முச்சீரும் நாற்சீரும் (முச்சீரும்) ஆக அடியொன்றுக்குப் பதினான்கு சீராய் நாலுமுதல் இருமடி முதலெழுத்து வைத்து, வெண்சீரும் அகவற்சீரும் விரவி நான்கடியாய் வருவது ஆசிரியத்தாழிசை எனப்படும்.

இப்படி அகவற்சீரால் பதினான்குசீரடி நான்காய்ப் பாடுவது கழிநெடில் எனப்படும் என்றவாறு.

இதற்கு உதாரணம் அழகர்பிள்ளைத்தமிழ் முதலான இலக்கியங்களில் கண்டு கொள்க. (43)

## வண்ணம்

சயசு. எட்டுக் கலையாய் [407]இடையிட் டெதுகையாய்க்
கட்டுக் கலைக்குமுக் கண்ணியாய்த்-திட்டத்தில்
தொங்கலும் எட்டாய்த் தொடைமூன்று நான்காறாய்ப்
பங்குபெறும் வண்ணப் பரப்பு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வண்ணம் என்னும் பிரபந்தத்துக்கு இலக்கணம் உணர்த்திற்று.

ஒரு வண்ணத்துக்குக் கலை எட்டாய், ஒரு கலை மூன்று கண்ணியாய், (முதற்கலை) முதற் கண்ணியிலும் மூன்றாம் கண்ணியிலும், இரண்டாங்கலை முதற் கண்ணியிலும் மூன்றாங்கண்ணியிலும் (இவ்வாறாகப் பிற கலைகளிலும்) மோனை உடைத்தாய், மூன்றாங்கலையிலும் ஐந்தாம் கலையிலும் ஏழாம் கலையிலும் எதுகை உடைத்தாய்க் கலைக்குக்கலை [தனியே] தொங்கல் உடைத்தாய் இப்படிப் பாடுவது வண்ணம் என்னும் பிரபந்தம் என்றவாறு. (44)

## சந்தப்பா

சயரு. வல்லினத்தின் மெல்லினத்தின் வாய்ந்த இடையினத்தின்
சொல்லினத்துக்[408]கேய்ந்ததொரு சொற்றொடுத்து-நல்லினத்தின்
எந்தப்பா[409]வேனும் எழுத்தளவின் எய்துவது
சந்தப்பா என்னத், தகும்

உரை.பா.வே. 406. ஆனைவிருத்தம் (பே)

உயச- பா.வே: 407. இடைவிட்-(உ)

சயரு. பா.வே. 408. கேற்றதொரு; 409. வென்னும் எழுத்தளவில் எய்துவதும்-(உ)

என்பது. இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் முன்சொன்னதற்கு இன்னுமோர் சிறப்புணர்த்திற்று.

வல்லினத்துக்கு வல்லினமும் மெல்லினத்துக்கு மெல்லினமும் இடையினத்துக்கு இடையினமும் ஆக எழுத்தளவின் எய்துவது சந்தப்பா என்று பேராம் என்றவாறு. வண்ணம் எனினும் ஒக்கும் என்றவாறு.

இதற்கு உதாரணம் உலகத்தில் நடக்கும் முறைமையே இலக்கியமாகக் கண்டுகொள்க. (45)

## சிந்து

ச யி சு. [410]கருத்துரைத்துப் பேர்காட்டிக் காரியத்தை மூன்றாய்
விரித்துரைத்து[411] நான்கடியாய் மேவும்-சுருக்கத்தில்
ஈரடியா யுந்தனிச்சொல் எய்தியுமேற் றக்குறைச்சல்
சீருமுள தாய்முடியும் சிந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் சிந்துக்கு இலக்கணம் உணர்த்திற்று.

தன் உள்ளக்கருத்தை முன் ஒரு பல்லவம் என்று பேரிட்டுப்பின்; 'பேர்காட்டி' என்றது பாட்டுடைத்தலைவன் பேரை அனுபல்லவமாகச் சொல்லிப் பின்பு தன் காரியத்தை எல்லாம் மூன்று பாகமாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தை நான்கடி நான்கடியாக மூன்று பங்காய்ப் பாடுவது சிந்தாம்.

'சுருக்கத்தில்' என்ற விகற்பத்தால் இரண்டிரண்டடியாகவும் தனிச்சொல் உண்டாகியும், சிறிது அடிகள் ஏற்றத் தாழ்ச்சியாகவும் வரப்பெறும் எனக்கொள்க. அளவில்லை ஆதலின்இப்பொழுதுள்ளாரைப்பாடுவதே இலக்கியமாகக் கண்டு கொள்க. (46)

பிரபந்தவியல் முற்றும்

---

ச யி சு. பா.வே: 410. கருத்துரை-(உ), 411 நான்கடியின்,-(த)

# ஒழிபியல்

## தரவு தாழிசைக்கு அடிவரையறை

சுயஎ. தரவுக்கு மூன்றடியே தாழ்வுயர்ச்சி ஐந்தே
பரவிய தாழிசைக்குப் பாவாய் - உரிய
பெருமையொரு[412] நான்கிழிபு பெற்றதிரண் டேயாம்
தரவடிக்குத் தாழிசையே தாழ்வு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் தரவுக்கும் தாழிசைக்கும் இலக்கணம் உணர்த்திற்று.

தரவுக்கு மூன்றடியே சிறுமை, பெருமை ஐந்தே. தாழிசைக்குச் சிறுமை இரண்டடியே; பெருமை நான்கடியே. தரவுக்குத் தாழிசையடி தாழ்ந்து வரும் எனக்கொள்க.

இதற்கு இலக்கணம் முன்காட்டிய வண்ணகவொத்தா ழிசையில் (இலக். சூ. 25 மேற்.), அம்போதரங்க் வொத்தாழிசையில் (இலக். சூ. 24 மேற்.) கண்டு கொள்க. 47

சுயஅ. தரவும் அளவடியே தாழிசையும் அஃதே
மருவும் அராகமுமவ் வாறே - பெருகியதோர்
நாற்சீர்முச் சீரிருசீர் நாடுமொரு சீர்முறையே
பேச்சுறுமம்[413] போதரங்கப்[414] பேறு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் தரவுக்கும் தாழிசைக்கும் அராகத்திற்கும் அம்போதரங்கத்திற்கும் அடியளவும் சீரளவும் உணர்த்திற்று.

அடியொன்றுக்கு நாற்சீரே அளவாகத் தரவு நடக்கும்; தாழிசையும் நாற்சீரடியே அளவாக நடக்கும்; அராகஅடியும் நாற்சீரடியே அளவாக நடக்கும்; அம்போதரங்கமும் நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியும், ஒருசீரடியுமாக நடக்கும்.

இதற்கு இலக்கியம் முற்காட்டிய மயங்கிசை முதலானதிற் கண்டு கொள்க. (48)

---

சுயஎ. பா.வே: 412. பெருமைபொருள்-(உ)

சுயஅ பா.வே: 413. பேச்சுற்று, 414. பேறும்-(உ)

## அம்போதரங்கம் நடக்கும் முறைமை

௪௯. ஈரிரண்டு பாதத்தால்[415] ஓரிரண்டும் நான்கடியால்
ஈரிரண்டு முச்சீரான் எட்டுமே-[416] ஓரிரண்டு
சீராற் பதினாறும் சேருமம் போதரங்கம்
பேராற்[417] றலைவரல்போல் பெற்று

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அம்போதரங்கம் நடக்கும் முறைமை உணர்த்திற்று.

நான்கடியால் வினைமுற்று இரண்டாய் வருதல் இரண்டம்போதரங்கம்; நான்கடியால் நான்கும் வினைமுற்றாய் வருவது நான்கம்போதரங்கம்; எட்டு வினைமுற்றாய் முச்சீரடியாய் வருவது எட்டம்போதரங்கம்; இரண்டு சீராயும், ஒரு சீராயும் தனித்தனியே வருவது பதினாறம் போதரங்கமும் எட்டாம்போதரங்கமுமாம் என்றவாறு.

*இதற்கு இலக்கியம் முற்காட்டிய அம்போதரங்கத்தில் (இலக். சூ. 24 மேற்.) கண்டு கொள்க.* *(49)*

## கலிப்பாவுக்குரிய சீர்வரையறை

௫0. நிரைமுதலாய் நேரீறாய் நிற்குமசை மூன்றாய்
வருதல் கலிச்சீராம் மற்றும்-[418] விரவி
நிரையீற்றின்[419] ஈரசையும் நேரீற்றின் நின்ற
ஒருமூ வுசையும் உறும்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் கலிப்பாவுக்கு வரும் சீர்வரையறை உணர்த்திற்று.

இதற்கு இலக்கியம் முற்காட்டினம் (இலக். சூ. 4, 22 மேற்.) என்றவாறு.

---

௪௯.பா.வே: 415. ஏரிரண்டு, 416. ஓரிரண்டும், 417. பேரா றலைவரல்போல் பெற்று-(உ)

௫0. பா.வே: 418. விரவிய, 419. நிரையீற்று நிரையசையும் நேரீற்று நின்று - (உ)

## அலகு காரியம் பெறாதவை

ருய க. குற்றுகரம் குற்றிகரம்[420] குற்றியல் தானளபோ
டொற்றளபும் விட்டிசையும் ஒவவாதேல் - பெற்ற
முறையகற்றிச் செய்யுள்[421] முடிக்க; குறைவேல்
நிறைவியற்றிச்[422] சேர்த்தல் நெறி

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் (அலகு காரியம் பெறாதன உணர்த்துதல் நுதலிற்று).

சீரும் தளையும் செய்யுட் கெட வந்தவிடத்துக் குற்றியலுகரமும், குற்றியலிகரமும், ஐகாரக்குறுக்கமும், உயிரளபெடையும், ஒற்றளபெடையும், விட்டிசையும் அலகு காரியம் பெறா என்றவாறு.

'பெற்ற முறையகற்றிச் செய்யுள் முடிக்க' என்ற விதப்பினால் குற்றுகரமும், குற்றிகரமும், ஐகாரக்குறுக்கமும் குற்றெழுத்தின் பயத்தவாய் நின்று அலகுபெறும் என்றவாறு.

(குற்றியலுகரம் வருமாறு):

"கொன்றுகோடுநீடு[423] குருதிமாறவும்
சென்றுகோடுநீடு செழுமலைபொருவன
வென்றுகோடுநீடு விறல்வேழம்
என்றுமூடுநீடு பிடியுளபோலும்
அதனால்
இண்டிடை இரவிவண்[424] நெறிவரின்
வண்டுண் கோதை உயிர்வா ழலளே" (யாப். வி. ௪ மேற்.)

இவ்விரு சீரடி வஞ்சிப்பா இடையிடைக் குற்றுகரம் பெற்று ஆறசைச்சீரும் ஐயசைச்சீரும் ஆயின. அவ்வாறு வருக என்னும் இலக்கணம் இன்மையால் ஆண்டுக் குற்றியலுகரத்தைப் 'பெற்றமுறையகற்றி' (இலக். சூ. 51) என்னும் இலக்கணத்தால் அலகு பெறாது என்று களையச் சீரும் தளையும் சிதையாதாம்.

---

ரு க . பா.வே: 420. குற்றிஐ; 421 டிக்குறை வேல் நின்ற, 422. நிறைவித்துச்-(உ)

51. உரை.பா.வே: 423. குருதிபாயவும், 424. நசைஇவரின் -யாப்.வி. 4 மேற்.

குற்றியலிகரம் வருமாறு:

"சிறுநன்றி இன்றிவர்க்கியாம் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி மன்னும் பெரிதென்-றுறுநன்றி
தானவாய்ச்[425] செய்வது தானமற் றென்பவே
[426]வானவா வுள்ளத் தவர்" (யாப். வி. 4 மேற்.)

இதனுள் 'இன்றிவர்க்கியாம்' என்புழிக் குற்றியலிகரம் வந்து வெண்பாவினுள் வஞ்சி யுரிச்சீராயிற்று. வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வருக என்னும் இலக்கணம் இன்மையால் ஈண்டு இக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகு பெறாது என்று களையச் சீரும் தளையும் சிதையாதாம்.

"குழலினி தியாழினி தென்பர்தம் மக்கள்
மழலைச் சொற்கேளா தவர்" (குறள். 66)

எனவும்,

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்" (குறள். 254)

எனவும், 'குழலினி தியாழினிது' என்புழி ஆசிரியத்தளையும். 'அருளல்லதி யாதெனில் ' என்புழிக் கலித்தளையும் வந்தன. அவ்வாறு வரின் 'வெள்ளைத் தன்மை குன்றிப்போம் சீர் கனி புகிற் புல்லாதயற்றளை' (யாப். கா. 53) என்னும் இலக்கணத்தொடு மாறுகொள்ளும்; ஆதலால் ஆண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெறாதென்று களையச் சீரும் தளையும் சிதையாதாம்.

இனி[427] ஐகாரக்குறுக்கம் வருமாறு:

ஒன்றரை மாத்திரை என்று ஓதப்பட்ட ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தே போலக்கொண்டு அலகிட்டு வழங்கப்படும் என்றவாறு.

"குறுமை எழுத்தின் இயல்பே ஐகாரம்
நெடுமையின் நீங்கியக் கால்" (யாப். வி.9 மேற்.)

---

51. உரை.பா.வே: 425. செய்வதூஉம்; 426. வானவாம்-யாப்.வி. 4 மேற்.
427. ஐகாரக்குறுக்கவெழுத்து-(பே)

வரலாறு:

"அன்னையையான் நோவது[428] எவன்நாண் அணியிழை
புன்னையையான் நோவன் புலந்து" (யாப்.வி.9 மேற்.)

எனவும்,

நடைக்குதிரை ஏறி நறுந்தார் வழுதி
[429]அடைப்பையாய் கோல்தா என லும்-அடப்பையான்
சுள்ளற் சிறுகோல் கொடுத்தான் [430]தலைப்பெறினும்
[431]எள்ளாதி யாம்கண் டலை" (யாப். வி. 9 மேற்.)

எனவும்,

"கெண்டையை வென்ற கிளரொளி [432]உண்கணாள்
பண்டைய எல்லள் படி" (யாப். வி. 9 மேற்.)

எனவும் இவற்றுள் ஐகாரம் குறுகிக் குற்றெழுத்தே போலக் குறிலொடும் நெடிலொடும் கூடி நின்று நிரையசை ஆயினவாறும், தனியே நின்று நேரசை ஆயினவாறும் கண்டு கொள்க.

இனி உயிரளபெடைக்குச் சொல்லுமாறு:

பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை[433] பைங்கிள்ளை
சொல்லுக்குத் தோற்றின்னம்[434] தூற்றிலவாம்-நெல்லுக்கு
நூறோஒநூ றென்பாள் நுடங்கிடைக்கும்[435] மென்முலைக்கும்
மாறோமால் அன்றளந்த மண்" (யாப்.வி. 4 மேற்.)

இதனுள் 'நூறோ ஒ நூறு' என்புழிப் பண்டமாற்றில் அளபெடை அநுகரணம் வந்து வெண்பாவில் நாலசைச்சீர் ஆயிற்று. அவ்வாறு வருக என்னும் இலக்கணம் இன்மையால் ஈண்டு உயிரளபெடையை நெட்டெழுத்தே போலக்கொண்டு அலகிடச் சீர் சிதையாதாம்.

"இடைநுடங்க ஈர்ங்கோதை பின்தாழ வாட்கண்
புடைபெயரப் போழ்வாய் திறந்து-கடைகடையின்
உப்போஒ எனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
கொப்போநீர் வேலி உலகு" (யாப். வி. 4 மேற்.)

---

உரை.பா.வே: 428. அவமால் அணியிழாய்-யாப்.வி. 9 மேற்.
429. அடைப்பையா, 430. தனைப்பெறினும், 431. கொள்ளாதி, 432. உண்கண்ணாள், 433. பைங்கிளிகள், 434. தோன்றிலவால், 435. வெம்முலைக்கும் - யாப்.வி. 4 மேற்.

இதனுள் 'உப்போஓ' என்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடை அநுகரணம் வந்து கலித்தளை ஆயிற்று. அவ்வாறு வருகவென்னும் (இலக்கணம் இன்மையால்) ஆண்டு உயிரளபெடையை நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிடத் தளை சிதையாதாம்.

இனிக் குற்றியலுகரம் குற்றியலிகாரங்கள் குற்றெழுத்தே போல் நின்று அலகு பெற்றவாறு:

"வந்துநீ சேரின் உயிர்வாழும் வாராக்கால்
[436]முந்தியாய்ப் பெய்த வளைகழலும்-முந்தியாம்
கோளானே கண்டனம் கோல்குறியாய் இன்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு" (யாப். வி. 4 மேற்.)

இதனுள் 'வந்துநீ' என்புழிக் குற்றியலுகரமும், 'முந்தியாம்' என்புழிக் குற்றியலிகரமும் வந்து சீரும் தளையும் திருந்த நிற்றலின் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகு பெற்றவாறு கண்டு கொள்க. என்னை?

"இஉ [437]இரண்டின் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றாம் நிலைமைய ஆகும்"
(யாப். வி. 4 மேற். காக்கை)

"ஒற்றளபெழாவழி பெற்றல கிலவே" (யாப்.வி. 3 மேற்.)

"ஈரொற் றாயினும் மூவொற் றாயினும்
ஓரொற் [438]றியல்பென ஓதினர் புலவர்" (யாப்.வி. 3 மேற்.)

எனவும் கொள்க.

"கண்ண் தண்ண்ணெனக் கண்டும் கேட்டும்"(மலைபடு. 352)
எனவும்,

'கண்ண் கருவிளை" (யாப்.வி. 3 மேற்.)

எனவும்,

"எஃகி லங்கிய கையராய் இன்னுயிர்
வெஃகு வார்க்கில்லை வீடு" (யாப். வி. 3 மேற்.)

எனவும் ஒற்றும் ஆய்தமும் அளபெழுந்து ஓர் அலகு பெற்றவாறு கண்டுகொள்க. என்னை?

---

உரை.பா.வே: 436. முந்தியாய், 437. இரண்டன், 438. றியல - யாப்.வி. 3 மேற்.

"ஙஞ ண நமன வயலள ஆய்தம்
[439]எனுமிவை ஈரிடத் தளபெழும் ஒரோவழி"
(யாப்.வி.3 மேற்.)

எனவும் கொள்க.

'குறைவேல் நிறைவியற்றிச் சேர்த்தல்நெறி' என்ற விகற்பத்தினால் இதனுட் சொன்ன இலக்கணமெல்லாம் செய்யுளிடத்துக் குறைவுண்டாகாதபடி நிறைவுண்டாக்கி ஏற்புழி முடிப்பது புலவரது தன்மையாம் எனக்கொள்க.

இனி விட்டிசை வருமாறு:

விட்டிசைத் தல்லால் தனிக்குறில் நேரசைஆம் எனப்படாது. எனவே விட்டிசையாத குற்றெழுத்து முதற்கண் நேரசை ஆகாது என்க.

வரலாறு:

"உண்ணான் [440]ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னரும் கேளிர் துயர்களையான்-கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அ ஆ
இழந்தானென் றெண்ணப் படும்" (நாலடி. 9)

இதனுள் அ ஆ என்புழி விட்டிசைத்த குற்றெழுத்து மொழிமுதற்கண் நேரசை ஆயினவாறும், அல்லாதவழி பிறவற்றினோடு கூடி நிரையசை ஆயினவாறும் கண்டுகொள்க.

"வெறிகமழ் [441]தண்சிலம்பின் வேங்கை உகளும்
மறிமுலை உண்ணாமை [442]வேண்டில்-[443]பிறமுன்கை
அஉ அறியா அறிவில் இடைமகனே
[444]நொஅலை நின்னாட்டை நீ" (யாப். வி. 7 மேற்.)

எனவும்,

"அ அவனும் இ இவனும் உ உவனும் கூடியக்கால்
எ எவனை வெல்லார் இகல்" (யாப். வி. 7 மேற்.)

எனவும்வரும். இவற்றுள் 'அஆ' என்பது அருளின்கட்குறிப்பு; 'அ உ அறியா' என்பது தற்சுட்டு; அகரஉகரம்தனையே சுட்டினமையின்.

உரை.பா.வே: 439. ஈரிடத்தளபெழும் ஒரோவழி யான - யாப்.வி. 3 மேற்.
440. ஒளிநின்றான்-(த) 441. தன்புறவின் வீங்கி, 442. வேண்டிப், 443. பறிமுன்கை, 444. நொ அலையல், யாப்.வி. 7 மேற்,

'நொ அலை' என்பது ஏவல்; 'அ அவனும் இ இவனும் உ உவனும்' என்பது சுட்டு; ' எ எவன்' என்பது வினா.

அ இ உ எ ஒ இவை குறிய; மற்றை ஏழும் நெட்டெழுத்து எனப்படும். இதனுள் மொழிக்கு மூன்றிடத்தும் வந்த குற்றெழுத்து விட்டிசைத்த குற்றெழுத்து நேரசை ஆயினவாறும் கண்டுகொள்க.

"யரல வழள [445] இடையின மோனை
மரபு பிழையாத வைப்பு" (யாப். வி. 72. மேற்.)

எனவும்,

"அமருந்து தானை [446] அரியார்தம் கோவே
துமருந்து தூயெனவே கொண்டு" (யாப்.வி.7 மேற்.)

எனவும் வரும். இவற்றுள் தற்சுட்டின் கண்ணும், ஏவற்சுட்டின் கண்ணும் குற்றெழுத்து விட்டிசையாது பின்வந்த குற்றெழுத் தோடு கூடி நிரையசை ஆயினவாறு கண்டுகொள்க.

நெட்டெழுத்து அளபெழுந்து வரும்எனின் நேர்நேர் ஆக வைக்கப்படும் என்றவாறு. குற்றெழுத்தோடு கூடிய நெட்டெழுத்து அளபெழுந்தால் நிரைநேர் ஆக வைக்கப்படும் என்றவாறு.

வரலாறு:

"ஏஎர் சிதைய அழாஅல் எலாஅறின்
[447] சேயரி சிந்திய கண்" (யாப். வி. 2 மேற்.)
(51)

எனவும் கொள்க.

## சீர்மயக்கம்

௫௨. வெண்சீரெப் பாக்களினும் [448] மேவும்; விரைந்தகவல்
ஒண்சீர்வெண் [449] பாவில் உறும்; கலியில் - பண்சேர்
அகவற்சீர் பிற்பாதி [450] ஆகுமது அன்றேல்
புகலத்தன் [451]. சீரே பொலிவு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் இந்த நான்கு

---

உரை.பா.வே: 445. இடையினமாம் ஏனை, 446. அதியர்தம் - யாப்.வி. 7 மேற்.
447. சேஎயரி - யாப்.வி. 2 மேற்.

௫௨ உ.பா-வே: 448. மேவ, 449. பாவிலும் கலியின், 450. ஆருமது, 451. புகலத்தகு-(உ)

பாவினுள்ளும் தத்தம் சீரொழிய வேற்றுச்சீர்களும் வந்து மயங்குதல் உணர்த்திற்று.

வெண்சீர் எந்தப் பாவினுள்ளும் புக்கு மயங்கும்; அகவற்சீர் வெண்பாவினுள் புக்கு நடக்கும்; கலிப்பாவில் அகவற்சீர் பிற்பாதி கருவிளம் கூவிளம் என்னும் இரண்டும் அடையும். இவ்வாறு வருதல் அன்றேல் அந்தந்தப் பாவுக்கு எடுத்த சீரே பொலிவு என்றவாறு.

எனவே வெண்பாவினுள் வெண்சீரும் அகவற்சீருமல்லது மற்றசீர் வரப்பெறாது. அகவற்பாவிற்கும் சிறப்பு அகவற்சீரே. மற்ற சீரெல்லாம் எல்லாப் பாவினுள்ளும் பாவினத்துள்ளும் புக்கு மயங்கப்பெறும் என்றவாறு.

வரலாறு:

'குடநிலைத் தண்புறவில்' (யாப். வி. 22 மேற்.) என்னும் தரவு கொச்சகக்கலிப்பாவினுள் நிரையீற்று ஆசிரிய உரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வந்து வெண்டளையும் ஆசிரியத்தளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும் மயங்கி வந்தவாறு காண்க.

> "நெடுவரைச் சாரற் குறுங்கோட்டுப் பலவின்
> வண்டுவார் தீஞ்சுளை வீங்குகவுட் கடுவன்
> உண்டு சிலம்பேறி ஓங்கிய இருங்கழை
> [452]படிகள் பயிற்றும் என்ப
> மடியாக் கொலைவில் என்னையர் மலையே"
> (யாப்.வி.22 மேற்.)

இவ்வாசிரியத்துள் தன்சீரும் வெண்சீரும் நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வந்து, வெண்டளையும் கலித்தளையும் வஞ்சித்தளையும் மயங்கி வந்தவாறு காண்க.

> [453]"மண்டிணிந்த நிலனும்
> நிலனேந்திய விசும்பும்
> விசும்புதைவரு வளியும்
> வளித்தலைஇய [454]தீயும்
> தீமுரணிய நீரும்" (புறநா. 2)

எனவும்,

---

உரை.பா.வே: 452. படிதம் - யாப்.வி. 22 மேற்.

453. மண்டணிந்த-(த) 454. எரியும் - (த) (பே)

"புன்காற் புணர்மருதின்
[455] போதப்பிய புனற்றாமரை" (யாப்.வி. 15 மேற்.)

எனவும்,

"தேன்றாட் டீங்கரும்பின்
பூந்தாட் புனற்றாமரை" (யாப். வி. 15 மேற்.)

எனவும் இக் குறளடிவஞ்சிப்பாவினுள் வெண்சீரும் தன்சீரும் நேரீற்றியற்சீரும் வந்து கலித்தளையும் ஆசிரியத்தளையும் மயங்கினவாறு காண்க.

"வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடு மௌவல்
நளிர்கொடியன நறும்விரையன [456] நகுமலரன வகுளம்
குளிர்கொடியன குழைமாதவி குவிமுகையன கொகுடி
ஒளிர்கொடியன உயர்தளிரினொ [457] டொழுகிணரின
ஓடை" (சூளா. 434)

இக் கலிவிருத்தத்துள் இயற்சீரும் வஞ்சியுரிச்சீரும் வந்தவாறு கண்டுகொள்க.

"குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு [458] வெண்மணல்மேல் நின்று [459] -புலாஅ்லுணங்கல்

கொள்ளும்புட் காக்கின்ற கோஇன்மையோ நீபிறர
[460] துள்ளம்புக் காப்பது துரை" (யாப்.வி. 22 மேற்.)

என்று இத்தொடக்கத்து ஒருசார் வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வந்த (தேனும்) திருவள்ளுவப் பயன், நாலடி நானூறு முதலான கீழ்க்கணக்குள்ளும், முத்தொள்ளாயிரம் முதலாகிய சான்றோர் செய்யுளகத்துள்ளும் வஞ்சியுரிச்சீர் வந்திலாமையானும் வேற்றுத்தளையும் வெண்பாவினுள் வருக என்னும் இலக்கணம் இன்மையானும், இத்தொடக்கத்துள் வருதல் குற்றமல்லது குணம் ஆகா என்பதூஉம் தொல்லாசிரியர் முதலாகிய சான்றோரது துணிவு. அதுவே இந்நூலுடையார்க்கும் உடன்பாடு.

(52)

உரை.பா.வே: 455. போதரும்பிய-யாப்.கா. 53 மேற்.
456. நறுமலரன நறவம், 457. டொழுகிணரன - சூளா. 434.
458. நேர்மணல்மேல், 459. புலாவுணங்கல் - யாப்.வி. 22 மேற்.
460. துள்ளம் புகாப்ப துரை - யாப்.வி.22 மேற்.

## அடிமயக்கம்

ருயங. ஆசிரியப்[461]பாவில் அயற்பா அடிமயங்கும்
ஆசிரியம் வெண்பா கலிக்கண்ணாம் - ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா [462]அடிவிரவா உற்று

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அடி மயக்கம் உணர்த்திற்று.

ஆசிரியப்பாவில் வெள்ளடியும், வஞ்சியடியும் கலியடியும் வந்து மயங்கப்பெறும். ஆசிரியமும் வெண்பாவும் கலிப்பாவில் வந்து மயங்கப்பெறும். வஞ்சியினிடத்தும் ஆசிரியமும் கலியும் வெண்பாவும் வந்து மயங்கப்பெறும் என்றவாறு.

வரலாறு:

"எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல்[463] என்ன பாறை[464] ஏறியக்
கொடுவேல் எயினர் பகழி மாய்க்கும்
கவலைத்தென் பவவர்[465] தேர்சென்ற ஆறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் [466]கலுழுமிவ் வழுங்கல் ஊரே" (குறுந். 12)

இந்நேரிசை ஆசிரியாப்பாவினுள்,

"எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
குறுந்தொடி யாம்செல் சுரம்" (யாப்.வி. 29 மேற்.)

என உச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

"[467]இருங்கடற் றானையொடு பெருநிலங் கவைஇ
[468]உடனிலை நடுவண் கிடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணக்

---

ருமங பா.வே: 461. பாவின்-(பே) 462. அடிவரவா னற்று-(உ)

உரை.பா.வே: 463. அன்ன, 464. ஏறி, 465. சென்ற,
466. கழறுமிவ் - குறுந். 12 உ.வே.சா; 467. இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம், 468. உடையிலை நடுவண திடைபிறர்க் - புறநா. 363 உ.வே.சா

காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு[469] பிறர்கொள்ளச் சென்றுமாய்ந்[470]தோரே;
அதனால்
நீயும் கேண்மதி அத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்கல் உண்மை மாயமோ அன்றே
கள்ளி[471]வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய[472]வியனில் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறர்க்குநோக்காது
இழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல்[473] வாரார் முன்னே
[474]செந்நீர் முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே" (புறநா. 363)

இவ்வாசிரியப்பாவினுள்,

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்'

எனவும்,

"கைக்கொண்டு பிறர்க்குநோக்காது"

எனவும்,

"இழிப்பிறப்பினோன் ஈயப்பெற்று"

எனவும் வஞ்சியடி விரவி வந்தவாறு கண்டுகொள்க.

"அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல்[475]வாயடி புலம்பிமனைக் கலங்கி
ஏதில்[476]மாக்களொடும் நோவார் தோழி
ஒன்றும் நோவார் இல்லைத்
தண்கடற் சேர்ப்பன் உண்டவென் நலக்கே"
(யாப்.வி.29 மேற்.)

இவ்வாசிரியத்துள்,

---

உரை.பா.வே: 469. பிறர்கொளச் - 470. தனரே 471. வேய்ந்த - 472. வியலுள், 473. வாரா - 474. செய்ந்நீ-புறநா. 363. உ. வே. சா. 475. வாயாப் புலம்புமனைக், 476. மாக்களை, யாப். வி. 29 மேற்.

"அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பொங்கிய பூசல் பெரிது"

என உச்சரித்து வெண்சீர் விரவிய இயற்றளை வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

"குருகுவெண் டாளிகோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதரும்[477] சாரல்
அருளா னாகுதல் ஆயிழை கொடிதே" (யாப்.வி. 29 மேற்.)

இவ்வாசிரியத்துள்,

"மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
திவழங்கும்[478] சுடர்விழிக்கண் சீயம்சென் றுழலுமே"
(யாப். வி. 29 மேற்.)

என உச்சரித்துக் கலியடி ஆமாறு கண்டுகொள்க.

பட்டினப்பாலை என்னும் வஞ்சிநெடும்பாட்டினுள் (23) ஆசிரியவடி பயின்று வெள்ளடியும் கலியடியும் அருகி வந்தன எனக்கொள்க.

"கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
ஆழிசூழ் வையக் கணி" (யாப். வி. 31 மேற்.)

என உச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

"வயலாமை புழுக்குண்டு வறளடம்பின் மலர்மலைந்தும்"
(பட்டினப். 65,66)

என்பது கலியடி.

"வயலாமை புழுக்குண்டு வறளடம்பின் மலர்மலைந்தும்
கயல்நாட்டக் கடைசியர்தம் காதலர்தோள்[479] சேர்ந்தனரே"
(யாப்.வி. 31 மேற்.)

என உச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க.

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்' (குறிஞ்சிக்கலி.3) என்னும் மயங்கிசைக் கொச்சகத்துள் வெண்பாவும் ஆசிரியமும் மயங்கி வந்தன எனக்கொள்க. (53)

உரை.பா.வே. 477. சோலை, 478. சுழல்விழிக்கண் - யாப்.வி. 29 மேற்.
479. கலந்தனரே - யாப்.வி.31 மேற்.

ருயச. ஐஞ்சீ ரடியும் அகவல் கலிப்பாவில்
மிஞ்சாது அடையுநெடு வேற்கண்ணாய் - எஞ்சாத
வஞ்சியிடை [480]மேவா மருவாவெண் பாவினிடை
அஞ்சினர்பின் போவதென [481]ஆம்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் அடிமயக்கம் ஆமாறு உணர்த்திற்று.

'மிஞ்சாது அடையும்' என்ற விகற்பத்தினால் அகவற் பாவினுள்ளும் கலிப்பாவினுள்ளும் ஐஞ்சீரடியும் அருகி வரப்பெறும் என்றவாறு.

வரலாறு:

"அணிகிளர் [482]அவிர்பொறித் துத்திமா நாகத்தெருத்தேறித்

துணியிரும் பனிமுந்நீர் தொட்டுழந்து மலைந்தனையே"
(யாப். வி. 93 மேற்.)

இக் கலிப்பாவினுள் முதலடி ஐஞ்சீர் வந்ததெனக்கொள்க.

"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் [483]பெருங்காட்டு
இன்னா என்றிர் ஆயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே" (குறுந். 124)

இவ்வாசிரியத்துள் முதலடி ஐஞ்சீர்வந்தது. 'சிறியகட்பெறினே' (புறநா. 235) என்னும் இணைக்குறளில் ஐஞ்சீரடியும் வந்ததெனக்கொள்க.

வெண்பாவினும் வஞ்சியினும் ஐஞ்சீரடி வரப்பெறா; அஞ்சினர் பின்போவதன்றேயன்றி முன்செல்லார் என்றவாறு.

"ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய அல்ல"
(யாப்.வி. 93 மேற். நக்கீரனார் அடிநூல்)

என்ற நாலடி நூலுள் எடுத்தோதினார்; பிறநூலுள்ளும் கண்டுகொள்க. (54)

---

54. பா.வே: 480. மேலா, 481. லாம்-(உ)
உரை.பா.வே: 482. சிறுபொறி அவிர்துத்தி மாநாகத் - யாப்.வி. 93 மேற்.
483. பெருங்காடு - குறுந். 124.உ.வே.சா.

## தொடை விகற்பம்

ருரு. கடையே இணையே இடைப்புணர்வே பின்னே
அடைவே வருமந்தம்[484] (ஆதி) - நடைசேர்
ஈரடியே[485] ஆசே இனமே வருக்கமே
நேரடியே[486] யாமே நெடில்

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் தொடைகட் கெய்தியதோர் இலக்கணம் உணர்த்திற்று.

முன்சொன்ன (இலக்.சூ. 8, 9) மோனை, எதுகை, முரண், அளபு, இயைபு என்னும் ஐந்து தொடையும் விகற்பித்து முப்பத்தைந்தாக்கினார்; அதையும் விகற்பித்துப் பலவாக்கினார் (இலக்.சூ. 10). அதிற் சில தொடைவிகற்பம் வருமாறு:

கடையும், இணையும், இடைப்புணர்வும், பின்னும், அந்தமும், ஆதியும், ஈரடியும், ஆசும், இனமும், வருக்கமும், நேரடியும், நெடிலும் வருமாறு.

"கயல்மலைப் பன்ன கண்ணிணை கரிதே
தடமுலைத்[487] திவளும் தனிவடம் வெளிதே
நூலினும் நுண்ணிடை சிறிதே
ஆடமைத் தோளிக் கல்குலோ பெரிதே" (யாப். வி. 39 மேற்.)

இஃது அடிதோறும் இறுதிச்சீர் முரண்தொடுத்தமையால் கடைமுரண்.

[488] "மீனார்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினைக் குழுஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவும் தவிரான்
தேரோ[489] காணிலும் காண்டும்
பீரேர்[490] வண்ணம் சிறுநுதல் பெரிதே" (யாப். வி. 39 மேற்.)

இது கடையிருசீரும் முரணத்தொடுத்தமையால் கடையிணை முரண்.

---

55. பா.வே: 484. ஆயே-(உ) 485. ஈரடியே யாயே-(த) 486. நேரடி - (த)
உரை. பா. வே: 487. தவழும், 488. மீன்தேர்ந்து, 489. காணலம் - யாப்.வி. 39 மேற்;
490. வண்ணமும் - யாப்.வி. 39 மேற்

"சார லோங்கிய தடந்தாள் தாழை
கொய்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியம் இருந்தன மாக நின்றுதன்
[491] நலனுடைய பனிமொழி நன்குபல புகழ்ந்து
வீங்குதொடிப் பணைத்தோள் நெகிழத்
துறந்தோன் நல்லன் மேனியோ தீதே" (யாப். வி. 39 மேற்.)

இஃது அடிதோறும் இறுதிச்சீரும் இரண்டாம்சீரும் முரணத் தொடுத்தமையால் பின்முரண்.

"காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளும் அணங்குமால் எமக்கே"
(யாப்.வி. 39 மேற்.)

இது முதற்சீரின்றி ஒழிந்த மூன்றுசீரும் முரணத் தொடுத்தமையால் கடைக்கூழை முரண்.

"போதவிழ் குறிஞ்சி நெடுந்தண் மால்வரைக்
கோதையில் தாழ்ந்த ஓங்குவெள் ளருவி
காந்தளஞ் செங்குலை பசுங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூர் [492] இழிதர நலங்கவர்ந்
தின்னா [493] வாக இனியவோ மாட்டே" (யாப்.வி. 39 மேற்.)

இது நடுவிரு சீர்க்கண்ணும் முரணத்தொடுத்தமையால் இடைப்புணர் முரண்.

இவ்வாறு சொன்ன ஒழிந்த மோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னும் நான்கு தொடைக்கும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

இனி வருக்கவெழுத்தும் நெடிலெழுத்தும் இனவெழுத்தும் எதுகையும் மோனையுமாய் வந்தால், அவற்றை வருக்கவெதுகை நெடிலெதுகை இனவெதுகை என்றும், வருக்கமோனை நெடில்மோனை இனமோனை என்றும் பெயரிட்டு வழங்கப்படும் என்றவாறு.

---

உரை.பா.வே: 491. நலனுடைப் பணிமொழி - யாப்.வி. 39 மேற்.
492. இழிதரு - யாப்.வி. 39 மேற்.
493. வாயின இனியோர் - யாப்.வி.39 மேற்.

[494]"நீடிணர்க் கொம்பர் குயிலாலத் தாதூதிப்
[495]பாடும் வண்டஞ்சி அகலும் பருவத்துத்
தோடார் தொடிநெகிழ்த்தார்[496] உள்ளத்தாற்
படலொல்லார்
பாடமை சேக்கையுட்[497] படர்கூர்ந் திசினே"
(யாப்.வி.37 மேற்.)

இது டகாரமெய் வருக்கவெதுகை.

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள். 37)

இது றகாரமெய் வருக்கவெதுகை.

'ஆவாவென்றே' (யாப்.வி. 69 மேற்.) இஃது இரண்டா மெழுத்து ஒன்றாதாயினும் இரண்டா மெழுத்தின் மேல் ஏறிய உயிரொப்புமை நோக்கிய உயிரெதுகை.

இனி எதுகை மூன்று வகைப்படும்; வல்லின வெதுகையும் மெல்லின வெதுகையும் இடையினவெதுகையும்என. அவற்றுக்குச் செய்யுள் வருமாறு:

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சாத்தாற் காணப் படும்" (குறள். 114)

இது வல்லினவெதுகை.

"அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு" (குறள். 74)

இது மெல்லினவெதுகை.

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு" (குறள். 299)

இஃது இடையினவெதுகை.

---

494. இவ்வெடுத்துக்காட்டுப்பாடலின் ஈற்றுச்சீர் பிறநூல்களில் 'கண்' என்று முடிவதாகக் காட்டப் பெறவும், இந்நூலில் மட்டும் 'படர்கூர்ந் திசினே' என இருசீராகவுள்ளது.

உரை.பா.வே: 495. பாடு, 496. உள்ளார் படரொல்லா- யாப்.வி. 37 மேற்;,

497. கண்-யாப்.வி. 37 மேற்

வருக்கமோனை முதலான மூன்றும் வருமாறு:

"பகலேபல் பூங்கானற் கிள்ளை ஓப்பியும்
பாசிலைக் குளவியொடு[498] கூதாளம் விரைஇப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத்[499] திருகிப்
புனையீர் ஓதி செய்குறி[500] நோக்கிப்
பூந்தார் மார்ப! புனத்துட் டோன்றிப்
பெருவரை அடுக்கத் தொருவேல் ஏந்திப்
பேயும் அறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொருதுசினம்[501] தணியாப் பூநுதல் ஒருத்தல்
போகாது வழங்கும் ஆரிருள் நடுநாள்
பௌவத் தன்ன பாயிருள் நீந்தி
இப்பொழுது வருகுவை யாயின்
நற்றார் மார்ப[502] தீண்டிலம் கதுப்பே" (யாப். வி. 37 மேற்.)

இது பகாரமெய் வருக்கமோனை.

"ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
[503]தானோர் இன்புறவு தனிமையிற் றொவ்வாது"
(முதுமொழி. 1)

இது நெடில்மோனை.

இனமோனை மூன்றுவகைப்படும் ; வல்லினமோனையும் மெல்லினமோனையும் இடையினமோனையும் என.

"கயலேர் உண்கண் கலுழ நாளும்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திழை அமைத்தோள் அரும்படர் உழப்பப்
போகல் வாழி ஐய[504] அழுத்த
கொழுங்கொடி அணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம்[505] போழ்தே" (யாப்.வி. 37 மேற்.)

இஃது எல்லாவடியும் முதற்கண்ணே வல்லினவெழுத்து வந்தமையால் வல்லின மோனை.

---

உரை.பா.வே 498. கூதளம், 499. திருத்திப், 500. நகைஇப், 501. தணிந்த, 502. தீண்டலெம் - யாப்.வி. 37 மேற்;

503. ஓதலிற் சிறந்தன் றொழுக்கமுடைமை - முதுமொழி. 1, இந்நூலுள் இவ்வெடுத்துக் காட்டில் ஈற்றடி மாறுபட்டுள்ளதையும் 32 ஆம் நூற்பாவுரையில் முறையாகவுள்ளதையும் காண்க.

504. பூத்த -505. பொழுதே - யாப்.வி. 37 மேற்;

இனி மெல்லினமோனையும் இடையினமோனையும் வந்த வழிக் கண்டுகொள்க.

இனித் தலையாகுளதுகை இடையாகுளதுகை கடையாகு எதுகை எனவும், தலையாகுமோனை இடையாகுமோனை கடையாகுமோனை எனவும் வேண்டுவாருமுளர்.

506"சீர்முழு தொன்றிற் றலையா கெதுகை"

(யாப்.வி.37 மேற்.)

வருமாறு:

'சிலை விலங்கு' (தண்டி.16 மேற்.) என்பது தலையாகுளதுகை;

'அகரமுதல' (குறள் 1) என்பது இடையாகுளதுகை;

'தக்கார் தகவிலர்'(குறள். 114) என்பது கடையாகுளதுகை;
'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" (குறள். 350)

இது தலையாகு மோனை.

'மாவும் புள்ளும்' (யாப்.வி.35 மேற்.) இடையாகுமோனை;
'பகலே பல்பூங்கானல்' (யாப்.வி.37 மேற்.) இது கடையாகு மோனை.

இனி உயிரெதுகையும், ஆசெதுகையும், இடையிட்டெதுகையும், இரண்டடியெதுகையும், மூன்றாமெழுத்தொன்றின எதுகையும் என்றித் தொடக்கத்து எதுகை, மோனை பலவாயினும் சிறப்பில வெனக்கொள்க.

வரலாறு:

"துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
அணிகிளர் தாரோய் அருஞ்சுரம் நீந்தி

506. இந்நூற்பா யாப்பருங்கலவிருத்தியுரையில்,

"சீர்முழு தொன்றிற் றலையா கெதுகை
ஒரெழுத் தொன்றின் இடைகடை பிறவே"

என்றுள்ளது.

வடியமை எஃகம் வலவயின் ஏந்தித்
தனியே வருதி [507] நீயேநின்
மையிரும் கூந்தல் [508] உய்வதோ அரிதே"(யாப். வி.36 மேற்.)

இஃது இரண்டாமெழுத்து ஒன்றாதாயினும் இரண்டாமெழுத்தின் மேல் ஏறிய உயிரொப்புமை நோக்கிய உயிரெதுகை.

இனி ஆசெதுகை.

"யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை [509] நிற்பின்
ஆசிடை யெதுகையென் [510] றறியல் வேண்டும்"

[511] என்றாராகலின்.

வரலாறு:

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் [512] கமுகு நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால் திசைபோய துண்டே" (சீவக.31)

இது யகாரவொற்று இடைவந்த ஆசெதுகை.

"மாக்கொடி [513] யானையும் மௌவல் பந்தலும்
கார்க்கொடி முல்லையும் கலந்த மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும் [514] கான ஞாழலும்
தூக்கடி கமழ்ந்துதான் துறக்கம் [515] ஒக்குமே" (சூளா.35)

இது ரகாரவொற்று இடைவந்த ஆசெதுகை.

"ஆவே றுருவின ஆயினும் ஆப்பயந்த
பால்வே றுருவின அல்லவாம் - பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆப்போல்
உருவு [516] பலகொள்ளல் ஈங்கு" (நாலடி 118)

இது லகாரவொற்று இடைவந்த ஆசெதுகை.

---

உரை.பா.வே. 507. நீயெனின் - 508. உய்தலோ - 509. உயிர்ப்பின் - 510.றறையல் - யாப்.வி.36 மேற்.

511. காக்கைபாடினியார் என்று யாப்பருங்கலக்காரிகை சுட்டும் (யாப்.வி. 56);

512. கமுகி னெற்றிப் - சீவக. 31

513. மாண்ணையும், 514. பொன்ன, 515. ஒத்தமே - சூளா.35;
516. பலகொளல் - நாலடி. 118;

"அந்தரத் துள்ளே அகங்கை புறங்கையாம்
[517]அந்தரமே போலும் மனைவாழ்க்கை[518]—அந்தரத்து
வாழ்கின்றோம் என்று மகிழன்மின் வாணாளும்
போகின்ற பூளையே போன்று" (யாப். வி. 37 மேற்.)

இது ழகாரவொற்று இடைவந்த ஆசெதுகை.

இனி இடையிட்டெதுகை வருமாறு:

"தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா அவ்வரி[519]புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைப்பையப் பெருக
நீடார்[520]இவரென நீமனம் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழி;
வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவம்[521]பொய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே" (யாப். வி. 37 மேற்.)

இஃது அடியிடையிட்டு இரண்டாமெழுத்து ஒன்றிவந்த எதுகை.

"துவைக்கும்[522]துணைமுந்நீர் கொற்கை மகளிர்
அவைப்பதம்[523]பல்லின் அழகொவ்வா முத்தம்
மணங்கமழ்தார் அச்சுதன் மண்காக்கும் வேலின்
அணங்கு அமிதமும் அந்நலார் பாடல்" (யாப்.கா. 56 மேற்.)

இது முதலிரண்டடியும் ஒரெதுகையாய்ப் பின்பில் இரண்டடியும் மற்றோரெதுகையாய் வந்த இரண்டடியெதுகை.

இனி இரண்டடி மோனை வருமாறு:

"ஆகங் கண்டகத் தாலற்ற ஆடவர்
ஆகங் கண்டகத் தாலற்ற அன்பினர்
பாகங் கொண்டு பயோதரம் சேர்த்தினார்
பாகங் கொண்டு[524]பயோததி நண்ணினார்"
(யாப். வி. 37 மேற்.)

இஃது இரண்டடிமோனை.

---

உரை.பா.வே. 517. அந்தரமே,518. அந்தரத்து 519. வகைஇப்,520. இவனென - 521. செய்யாது - யாப்.வி. 37 மேற். யாப்.வி. 37 மேற்.
522. துளிமுந்நீர், 523. பல்லிற்கு - யாப்.கா. 56. மேற். 524. பயோதரம் - யாப்.வி. 37 மேற்.

"பவழமும் பொன்னும் குவைஇய முத்தின்
திகழரும்[525] பின்றதுப்புன் னை" (யாப். வி. 36 மேற்.)

இது மூன்றாமெழுத்தொன்றின எதுகை.

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்" (குறள். 292)

இதுவும் மூன்றாமெழுத்தொன்றின எதுகை.

"பற்றிப் பலகாலும் பான்மறி உண்ணாமை
[526]நொஅலை நின்நாட்டை நீ" (யாப். வி. 53 மேற்.)

இது விட்டிசை வல்லொற்றெதுகை.

"அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்லார் இகல்" (யாப். வி. 7 மேற்.)

இது முதலெழுத்து இரண்டடிக்கண்ணும் விட்டிசைத்தமையால் விட்டிசை மோனை. இவையெல்லாம் சிறப்பில எனக்கொள்க.

முன் 'அகரமோ டாகாரம்' (இலக். சூ. 7) என்ற இலக்கணப்படியே இனவெழுத்துப் பெற்று வருவதே தொடை யெனப்படும்.

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்" (குறள். 228)

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்" (குறள். 64)

இது மருட்செந்தொடை; பிறவும் அன்ன.

இனி வழியெதுகை வருமாறு:

"மண்டலம் பண்டுண்ட திண்டோள்
வரகுணன்[527] தொண்டையின் வாய்க்
கண்டலந் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகரக்
குண்டலம்[528] கொண்டை இரண்டொடு தொண்டையும்[529]
கொண்டோர்திரள் -
மண்டலம் வண்டலம் பக்கொண்டால் தாழ வருகின்றதே"
(யாப். வி. 53 மேற்.)

உ.ா.பா.வே: 525. பின்றபுன்னை - யாப்.வி.36 மேற்.
526. நொ அலையல் - யாப்.வி. 53 மேற். 527. தொண்டியின் வாய்க்,
528. கெண்டை, 529. கொண்டோர்திரள் - யாப்.வி. 53 மேற்.

எனவும், 'கொங்கு தங்கு' (யாப். வி. 25 மேற்.) எனவும் கொள்க. 'அனுப்பிராசம்' என்னும் வடமொழிப் பொருளை வழியெதுகை என்று வழங்குதல் தமிழ் வழக்கெனக் கொள்க.

வழிமுரண் வருமாறு:

'செய்யவாய்ப் பசும்பொன் னோலைச்
சிறடிப் பரவை அல்குல்
[530]அய்ய நுண் மருங்குல் நோவ
வடிக்கொண்ட குவவுக் கொங்கை
வெய்யவாய்த் தண்ணென் நீலம்
விரிந்தென விலங்கி நீண்ட
மையவா மழைக்கண் கூந்தல்
மகளிரை வருக என்றான்" (சூளா. 673)

எனவும்,

"ஒருமால் வரைநின் றிருசுட[531]ரொடுமுந் நீர்க்கிடந்த
பெருமா நிலனும் சிறுவிலைத் [532]தாயுண்டு பேதையர்கண்
பொருமா தவித்தொங்கல் எங்கோன் பொரவல்[533]லவன்பதியிற்
கருமா[534]னிறவெண்பல் செவ்வாய்ப் பசும்பொற் கனங்குழைக்கே"
(யாப்.வி.53 மேற்.)

எனவும் கொள்க. (55)

## கூன் வருமுறை

ருய௬. முதலொருசீர் கூனாம் முறையேபின் வஞ்சிக்
கெதிரில்[535] இடையிறுதி எய்தும் - விதியின்
பொருள்கோள் விகாரம் புகல்வண்ணம் பின்னும்
வருசீர் வகையுளியும் வந்து

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வெண்பா முதலாக வஞ்சிப்பா ஈறாகப் பாவுக்கு முதலினும் கடையினும் இடையினும் கூன்வருதல் நுதலிற்று.

---

உரை.பா.வே: 530. ஐய-சூளா. 673; 531. ரொட்டிமுந், 532. தாவுண்டு, 533. லவன்பொதியிற், 534. விழிவெண்பல் - யாப்.வி.53 மேற்.

ரு௬சூ. பா.வே:535. கெதிரிடை இறுதி எய்துவதும்-(உ)

'முதலொரு சீர் கூனாம் முறையே' என்ற விகற்பத்தால் வெண்பாவுக்கு முதல் ஒருசீர் கூனாம்; ஆசிரியப்பாவின் இடையில் ஒருசீர் கூனாம்; கலிப்பாவிற்கு இடையில் ஒருசீர் கூனாம்; வஞ்சிப்பாவிற்குக் கடையிலும், இடையிலும் சீர் கூனாம்; அசையும் கூனுமாய் வரும் என்றவாறு.

[536]"அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்"
(யாப். 94)

என்றாராகலின் கூனென்றும் தனிச்சொல் என்றும் பேராம் என்றவாறு.

வரலாறு:

"உதுக்காண்
சுரந்தானா வண்கைச் சுவணமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழ் பாடி-இரந்தார்மாட்
டின்மை அகல்வது போல இருள்நீங்க
[537]மன்னு மெளிதோ மழை" (யாப்.வி. 94 மேற்.)

என வெண்பாவின் முதற்கண் 'உதுக்காண்' எனக் கூன் வந்தவாறு.

"அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே;
யானே, தோடா ரெல்வளை நெகிழ ஏங்கிப்
பாடமை. [538]சேக்கையுட் படர்கூர்ந் திசினே
அன்னள் அளியள் என்னாது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னும்[539] தோழி என்னுயிர் குறித்தே"
(குறுந். 216)

இவ்வாசிரியத்துள் அடிமுதற்கண்ணே 'யானே' எனவும் 'அவரே' எனவும் கூன் வந்தவாறு காண்க.

536. இந்நூற்பா.

அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்
இஃதிறுதியும் வஞ்சியுள் இயலு மென்ப'

என்பதாகும்.

---

உரை.பா.வே: 537. மின்னு அளித்தோ - யாப்.வி. 94 மேற்;

538. சேக்கையிற்,
539. தோழியென் னின்னுயிர் - குறுந். 216

8

"உலகினுள், பெருந்தகையார் பெருந்தகைமை
பிறழாவே;பிறழினும்
இருந்தகைய இறுவரைமேல் எரிபோலச்
சுடர்விடுமே;
சிறுதகையார் சிறுதகைமை [540] சிறப்பின்னும்
பிறழ்வின்றி
[541] உறுதகைய உலகிற்கோர் ஒப்பாகித்
தோன்றாதே"
(யாப். வி. 94 மேற்.)

இக் கலியுள் முதற்கண் 'உலகினுள்' எனக் கூன் வந்தவாறு.

'கலங்குழாயிற் றுறை கலக்குற்றெனை' (புறநா. 345) என வஞ்சியின் நடுவே 'துறை' என அசை கூனாய் வந்தவாறு.

'மாவழங்கலின் மயக்குற்றன வழி' (புறநா. 345) என வஞ்சியடியின் இறுதிக்கண் 'வழி' என அசை கூனாய் வந்தவாறு.

"முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி ஒழுகுமென்ப
அதனால்
நற்றிறம் நாடுதல் நன்மை
பற்றற யாவையும் பரிவறத் துறந்தே" (யாப். வி. 94 மேற்.)

இவ்வஞ்சிப்பா அடிமுதற்கண் 'உலகே' எனக் கூன்வந்தவாறு காண்க.

"தேரோடத் துகள்கெழுமின் தெருவு" (யாப். கா. 58 மேற்.) என வஞ்சியடியின் இறுதிக்கண்' 'தெருவு' என உகர இறுதியாய நேரீற்று இயற்சீர் கூனாயிற்று.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்' (குறிஞ்சிக்கலி-3) என்னும் கலிப்பாவினுள் 'சிறுகுடியீரே சிறுகுடியீரே' என அடி கூனாய் வந்தவாறு.

இனி 'விதிவகையின் பொருள்கோள்' என்று சிறப்பித்த வதனால் இவ்விலக்கணத்துப் பாக்களுக்குறுப்பாய் மயக்கம் நீங்க வகுக்கப்பட்ட விகாரமும், வகையுளியும், வாழ்த்தும், வசையும்,

---

உரை.பா.வே: 540. சிறப்பின்னும்-யாப்.வி. 94 மேற;

541. உறுதகைமை உலகினுக்கோர் - யாப்.வி. 94 மேற்;

வனப்பும், பொருளும், பொருள்கோளும், குறிப்பிசையும், செய்யுளொப்புமையும் ஆமாறு [542] உபதேச முறை [மை] யால் [543] ஓம்புக என்றவாறு.

அவற்றுள் விகாரம் அறுவகைப்படும்; அவை வலித்தலும் மெலித்தலும் விரித்தலும் தொகுத்தலும் நீட்டலும் குறுக்கலும் என.

வரலாறு:

"குறுத்தாட் பூதம் [544] சுமந்த கட்டில்
அறக்கதிர் ஆழியெம் அண்ணலைத் [545] தொழினே"
(யாப். வி. 95 மேற்.)

இதனுள் 'குறுந்தாள்' எனற்பாலதனைக் 'குறுத்தாள்' என வலிக்கும் வழி வலித்தவாறு.

[546] "தண்டையி னக்கிளி கடிவாள்
பண்டையள் அல்லள் மானோக் கினளே"
(யாப் .வி. 95 மேற்.)

இதனுள் 'தட்டை' என்றபாலதனைத் 'தண்டை' என மெலித்தவாறு.

"வெண்மணல் எக்கர் விரிதிரை தந்தநீர்
கண்ணாடி மண்டிலத் தூதாவி ஒத்திழியும்
தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார்
வண்ணம் கடைப்பிடியா தார்" (யாப். வி. 95 மேற்.)

இதுனுள் 'தண்டுறைவான்' எனற்பாலதனைத் 'தண்ணந் துறைவன்' என்று விரிக்கும்வழி விரித்தவாறு.

"பூத்தாட் புறவின் புனைமதில் கைவிடார்
காத்தவிக் காவலர் [547] ஏனையர்-பாத்துறார்

542. உபதேசமுறைமையாவது பாடஞ்சொல்லும் நெறி; போதானாமுறை. முன்னோர் சொல்லிய முறை என்க. காண்க. யாப்.கா. 45

உரை.பா.வே: 543. உணர்க-(பே)
544. சுமந்த-யாப்.வி. 94 மேற்.
545. தொழவே-யாப்.வி. 94 மேற்;
546. தண்டையின் இனக்கிளி - 547. ஏனையார்-யாப்.வி. 94 மேற்.

வேண்டார் வணக்கி விறன்மதில் தான்கோடல்
வேண்டுமாம் வேண்டார் மகன்" (யாப்.வி. 95 மேற்)

இதனுள் 'வேட்டாரை வணக்கி' எனற்பாலதனை 'வேண்டார் வணக்கி' என்று தொகுக்கும்வழித் தொகுத்தவாறு.

"பாசிழை ஆகம் பசப்பித்தான் [548] பைந்தொடி
மாசேனன் என்று [549] மணங்கொளின்-மாசேனன்
சேயிதழ்க் கண்ணி [550] தருதலால் சேர்த்தியென்
நோய்தீர நெஞ்சின்மேல் வைத்து" (யாப். வி. 95 மேற்.)

இதனுள் 'பச்சிழை' எனற்பாலதனைப் 'பாசிழை' என்று நீட்டும்வழி நீட்டினவாறு.

"..................................யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்" (யாப். வி. 62 மேற்.)

இதனுள் 'தீயேன்' எனற்பாலதனைத் 'தியேன்' என்று குறுக்கும் வழிக் குறுக்கினவாறு.

இவ் விகாரத்தைத் தலைக்குறைத்தலும் இடைக்குறைத்தலும் கடைக்குறைத்தலும் என வேண்டுவாருமுளர். அவை வருமாறு:

"மரையிதழ் புரையும் [551] செழுஞ்சீறடி" (யாப்.வி. 95 மேற்.)

இது 'தாமரை'யை 'மரை' யென்று தலைக்குறைத்து வழங்கினவாறு.

"அகலிரு விசும்பின் ஆஅல் போல
வாலிதின் [552] மலர்ந்தன பொன்கொடி முசுண்டை"
(மலைபடு. 100-101)

இதனுள் 'ஆரல்' என்பதனை 'ஆல்' என்று இடைக்குறைத்து வழங்கினவாறு.

"நீலுண் துகிலிகை கடுப்பப் பலவுடன்" (யாப்.வி. 95 மேற்.)

என்பதனுள் 'நீலமுண் துகிலிகை' என்பதனை 'நீலுண்துகிலிகை' என்று கடைக்குறைத்து வழங்கினவாறு; பிறவுமன்ன.

---

உரை.பா.வே: 548. பைந்தொடியை - 549. மணங்கொளீஇ - யாப்.வி. 95 மேற்.
550. தருகிலான் 551. அஞ்செஞ் - யாப்.வி. 95 மேற்.
552. விரிந்த புன்கொடி -மலைபடு 100-101

"[553]இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்
எனநான்கு சொல்லின் இசைக்கப் படுமே"

என்றாராகலின்.

இயற்சொல்லாவன சோறு, கூழ், பாளிதம், பால் என்றாற் போலக்கொள்க.

திரிசொல்லாவன,

"ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி"
(தொல்.சொல்.393 இளம்.)

அவை அடுக்கல்,பிறங்கல், வெற்பு-இவை மலை; ஒரு பொருள் குறித்த. (சொல்). உந்தியென்பது ஆற்றிடைக் குறையும் தேருருளும் என இவை வேறுபொருள் குறித்த சொல்.

இனித் திசைச் சொல்லாவன,

"செந்தமிழ்[554]நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"
(தொல்.சொல். 394 இளம்.)

அவை தாயைத் தள்ளை என்றும், கிளியைக் கிள்ளை என்றும் வரும்.

வடசொல்லாவன, ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவாய் நடப்பன. அவை குங்குமம், மூலகம் எனவரும்.

இனி வகையுளி என்பது,

"அருணோக்கு நீரார் அசைசீர்[555]அடிகள்
பொருணோக்கா தோசையே நோக்கி-மருணீக்கிக்
கூம்பவும்[556]கூம்பாதல் யாவையும் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு" (யாப். வி. 95 மேற்.)

என்றாராகலின்.

---

553. நால்வகைச் சொல்பற்றிய இவ்வுரைப்பகுதி பேரூர்ச் சந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரிச் சுவடியில் இல்லை.

உரை.பா.வே: 554. சேர்ந்த - தொல். சொல். 394 இளம்.

555. அடிக்கண்- 556. கூம்பாதலரவும் - யாப். வி. 95 மேற்.

"கடியார்பூங் கோதை கடாயினான் திண்டேர்
[557]சிறியார்தம் சிற்றில் சிதைத்து" (யாப்.வி. 95 மேற்.)

'கடியார்' என்றும் 'பூங்கோதை' என்றும் 'கடாயினான்' என்றும் இவ்வாறு அலகிட ஆசிரியத்தளையும் கலித்தளையும் தட்டு வெள்ளைத்தன்மை குன்றிப்போம்; 'கடியார்பூ' என்றும் 'கோதை' என்றும் அலகிடில் சீரும் தளையும் சிதையாதாம்.

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள். 4)

இதில் 'மலர்மிசை' என்றும் 'நீடுவாழ்' என்றும் 'வார்' என்றும் அலகிடச்சீரும் தளையும் சிதையாதாம்.

"பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் [558]பண்டுதான் கண்டவர்க்கும்
ஊடுநர்க்கும் கூடுநர்க்கும் ஒத்தவால்-நீடுநீர்
நல்வய லூரன் நறுஞ்சாந் தணியகலம்
[559]புல்லினென் ஊடல் இனிது" (யாப். வி. 95 மேற்.)

இதனுள் டுகர நகரம் பிரிந்திசைத்தனவாயினும் இவ்விரண்டினையும் கூட்டி நிரையாக அலகிடச் சீரும் தளையும் வண்ணகமும் சிதையாதாம்.

இனி, வாழ்த்து இரண்டு வகைப்படும்; மெய்வாழ்த்தும், இருபுறவாழ்த்துமெனை. அவை வருமாறு:

"கார்நறு நீலம் கடிகயத்து வைகலும்
நீர்நிலை நின்ற பயன்கொலோ-கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் [560]வாமான் வழுதியாற்
கொண்டிருக்கப் பெற்ற [561]குறி" (முத்தொள்.)

இது மெய்வாழ்த்து.

"பண்டும் ஒருகால்தன் பைந்தொடியைக் கோட்பட்டு
[562]வெங்கடம்பு வில்லேற்றிக் [563]கொண்டுந்தான்-
தென்களந்தை

உரை.பா.வே: 557. சிறியாடள்-558.பண்டுதாம் - 559. புல்லலின்- யாப்.வி. 95 மேற்.
560. வாமான் - 561. குணம் - முத்தொள்.
562. வெங்கடம்- யாப்.வி. 95 மேற்;
563. கொண்டுழந்தான்- யாப்.வி. 95 மேற்;

பூமான் திருமகளுக்[564]கின்னும் புலம்புமால்
வாமான்தேர் [565]வைகையார் கோ" (யாப். வி. 96 மேற்.)

இஃது இருபுறவாழ்த்து.

இனி வசையும் இரண்டு வகைப்படும். மெய்வசையும் இருபுறவசையும் என. அவை,

"தந்தை [566]யிற்சுமடன் தாய்தோழி தான்பார்ப்பான்
[567]எந்தைக் கிதெங்கனம் பட்டதுகொல்-முந்தை
[568]அவியுணாவி னார்தெரியின் யாவதாங் கொல்லோ
கவிகண்ண னார்தம் பிறப்பு" (யாப். வி. 96 மேற்.)

இது மெய்வசை.

"படையொடு போகாது[569] நின்றிரந்தா னென்றும்
கொடையொடு நல்லார்கட் [570]டாழ்ந்த -படையொடு
பாடி வழங்கும்[571] தெருவெலாம் தான்சென்று
கோடி வழங்கும் மகன்" (யாப். வி. 96 மேற்.)

இஃது இருபுறவசை.

இனி வனப்பு எட்டு வகைப்படும்; அவை அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என இவை.

அவற்றுள் அம்மையாவது சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளிய பொருள்மேல் சிலவடியால் சொல்லப்பட்டது.

வரலாறு:

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போல் போற்றாக் கடை" (குறள். 315)

அழகாவது செய்யுட்சொல்லாகிய திரிசொற்களால் ஓசை இனியவாக நன்கினிதாகப் (புணர்க்கப்)பட்டது.

---

உரை.பா.வே: 564. இன்னம் - 565. வையையார்- யாப்.வி. 95 மேற்;
566. இலைச்சுமடன் - 567. எந்தைக்கீ தெங்ஙனம் - யாப்.வி. 96 மேற்;
563. அவிவுணவி னார்தெரியின்- 569. நின்றெறிந்தான் - யாப்.வி. 96 மேற்;
570. தாழ்ந்த - யாப்.வி. 96 மேற்;
571. தெருவெல்லாம் - யாப்.வி. 96 மேற்;

வரலாறு:

"துணியிரும்[572]பாக்கம் குறைய வாங்கி
அணிகிளர் அடுக்கல் முற்றிய எழிவி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப

நெடுவரை மருங்கிற்[573]பாம்பின் இழிதரூஉம்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்கும் கல்லதர் நெறியே" (யாப். வி. 95 மேற்.)

எனவும் கொள்க.

தொன்மை என்பது பழையதாக நிகழ்ந்த பெற்றியின் அடுக்கப் படுவனவற்றின் மேற்று.

வரலாறு:

"[574]சிறுதொடி உவகைகேளாய் செஞ்சுடர் தெறுகதிர்ச் செல்வன்" என்பவும், [575]மகாபாரதமும் ஸ்ரீராமாயணமும் போல்வனவும் கொள்க.

தோல் என்பது இழுமென்னும் மெல்லிய சொற்களால் ஒள்ளிய கிடப்பனவும் எல்லாச்சொற்களோடும் பலவடியாய் இயைந்து இனிய கிடப்பனவும் என இருதிறத்தனவாம்.

வரலாறு:

"பாயிரம் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிரம் மணிவிளக் கழலும் சேக்கைத்
[576]துளிதரு வெள்ளம் துயில்புடை பெயர்க்கும்

---

உரை.பா.வே: 572. பரப்பகம் - 573. பரம்பற - யாப்.வி. 96 மேற்;
574. செறிதொடி- யாப்.வி. 95 மேற்;

575. "பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன" என்று பேராசிரியரும் (பேரா. தொல்.பொருள். 549), 'சிலப்பதிகாரமும் அதன்பாற்படும் என்று நச்சினார்க்கினியரும், "பாரதமும், இராமாயணமும் கொள்க" என்று யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும் (யாப்.வி.95), "மாபாரதம், காந்தம் போல்வனவும்" என்று காரிகையுரையாசிரியரும்(யாப்.கா. 45) கூறுவர். இவ்வுரையாசிரியர் 'ஸ்ரீ' என்று அடைகொடுத்துச் சிறப்பித்தார்.

576. துளிதரு - யாப்.வி. 95 மேற்.

ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்
இம்மை இல்லை மறுமை இல்லை
நன்மை இல்லைத் தீமை இல்லை
செய்வோர் இல்லைச் செய்பொருள் இல்லை
அறிவோர் யாரஃ [577] தறிவுழி உறுகென"

இது மார்க்கண்டேயனார் காஞ்சி; இழுமென்மொழியால் விழுமியது நுவன்றது.

'திருமழை தலைஇய' என்பது மலைபடுகடாம் *(1)*; பரந்தமொழியால் அடிநிமிர்ந்தொழுகியது.

விருந்து என்பது புதியவாயினவற்றின் மேற்று. அவை இப்பொழுதுள்ளாரைப் பாடுவன கண்டுகொள்க.

இயைபென்பது ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ ள என்னும் பதினொரு புள்ளி ஈறாக வந்த பாட்டு; கண்டுகொள்க.

புலன் என்பது இயற்சொல்லால் பொருள் தோன்றச் செய்யப்படுவது.

வரலாறு:

[578]"பாற்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி ஒன்னார்
மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறி
சென்றவள் திருமுகம் காணக் கடுந்தேர்
இன்றுபுகக் கடவுமதி பாக; உதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி உழைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே" (யாப். வி. 95 மேற்)

எனவும் கொள்க.

இழைபு என்பது வல்லொற்று யாதும் தீண்டாது நாற்சீரடி தன்னையே நாலெழுத்து முதலாக ஆறெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் குறளடி என்றும், ஏழெழுத்து முதலாக ஒன்பதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் சிந்தடி என்றும், பத்தெழுத்து முதலாகப் பதினான்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடி என்றும், பதினைந்தெழுத்து முதலாகப்

உரை.பா.வே: 577. திறுவழி - யாப்.வி. 95 மேற்;
578. பார்க்கடல் - யாப்.வி. 95 மேற்;

பதினேழெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் நெடிலடி யென்றும், பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் கழிநெடிலடி என்றும். இருபதெழுத்தின் மிக்க நாற் சீரடிப்பா இல்லை என்றும் வேண்டுவர்.

எழுத்து எண்ணுகின்றவழிக் குற்றியலுகரமும் குற்றிய லிகரமும் ஒற்றும் ஆய்தமும் ஒழிந்து நின்ற உயிரும் உயிர்மெய்யும் கொண்டு எண்ணப்படும்.

வெண்பா:

"ஈரிரண்டும் ஓரேழும் ஈரைந்தும் மூவைந்தும்
[579]பாரியபன் னாற்சீர் பதினெட்டும்-[580]பாவாய்
விளையும் பதினேழ்[581]நிலத்தும் குறள்சிந்
தளவும்[582]கழிநெடிலோ டைந்து" (யாப். வி. 25 மேற்.)

என்றாராகலின்.

வரலாறு:

"பேர்ந்து[583]பேர்ந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கி
நீர்வாய்க் கொண்டு நீண்ட நீலம்
ஊர்வாய் ஊதை வீச ஊர்வாய்
[584]மதியேர் கொண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும்[585]பன்னல் ஊர!
அமையேர் மென்றோள் ஆயரி நெடுங்கண்
இணையீர் ஓதி ஏந்திள வனமுலை
[586]இறும்பமர் மலரிடை எழுந்த மாவின்
நறுந்தழை [587]துயல்வரும் செறிந்தேந் தல்குலள்

உரை.பா.வே: 579. பாரியன்ற - யாப்.வி. 25 மேற்; 580. ஓரா - யாப்.வி. 25 மேற்;
581. நிலத்துக் - 582. நெடில்கழிலோ - யாப்.வி. 25 மேற்;
583. சென்று - யாப்.வி. 95 மேற்;
584. மணியேர் நுண்டோ - யாப்.வி. 95 மேற்;
585. பன்னெல் - யாப்.வி. 95 மேற்;
586 இறும்பென - யாப்.வி. 95 மேற்;
587. துயல்வருஉம் - யாப்.வி. 95 மேற்;

அணிநடை அசைஇய அரியமை சிலம்பின்
மணிமருள்[588] வளர்குழல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை[589] உருவிடை மகளிரொடு
[590]நளமுழவு முழங்கிய அணிநிலவு[591] மணிநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு[592] கலனளவு கலனளவு
[593]பெறுமணம் புணர்ந்தனை என்பவஃ
தொருநீ மறைப்பின் ஒழிகுவ தன்றே" (யாப். வி. 95 மேற்.)

எனக்கொள்க.

இனிப் பொருள்கோள் என்பது உம்மைத்தொகை; பொருளும் பொருள்கோளும் என. அவை,

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்" (குறள். 254)

என்பதனுள் அருளும் அருளல்லாததுமென்றாற் போலக் கொள்க (பரிமே. குறள். 254). அவற்றுள், பொருளாவன: ஐந்திணையும் சார்பாகத் தோன்றி அகமும் அகப்புறமும், புறமும் புறப்புறமும் பொருளாக வருவது.

அப் பொருள்கோள் ஒன்பது வகைப்படும்; நிரல்நிறை மொழிமாற்று, சுண்ணமொழிமாற்று, அடிமொழிமாற்று, அடிமறிமொழிமாற்று, பூட்டுவிற்பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள்கோள், அளைமறிபாப்புப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், கொண்டுகூட்டுப்பொருள்கோள் எனவிவை.

அவற்றுள் நிரல்நிறை இரண்டு வகைப்படும்; பெயர் நிரல்நிறையும், வினைநிரல்நிறையும் என. அவற்றுள் பெயர் நிரல்நிறை வருமாறு:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவளம் முத்தம் முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை[594] நடைநோக்கம் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்" (யாப். வி. 95 மேற்.)

எனக்கொள்க.

உரை.பா.வே: 588. வணர்குழல், 589. உருவுடை, 590. நளிமுழவ, 591. நெடுநகர், 592. நலனளவு நலனளவு, 593. பெருமணம் - யாப்.வி. 95 மேற்; 594. நடை நோக்கச் - யாப்.வி. 95 மேற்;

வினைநிரல்நிறை வருமாறு:

"[595]காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் [596]தார்மார்ப [597]போர்ச்செழிய-நீதியால்
மண்ணமிர்தம் மங்கையர்தோள் மாற்றாரை ஏற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்" (யாப். வி. 95 மேற்.)

எனவும்,

"[598]அடல்மான்போல் நோக்குடையாய் நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியும் ஆமென்று தாம்" (யாப். வி. 51 மேற்.)

எனவும் கொள்க.

இனி முறைநிரல்நிறை, மயக்கநிரல்நிறை, எதிர்நிரல்நிறை, எழுத்துநிரல்நிறை, நிறையெண்நிரல்நிறை, குறையெண் நிரல்நிறை, மிகையெண் நிரல்நிறை, ஒருமுதல்நிரல்நிறை, இருமுதல்நிரல்நிறை, [599] உற்றுணர்நிரல்நிறை என வேண்டு வாரும் உளர். அவற்றுள் சிலவருமாறு:

"முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு" (குறள். 1113)

இது முறைநிரல்நிறை.

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்" (குறள். 849)

எனவும்,

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்" (குறள். 410)

எனவும் இவை எதிர்நிரல்நிறை.

அடிநிரல்நிறை வருமாறு:

"கூற்றுவனை மன்மதனை அரக்கர் கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை இஞ்சி மூன்றை

---

உரை.பா.வே: 595. தாதுசேர்- (த) 596. தார்மார்பா - (த) 597. போர்ச்செழியா-(த)
598. அடல்வேல் அமர்நோக்கி - யாப்.வி. 51 மேற். 599. உய்த்துணர் நிரல்நிறை

ஏற்றுலகின் விளவுருவ மாளத் தோள்கள்
இறவெறிப்ப இமைப்பேண வெருவ வேவ
காற்றொழிலால் நயனத்தால் விரலால் கற்றைக்
கதிமுடியால் கரதலத்தால் கணையால் பின்னும்
ஊற்றழிய உதைத்துருத்து நெறித்துச் சூடி
உரித்தெரித்தான் அவனெம்மை உடைய கோவே"
(யாப். கா. 58 மேற்.)

எனவும் கொள்க.

மற்றும் வருவன கண்டுகொள்க.

"சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை" (யாப். வி. 59 மேற்.)

இதனுள் 'சுரை' என நின்று 'மிதப்ப' என்றும், 'அம்மி' என நின்று 'ஆழ' என்றும், 'யானை' என நின்று 'நிலை' என்றும், 'முயல்' என நின்று 'நீத்து' என்றும் பொருள் கொண்டமையால் சுண்ண மொழிமாற்று.

அடிமொழிமாற்று வருமாறு:

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலின் நெடிய குரங்கு" (யாப். வி. 95 மேற்.)

இது 'ஆலத்து மேல வாலின் நெடியகுரங்கு' என்றும், 'குளத்துள குவளை' என்றும் இரண்டடி மொழிமாற்றிப்பொருள் கொண்டமையால் அடிமொழிமாற்று.

அடிமறிமொழிமாற்று வருமாறு:

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் எனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே" (யாப். வி. 73 மேற்.)

இது வேண்டிற்று ஒரடி முதலாகப் பொருள் கொண்டமையால் அடிமறிமொழிமாற்று.

பூட்டுவிற் பொருள்கோள் வருமாறு:

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்து படிற்பெரிதாம் ஏதம்-உறந்தையர்கோன்
தண்ணார மார்பில் தமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்.)

'திறந்திடுமின்' என்பது 'கதவு' என்பதனுடன் நோக்குடைமையிற் பூட்டுவிற் பொருள்கோளாயிற்று.

புனல்யாற்றுப் பொருள்கோள் வருமாறு:

"அலைப்பான்[600] பிறிதுயிரை ஆக்கலும் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைவதூஉம் குற்றம்
சொலற்பால அல்லாத சொல்லலும் குற்றம்
கொலைப்பாலும் குற்றமே ஆம்" (நான்மணி. 26)

இஃது அடிதோறும் பொருளற்று வந்தமையால் புனல்யாற்றுப் பொருள்கோளாயிற்று.

அளைமறிபாப்புப் பொருள்கோள் வருமாறு:

"தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
[601]நாற்கதியிற் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே[602] வானெய்தி
நெறிமுன்னி முயலா தாரே" (யாப். வி. 95 மேற்.)

இது 'வாழ்ந்த பொழு' தென்னும் அடி முதலும் இடையும் சென்று பொருள் கொண்டமையால் அளைமறிபாப்புப் பொருள்கோளாயிற்று.

தாப்பிசைப் பொருள்கோள் வருமாறு:

"உண்ணாமை உள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு" (குறள். 255)

---

உரை.பா.வே: 600. பிறவுயிரை - நான்மணி. 26 601. நாற்கதிக்கட் - யாப்.வி. 95 மேற்; 602. வானெய்தும் - யாப்.வி. 95 மேற்;

இதனுள் நடுவுநின்ற 'ஊன்' என்னும் சொல் முன்னும் பின்னும் நின்ற சொல்லோடு தாப்பிசைப்பொருள் கொண்டமையால் தாப்பிசைப் பொருள்கோளாயிற்று.

கொண்டுகூட்டுப் பொருள்கோள் வருமாறு:

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்" (யாப்.வி. 75 மேற்.)

இதனுள் 'தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனிப் பசலை' எனவும், 'அஞ்சனத்தன்ன பைங்கூந்தல்' எனவும் சொற்களைக் கொண்டுகூட்டிப் பொருள்கொண்டமையால் கொண்டுகூட்டுப் பொருள்கோளாயிற்று.

"ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேல் தண்ணுமை-காரி
விறன்முள்ளூர் [603]வேங்கைவீ தார்நாணும் தோளான்
நிறமுள்ள துள்ள தலர்" (யாப். வி. 95 மேற்.)

இதுவும் கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

எழுத்தல் ஓசையான் வரும் குறிப்பிசை வருமாறு:

"மன்றலங் கொன்றை [604]மலர்வேய்ந்து [605].....
என்று [606]திரியும் இடைமகனே- [607]நின்று
மறியாட்டை உண்ணாமை [608]வன்கையாய் வல்லே
அறியாயோ அண்ணாக்கு மாறு" (யாப். வி. 95 மேற்.)

எழுத்தல் ஓசை வந்தவாறு. (56)

---

உரை.பா.வே: 603. வேங்கை வெதிர்நாணும் தோளாய்- யாப்.வி. 95 மேற்;

604. மலர்மிலைந்து - யாப்.வி. 95 மேற்;

605. துஃவஃகு - யாப்.வி. 95 மேற்;

606. பயிரும் - யாப்.வி. 95 மேற்;

607. சென்று - யாப்.வி. 95 மேற்;

608. வன்கையால் - யாப்.வி. 95 மேற்;

## ஒப்பு

௫௰ எ. அசைசீர் தளையோ[609] டடிதொடையும் பாவும்
இசைசேர் இனமும் இயற்கைக் - கிசையாது
மிக்கும் குறைந்தும் மெலிந்தாலும் [610]முன்னதுவென்
றொக்கும் படிசெய்தல் ஒப்பு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் ஒப்பென்பதற்கு இலக்கணம் உணர்த்திற்று.

அசையும் சீரும் (தளையும்) அடியும் தொடையும் பாவும் பாவினமும் முன்சொன்ன இலக்கணத்தில் திரிந்தும் பிறழ்ந்தும் மிக்கும் குறைந்தும் வந்தாலும் அவற்றை முன்னோர் புகன்றதென்று ஒருபுடை ஒப்புமை நோக்கி ஒழிந்த செய்யுள் தன்பாற்படுத்தி வழங்கப்படும் என்றவாறு.

வரலாறு:

"கோழியும் கூவின குக்கில்[611] குரல்கேட்டுத்
தாழியுள் நீலத் தடங்கணீர்! போதுமினோ
ஆழிசூழ் வையத் தறிவன்[612] அடியேத்தக்
கூழை நனையக்[613] குடைந்து குளிர்புனல்
ஊழியும்[614] ஆடுவாம் என்றேலோர் எம்பாவாய்"
(யாப்.வி.93 மேற்.)

நாற்சீர் நாலடியாய் வருவது கலிவிருத்தம் என்று வரையறுத்துச் சொன்னார். இஃது ஐந்தடியாய் வந்ததாயினும் ஒருபுடை ஒப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படும். இது தரவு கொச்சகத்தின்பாற் சார்த்தி வழங்கினும் இழுக்காது.

[615] "சுற்றுநீர்க் கிடங்கின்
பொற்றாமரைப் பூம்படப்பைத்
தெண்ணீர்

---

பா.வே: 609. டடிதொடை - (த) 610. முள்ளதுவென் - (உ)

உரை.பா.வே: 611. அழைத்தன - யாப்.வி. 93 மேற்; 612. அடியேத்திக் - யாப்.வி. 93 மேற்;
613. குடைந்தும் - யாப்.வி. 93 மேற்;
614. மன்னுவாம் - யாப்.வி. 93 மேற்;
615. சுற்றும்நீர்க் - யாப்.வி. 93 மேற்;

நல்வய லூரன் கேண்மை
அல்லிருங்[616] கூந்தல் அலரா னாதே" (யாப். வி. 93 மேற்.)

வஞ்சிப்பாவிற்கு மூன்றடி சிறுமை என்றார்; இஃது இரண்டடியால் வந்ததாயினும் ஒருபுடை ஒப்புமைநோக்கி வஞ்சிப்பாவின் பாற்படுத்தி வழங்கப்படும்.

ஆசிரியப்பாவிற்கு மூன்றடி சிறுமை என்றாராயினும், கலிக்கும் வஞ்சிக்கும் சுரிதகமாக இறுதிக்கண் இரண்டடியான் வந்ததாயினும் ஆசிரியச் சுரிதகம் என்றும் வழங்கப்படும். அதற்கு உதாரணம் மேற்காட்டின கலியுள்ளும் வஞ்சியுள்ளும் கண்டுகொள்க.

பிறவும் மகாபுராண கவிஞரால் பாடப்பட்ட இலக்கியங்கள் மிக்கும் குறைந்தும் திரிந்தும் வரினும் இவ்விலக்கணத்தால் ஒருபுடை பெயரிட்டு வழங்கப்படும்.

'ஒக்கும்படி' என்ற விகற்பத்தினால் வண்ணமும், புனைந்துரையும், அடியின்றி நடப்பனவும், ஓரடியால் நடப்பனவும், நூலும், பாட்டும், உரையும், வாழ்த்தும், மந்திரமும், முதுசொல்லும் ஆமாறு உரைத்துக் கொள்க.

அவற்றுள் நூறு வண்ணமாவன:

தூங்கேந்[617] தடுக்கல் பிரிதல் மயங்கிசை வைத்துப்பின்னும்
ஆங்கே அகவல் ஒழுகல் வலிமெலிப் பாற்படுத்திப்
பாங்கே குறினெடில் வல்லிசை மெல்லிசை யோடிடையும்
தாங்கா துறழ்தரத் தான்வண்ணம் நூறும் தலைப்படுமே"
(யாப்.வி.95 மேற்.)

இதனுள் முதலும் இடையும் கடையும் பெருக்கி வண்ணம் நூறும் கண்டுகொள்க.

இனிப் புனைந்துரை இரண்டு வகைப்படும்; பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதலும் என. என்னை?

"உரைக்கப் படுபொருட்[618] கொத்தவை எல்லாம்
புகழ்ச்சியின்[619] மிக்குப் புனைந்துரை ஆகும்"
(யாப். வி. 95 மேற்.)

என்றாராகலின்.

உரை.பா.வே: 616. கூந்தற்கு - யாப்.வி. 93 மேற்; 617. தடுக்கு - யாப்.வி. 95 மேற்; 618. கொத்தன - யாப்.வி. 95 மேற். 619. மிக்கப் - யாப்.வி. 95 மேற்.

பெரியதனைச் சுருக்கிச் சொல்லுமாறு:

"அடையார்பூங்[620]கோதையார்க் கல்குலும் தோன்றும்
புடையார் வனமுலையும் தோன்றும்-இடையாதும்
கண்டுகொளா தாயினும் காரிகை நீர்மையாட்
[621]குண்டாக வேண்டும் நுசுப்பு" (யாப்.வி.95 மேற்.)

இது பெரியதனைச் சுருக்கிற்று.

"அவாப்போல் அகன்றதன் அல்குல்மேல் சான்றோர்
உசாப்போல் உண்டே மருங்குல்-[622] உசாத்துணைப்
பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகினவே
கோதைக்கொம் பன்னாள் குயம்" (இலக்.வி. 758 மேற்.)

'சான்றோர் உசாப்போல் உண்டே மருங்குல்' என்பது பெரியதனைச் சுருக்கிற்று; அல்லாதன சிறியவற்றைப் பெருக்கினவாறு.

"[623]தலைக்கண்ணார் நின்றிட்ட[624]பூசல் கடைக்கண்ணார்
[625]கேளாமை போந்தகன்ற கண்" (யாப். வி. 95 மேற்.)

"பொன்மலி கூடல் பூமலி கச்சி
மணியணி மாடம்" (யாப். வி. 95 மேற்.)

என்பனவும் கொள்க.

இனி அடியின்றி நடப்பனவும், ஓரடியான் நடப்பனவும், பாட்டும், உரையும், நூலும், மந்திரமும், பிசியும், முதுசொல்லும், அங்கதமும், வாழ்த்தும் என இவை முதலாகவுடையன ஓரடியானும் பலவடியானும் வரப்பெறும்; என்னை?

"உரையும் நூலும் அடியின்றி நடப்பினும்
வரைவில என்ப[627]வாய்மொழிப் புலவர்"(யாப் வி.95
மேற்., நற்றத்.)

என்றாராகலின், இஃதெல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி நூலாவது முதனூல், வழிநூல், சார்புநூல் என இவை; இதன் விரிவெல்லா[illegible]ரையிற் கண்டுகொள்க. (57)

---

உரை.பா.வே: 620. கோதையாட், 621. குண்டாகல் - யாப்.வி. 95 மேற்.
622. உசாவினைப் - இலக்.வி. 758.
623. கலைக்கணார், 624. கடைக்கணார், 625. கேளாமே,
626. மாரி ஈகை மணியணி மாடம், 627. வயங்கி யோரே யாப்.வி. 95 மேற்.

ருய அ. வழுவேழு[628] குற்ற வகையாறும் பாவில்
தழுவாமல் நன்மைபல சார்ந்து - விழுமியதோர்
சொற்பொருள்க டோன்றச் சுரக்கும் அறிவெய்தப்
பொற்புடையோர் போற்றும் பொலிவு

என்பது, இவ்விலக்கணம் என்னுதலிற்றோவெனின் வழுவும் குற்றமும் எய்தாமல் வரும் பாவிலக்கணம் உணர்த்திற்று.

வழுவாவ்து திணைவழுவும், (பால்வழுவும்), மரபுவழுவும், வினாவழுவும், செப்புவழுவும், காலவழுவும், இடவழுவும் என்றோதப்பட்ட ஏழு வழுவும் படாமை புணர்க்கப்படும் எனக்கொள்க.

என்னை?

"திணைபால் மரபு வினாச்செப்புக் காலம்
இடனொடு ஏழாய் வரும்வழு வென்ப"

அவற்றுள் திணைவழுவாவது உயர்திணையை அஃறிணை யாகவும் அஃறிணையை உயர்திணையாகவும் புணர்ப்பது.

வரலாறு:

தேவன் வந்தது. எருது வந்தான் எனக்கொள்க.

பால்வழுவாவது ஆண்பாலைப் பெண்பாலாகவும், பெண்பாலை ஆண் பாலாகவும் ஒருமைப்பாலைப் பன்மைப்பாலாகவும் பன்மைப்பாலை ஒருமைப்பாலாகவும் புணர்ப்பது.

வரலாறு:

சாத்தன் வந்தாள்; கொற்றிவந்தான்; வேடன்
வந்தார்; வேடர் வந்தான்; மக்கள் வந்தான்;
அதுவந்தன; அவை வந்தது எனக்கொள்க.

மரபுவழுவாவது எருமை இலண்டம், குதிரைச்[629] சாணகம் எனக்கொள்க.

ரு யஅ. பா.வே. 628. குற்றம் -(உ)

உரை.பா.வ: 629. சாணம் - (பே)

வினாவழுவாவது, ‘கறக்கின்ற எருமை[630] சினையோ பாலோ’ என்பது.

செப்புவழுவாவது, ‘கடம்பூர்க்கு வழியாதோ’ என்றால், ‘இடம்பூணி யெருது என் ஆவின் கன்று’ என்றாற்போலச் சொல்லொன்று வினவ ஒன்றுரைப்பது.

காலவழுவாவது இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் என மூன்று காலமும் வழுவச் சொல்வது.

அறவன் நாளையுண்டான்; நெருநல் உண்ணும் என்றாற் போலச் சொல்வது.

இடவழுவாவது தன்மை முன்னிலை படர்க்கை எனும் மூன்றிடமும் மயங்கச் சொல்வது.

யான்வந்தாய்; நீ வந்தேன்; அவன்வந்தாய் என்றாற்போலச் சொல்வது.

எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக் குற்றம், அலங்காரக்குற்றம், ஆனந்தக்குற்றம் என்னும் ஆறுகுற்றமும் படாமல் புணர்ப்பது.

அவற்றுள், எழுத்துக்குற்றமாவது எழுத்ததிகாரத்தோடு மாறு கொள்வது.

அவை,

“வெறிகமழ் தண்சிலம்பின் வேட்டமே யன்றிப்
பிறிதும் கொடையுடையான் போலும் - [631]செறிதொடி
தேமான்[632] இதணத்தே மாக நம்புனத்து
[633]வாமான்பின் வந்த மகன்” (யாப். வி. 95 மேற்.)

இதுனுள் தேமா எனற்பாலதனைத் ‘தேமான்’ என்று னகர ஒற்றுக் கொடுத்தமையால் எழுத்துக்குற்றம்.

---

உரை.பா.வே: 630. பாலோ சினையோ - (பே)

631. செறிதொடீஇ - யாப்.வி. 95 மேற்.

632. இதணத்தான் நாமாக நம் புனத்தே - யாப்.வி. 95 மேற்.

633. மாமான்பின் - யாப்.வி. 95 மேற்.

சொற்குற்றமாவது சொல்லதிகாரத்தோடு மாறு கொள்வது.

"இசையெல்லாம் [634]கொட்ட எழிற்றானை ஊர்ந்து
வசையில்லா மன்னர்வந் தேத்த-[635] மிசையும்
அடிசில் பருகி அணியார்த்துப் போந்தான்
கொடிமதில்[636] கூடலார் கோ" (யாப்.வி. 95 மேற்.)

'இசையெல்லாம் ஆர்ப்ப' எனவும், 'எழிற்றானை நாப்பண்' எனவும்,'அடிசில் அயின்று' எனவும், 'அணி அணிந்து' எனவும் இவ்வாறு பொதுவினால் ஓதற் பாலனவற்றைப் பொதுவினால் எடுத்துக்கொண்டு சிறப்பினால் ஒன்றற்குரிய சொற்புணர்த் தமையால் சொற்குற்றமாயிற்று.

பொருட்குற்றமாவது பொருளதிகாரத்தோடு மாறு கொள்வது.

"முன்னும் தொழத்தோன்றி முள்ளெயிற்றாய்! அத்திசையே
இன்னும் தொழத்தோன்றிற் றிதேகாண்-மன்னும்
பொருகளிமால் யானை[637] புகழ்க்கிள்ளிப் பூண்போல்
பெருகொளியால் மிக்க பறை" (யாப். வி. 95 மேற்.)

இது நாண நாட்டம்.

"பண்டிப் புனத்துப் பகலிடைத் தேளலுட்
கண்டிக் களிற்றை அறிவன்மற்-[638]றிண்டோள்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய்!
உதிரம் உடைத்திதன் கோடு" (யாப். வி. 95 மேற்.)

இது நடுங்க நாட்டம்.

இவை இரண்டும் பொருளதிகாரத்தோடு மாறுகொண்டன.

"வாளை மேய்ந்த வளைகோட்டுக் குதிரை
[639]கோழிலைய வாழை கொழுமடல் உறங்கும்
ஊரன் செய்த கேண்மை
தேரை[640]வாயினும் பெரியதா கின்றே" (யாப். வி. 95 மேற்.)

---

உரை.பா.வே: 634. கோட - (த) (பே) 635. இசையும் - யாப்.வி. 95 மேற்.
636. கோழியார் - யாப்.வி.95 மேற்.
637. புகார்க்கிள்ளி - 638. திண்டிக் - யாப்.வி. 95 மேற்.
639. கோழிலை - யாப்.வி. 95 மேற்.
640. வாலினும் பெரிதாகின்றே - யாப்.வி. 95 மேற்.

இவை பொருள் தீர்த்தமையால் பொருட்குற்றம். இதனைப் பிரிமொழித் தொடர் மொழி என்னும் அலங்காரக்குற்றம் என்பாரும் உளர்.

யாப்புக்குற்றமாவது யாப்பதிகாரத்தோடு மாறுகொள்வது.

"கானக நாடன்[641] கடுங்கோன் பெருமலைமேல்
ஆனை[642] கிடந்தன போலாய பெருங்கற்கள்
தாமே கிடந்தன கொல்லோ[643] அவற்றையிப்
பெற்றி[644] ஏற்றியிறங்க வைத்தாரும் உளர்கொல்லோ"
(யாப்.வி. 95 மேற்)

இது முதலெழுத்துக் கொண்ட ஓசையிற்கெட்டுப் பின் பாவினது இலக்கணங் கெட்டு உரையால் வந்தமையான் யாப்புக்குற்றம்.

ஆனந்தக் குற்றத்துட் சில வருமாறு:

"ஆழி இழைப்பப்[645] பகல்போல் இரவெல்லாம்
தோழி துணையாத்[646] துயர்தீர்ந்தேன்-[647] நாழி
நாறுமலைத் தாராய் திரையவோஒ[648] என்ப
செறுமாலை[649] சென்றணைந்த போது" (யாப்.வி. 4 மேற்.)

இதனுள் 'திரையவோஒ' என இயற்பெயர் ஓகாரத்தில் அளபெழுந்தமையான் எழுத்தானந்தம்.

"என்னில் பொலிந்த திவண்முகம் என்றெண்ணித்
தன்னில் குறைபடுப்பான் தண்மதியம்-[650] மின்னின்
விரிந்திலங்கு[651] வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசையன்
எரிந்திலங்கு வேலின் எழும்" (யாப்.வி. 96 மேற்.)

இதனுள் 'விசையன்' என்னும் பாட்டுடைத் தலைவன்மேல் 'எரிந்து' என்று சொற்புணர்த்தமையால் சொல்லானந்தம்.

---

உரை.பா.வே: 641. கருங்கோன் - யாப்.வி. 95 மேற். 642. கூந்தாற் - யாப்.வி. 95 மேற்.
643. அவையேற்றிப் - 644. பிறக்கிவைத்தார் - யாப்.வி. 95 மேற்.
645. பகல்போம் இரவரின் - 646. துயர்தீரும் - யாப்.வி. 4 மேற்.
647. வாழ் - 648. என்னும் - யாப்.வி. 4 மேற்.
649. சென்றடையும் போழ்து - யாப்.வி. 4 மேற்.
650. மின்னி - யாப்.வி. 96 மேற்.
651. வெண்குடைச் - யாப்.வி. 96 மேற்.

"இந்திரனே போலும் இளஞ்சாத்தான்; சாத்தற்கு
மந்தரமே[652] போன்றுளது மல்லாகம்-[653] மந்தரத்தின்
தாழருவி போன்றுளது தார்மாலை; அம்மாலை
ஏழுலகும்[654] நாறும் இணர்" (யாப். வி. 96 மேற்.)

இதனுள், 'இளஞ்சாத்தன்' எனும் கீழ்மகனை அரசனை உவமிக்குமாறு போல இளஞ்சாத்தற்குப் பரிக்கலாகா வகையினுயர்த்திச் சொன்னமையால் ஆனந்தவுவமை என்னும் அலங்காரக்குற்றமாயிற்று.

"வெண்டிங்கள் போன்றிலங்கும்[655] வெண்சங்கம் விண்டனைய
[656]வண்டியங்கு தாழை[657] வளர்கோடு-[658] கொண்டெங்கும்
கள்ளாவி நாறும் கருங்கழிசூழ் கானத்தெம்
முள்ளாவி வாட்டும் உரு" (யாப். கா. 59 மேற்.)

இதனுள் 'வெண்டிங்கள் போலும் சங்கு' என்றும், 'சங்கம் போலும் தாழைப்பூ' என்றும் உவமைக்குஉவமை சொன்னமையால் 'அடுத்துவரல்' என்னும் அலங்காரக்குற்றமாயிற்று.

எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள் வருமாறு:

"தாமரை புரையும் காமர் சேவடி
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே" (குறுந். க. வா.)

எனக்கொள்க.

"ஊர்க்கு முயர்ச்சியொப் பாயிருப் பாருல காளுமன்னர்
ஆர்க்கும் வரிசை பெறமிகுப் பாரடைந் தோரையென்றும்
கார்க்கு மதுலன் கவிபால பாரதி கட்டுரையால்
பார்க்கும் இலக்கணச் சூடா மணியைப் படித்தவரே"

---

உரை.பா.வே: 652. போன்றிலங்கும் மல்லாகும் - யாப்.வி. 96 மேற்.
653. மந்தரத்து - 654. இனிது - யாப்.வி. 96 மேற்.
655. வெண்சங்கு சங்கனைய - யாப்.கா. 59 மேற்.
656. வண்டிலங்கு - யாப்.கா, 59 மேற்.
657. வளர்தோடு - 658. விண்டெங்கும் - யாப்.கா. 59 மேற்.

ஹரி ஓம்

சுபமஸ்து அவிக்ந மஸ்து

துந்துபி வருடம் தை மாதம் 19 சுக்கிரவார நாள் அனுட்டமி ஐந்தரை நாழிகைக்கு ரேவதி நட்சத்திரம் சுகர்மநாம யோகம் 14க்கு வச்சிரநாம யோகம் மூன்றே கால்.

இலக்கணச் சூடாமணி முற்றும்.

இஃது இலக்கணச் சூடாமணி முதனிலணைப்பு

இலக்கணசூ டாமணிவெண் பாவிதயத் திருத்தும்
இலங்குமுதல் நினைப்பும்[1] மலை மாதுகாப் பாகும்
நிலைத்த[2] குறில் நெடிலும்[3] நெடி லும்குறிலும்[4] நேர்நேர்
நிரையாம்[5] ஈ ரசையி[6] னிரு சீர்குறளின் மீதில்
சொலுக்குமுன்[7] அகரமோ டாகாரம் ஆகும்
சொல்[8] மோனை எதுகை[9] முதல் இறுதி[10] யிணைபொழிப்பு
அலைக்கழியா[11] தந்தமுத லா[12] நாற்சீ ரடியும்
[13] அடுத்துமிடை யும்[14] வெண்பா இரண்டுமெழுத் தியலே (1)

இயலு[15] மொரு சீரடிமேல்[16] மூவசைச்சீர் ஆகும்
என்னும்[17] நாற் சீர்முச்சீர்[18] சிந்தியல்வெண் பாவாம்
உயரும்[19] நே ரொன்றிநேர்[20] முச்சீர்மேல் நாற்சீர்
உண்மை[21] யெல் லாம்[22] கலித் தளையாம்[23] தரவொன்றும்
மயலி[24] ருமூன் றடித்தரவும்[25] ஆதியுறுப் பிரண்டும்
பண்பும்[26] தன் றளையும்வெண்[27] தரவும்தர வினையும்
செய்[28] தரவு முதலாறும்[29] ஒன்றி[30] புற நிலையும்
[31] சீர்பலவாய்[32] ஈரடிநாற் சீராகி யென்றே (2)

என்று[33] மடி தோறுமீர்[34] மூன்றடியோர் பொருளாம்
[35] ஈற்றினயல்[36] நெடிலமுதலொவ்[37] வடியளவில் லாவாம்
இன்று[38] பதி னாறு[39] பொலி விருசீரடி நான்காய்
இலங்கு[41] தனிச் சொல்லடி[42] மூ வசைச்சீரின் முறையால்
நன்று[43] நான் மூன்[44] றெட்டுக் கலையாம்[45] வல் லினத்தின்
நன்மையாம்[46] கருத்துரைத்துத்[47] தரவுக்குமுன் றென்ப
அன்றியு..... ....[48] தரவு மளவடி[49] யீரிரண்டு
ஆறு[50] நிரை முதலூய்க்[51] குற் றுகரம்[52] வெண்சீரே (3)

சீர்முதலாம் இயற்றளையும் [53]ஆசிரியப் பா[54]வெஞ்
சீரடியு மென்றறிகு வாய்[55]கடையே இணையே
பேர்பெறவே [56]முதலொருசீர் கூனாயென் றாறும்
பின்ன[57]சைசீர் தளையோடடி தொடை[58]வழுவேழ் குற்றம்
பார்மிசையின் இருபத்தொன் பானிரட்டி வெண்பாப்
பகர்ந்தவன்பேர் கலித்துறையொன் றேயூர்க்கு முயர்ச்சி
ஏர்பெறுமந் தாதியாம் ஈரிரண்டு விருத்தம்
இணைமுலையாய் இலக்கியத்தின் முத்துக்கிலக் கணமே. (4)

## குறிப்புரை

**1.** மலைமாது-பார்வதி, 'மலைமாதொரு பாகா' (திருவா.23, 10); மலர்மாது-இலக்குமி, 'கலை மகள் மலர்மாது. . .எழுமாதர்களை' (காஞ்சிப். தழுவக். 45); கலைமாது-சரசுவதி, 'மகிழ்கூர்ந்திருந்த கலைமாது' (சொர்ண.அம்.பிள். 1, 7).

சாரம்-பிழிவு, தேர்ந்தவை; இலக்கணச்சூடாமணி என்பது நூற்பெயர். இலக்கண நூல்கள் பலவற்றின் பிழிவையெல்லாம் இலக்கணச்சூடாமணி எனும் இந்நூல்வழிக் கூறுகிறேன் என்றவாறு.

இலக்கணம் என்பது பொதுப்பெயராயினும் நூல்நுவல் பொருள் சிறப்புக்கருதி ஈண்டு யாப்பிலக்கணத்தையே குறித்தது.

ஈது-இது என்னும் உகர ஈற்றுச் சுட்டுப்பெயர் நீண்டது. 'இது என்னும் சுட்டு முதல் உகர ஈறாதலின் அது செய்யுளகத்துப் புறநடையான் முடியும்' என்றார் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து.238); 'இது என்னும் சுட்டு முதல் உகரவீற்றுப் பெயரின் இகரம் நீடலும் கொள்க' (இலக்.வி. 80) என்பதையும் நோக்குக.

2. ஆவி -உயிரெழுத்து; குறித்த-நோக்கிய; 'குறித்த மெய்' என்றது உயிரெழுத்துகளை நோக்கிய மெய்யெழுத்துகள் என்றவாறு; "கொண்ட கொழுநர்-தம்மை நெஞ்சினுட் கொண்ட கொழுநர்" (சிலப். 2, 19, 52 அடியார்க்.) என்றாற்போலக் கொள்க. நேர்ந்த-பொருந்திய; ஏர்-அழகு; எழுத்து-எழுவகைப்பட்ட எழுத்துகள். குறில் முதலாக அளபெடை ஈறாகக் கூறப்பட்ட எழுவகை எழுத்துகளும் நேரசை, நிரையசை என்னும் இருவகை அசைகளுக்கும் உறுப்பாக நிற்கும் என்றவாறு. இயலசைகளாதலின் நேரசை நிரையசை முற்கூறப்பட்டன.

குற்றெழுத்து நெட்டெழுத்து போன்றவற்றிற்குரிய நூற்பாக்கள் நூற்பெயர் விளங்காதன.

இகல்-வேறுபாடு; குற்றெழுத்து நெட்டெழுத்திற்குரிய ஒலியளவு வேறுபாட்டைக் குறித்தது.

உயிரளபெடையாவது,

"இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே" (நன். 91)

ஒற்றளபெடையாவது,

"ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே" (நன். 92)

3. பங்கு-கூறு; 'பங்காய் நடைபெறினும்' என்றது மேற்சொல்லப்பட்ட நான்கும் தனித்தனியே ஒற்றெழுத்துப் பெறாமல் நடைபெற்றாலும் என்றவாறு.

கற்றவர்கள் - யாப்பிலக்கணம் அறிந்தவர்கள்; கனிந்து-முதிர்ந்து; 'கற்றவர்கள் கனிந்து சொன்னார்' என்று முடிக்க.

4. சேர - பொருந்த; பொதுவாய் — பொதுச் சீர்களாய்; இவ்வெண்பாவின் ஈற்றடியின் இறுதிச்சீர் ஈரசைச்சீராகவுள்ளது. வெண்பாவின் ஈற்றுச்சீர் ஈரசைச்சீராகவும் வரும் என்னும் இலக்கணமின்மையால் இது பிழைபடவுள்ளது என்றே கொள்ளவேண்டும். இரண்டு சுவடிகளிலும் இந் நிலையிலேயே அமைந்துள்ளதால் அவ்வண்ணமே தரப்பெற்றுள்ளது. 'நேர்நிரைசே ரப்பொதுவா கும்' என்றோ, 'நேர்நிரைசே ரப்பொதுவாய் நேர்' என்றோ கொண்டால் இலக்கணச்சீர்மை எய்தும். இதுபோன்றே நூற்பா 10, 26 ஆகியவையும் அமைந்துள்ளமை நோக்குக.

பொதுச்சீர்கள் பதினாறாவன:

| | | |
|---|---|---|
| நேர்நேர்நேர்நேர் | - | தேமாந்தண்பூ |
| நிரைநேர்நேர்நேர் | - | புளிமாந்தண்பூ |
| நிரைநிரைநேர்நேர் | - | கருவிளந்தண்பூ |
| நேர்நிரைநேர்நேர் | - | கூவிளந்தண்பூ |
| நேர்நேர்நிரைநேர் | - | தேமாநறும்பூ |
| நிரைநேர்நிரைநேர் | - | புளிமாநறும்பூ |

| | | |
|---|---|---|
| நிரைநிரைநிரைநேர் | - | கருவிளநறும்பூ |
| நேர்நிரைநிரைநேர் | - | கூவிளநறும்பூ |
| நேர்நேர்நேர்நிரை | - | தேமாந்தண்ணிழல் |
| நிரைநேர்நேர்நிரை | - | புளிமாந்தண்ணிழல் |
| நிரைநிரைநேர்நிரை | - | கருவிளந்தண்ணிழல் |
| நேர்நிரைநேர்நிரை | - | கூவிளந்தண்ணிழல் |
| நேர்நேர்நிரைநிரை | - | தேமாநறுநிழல் |
| நிரைநேர்நிரைநிரை | - | புளிமாநறுநிழல் |
| நிரைநிரைநிரைநிரை | - | கருவிளநறுநிழல் |
| நேர்நிரைநிரைநிரை | - | கூவிளநறுநிழல் |

வெண்பாவுரிச்சீர் நான்கு:

தேமாங்காய்–பொன்னார
புளிமாங்காய்–மனனோடு
கருவிளங்காய்–புனைகழற்காற்
கூவிளங்காய்–றூழுலக்கை

வஞ்சியுரிச்சீர் நான்கு:

தேமாங்கனி–பூந்தாமரை
புளிமாங்கனி–வினைக்கம்பலை
கருவிளங்கனி–வளவயலிடை
கூவிளங்கனி–போதலம்வர

ஆசிரியவுரிச்சீர் நான்கு:

தேமா-குன்றக்
புளிமா-குறவன்
கருவிளம்-வரையர
கூவிளம்-சாயலள்

'இலர்' என்னும் நிரையசைச்சீர் 'மலர்' என்னும் வாய்பாடாகும்.

'நீர்' என்னும் நேரசைச்சீர் 'நாள்' என்னும் வாய்பாடாகும்.

5. நாலசை வஞ்சிப்பாவிடத்தில் வருதல் (இலக்.சூ.4). எண்ணிரண்டு நாலசை - நாலசைப் பொதுச்சீர்; ஏல் - காரணப்பொருட்டாய்வந்தது; சேர்ந்த - ஒன்றிய; ஈராசிரியம்-

நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத்தளை; ஏர் அழகு; மாறி - வேறுபட்டு.

6. நீடல்-மிகுதல். குடிலம்-வாய்ப்பாட்டுத் தொழில்களுள் உள் வாங்கிப்பாடும் முறை. காண்க:

"எடுத்தல்பாட் டுச்சமா மெண்படுத்தல் மந்தம்
தடுத்து நலிதல் சமமாம் -தொடுத்தியன்ற
தள்ளாத கம்பிதம் தானடுக்கற் குடிலம்
உள்வாங்கிப் பாட லுணர்" (சீவக.735 நச். மேற்.)

இதையே 'கிரியைகள் எட்டாவன: எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என இவை' அடியார்க்கு நல்லார் (சிலப். 1,3,26). பதினொன்று என்று பஞ்சமரபு கூறும் (நூ.43). இவற்றால் மிக்க சீர்களால் அமைந்த கழிநெடிலடி விருத்தங்கள் இசையோடு பாடுதற்குரியன என்பது பெறுதும். அறுசீர் எழுசீர்களால் வருவனவற்றை விருத்தமென்றும் பெயரிட்டது குறிப்பிடத்தக்கதாம்.

பேதம்-சந்தவேறுபாடு. அறுசீர்விருத்தத்துள் பத்தனுக்கு மேற்பட்ட சந்தவேறுபாடுகளுள்ளதால் அவற்றைக் கண்டு கொள்க என்றார். சான்றாக,

1) விளம் மா மா
விளம் மா மா
2) விளம் மா தேமா
விளம் மா தேமா
3) மா மா காய்
மா மா காய்
4) மா விளம் விளம்
விளம் விளம் காய்
5) காய் காய் காய்
காய் மா தேமா

இவை போல்வன பிறவும் அறிக.

'இடங்கை வெஞ்சிலை', 'கொங்குதங்கு' இவ்விரண்டு பாடல்களையும் எழுசீர்க்கழிநெடிலடியாகக் கொள்ளுதலே ஏற்புடைத்து என்பார் புலவர் குழந்தை (யாப்பதி.ப. 81).

7. இவ்வெண்பா யாப்.வி.53 இன் மேற்கோள் செய்யுளாகும். அனு-இனவெழுத்து; 'தானமொத்தகுறிலும் நெடிலும் தமமுள் இனமாம்' (யாப். கா.56 உரை).

8. கவி-செய்யுள்; அணி - அழகு; மோனை முதலியவற்றிற்கும் உம்மையைக் கூட்டுக. 'மோனையும் ... செந்தொடையும் கவிக்கணியதாய் தந்தார்' என முடிக்க.

9. அளபு -அடியளபெடைத்தொடை; சரன்-அடி;இரண்டாம் எழுத்து ஒன்றுவது மட்டும் எதுகையாகாது; ஏனையவும் ஒன்றுதல் வேண்டும்,

"முதலெழுத் தொன்றுவ மோனை எதுகை
முதலெழுத் தளவோ டொத்தது முதலா
அதுவொழித் தொன்றி னாகு மென்ப" (யாப்.வி.36 மேற்.)

'ஆஅ அளிய' இப்பாடலின் முதற்குறிப்புமட்டும் தரப்பட்டுள்ளது -(பே)

10. தொடைவிகற்பங்கள் ஏழாவன: இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று. இவற்றை ஐவகைத் தொடைகளோடும் உறழத் தொடைவிகற்பம் முப்பத்தைந்தாகும். துணை -இரண்டாம்சீர். 'முதற்சீர்' என ஒருசொல் வருவித்துக் கொள்க. இணை துணை என்றும் பொழிப்பு மூன்று என்றும் முறையே நிரல்நிறையாகக்கொள்க. 'ஊனமுற' என்பதை நான்கு இரண்டு மூன்று என்பவற்றோடு இயைத்துக் கூழை முதலானவற்றோடு ஒட்டிக்கொள்க.

இவ்வெண்பாவின் ஈற்றுச்சீர் 'ஒக்கும்' என ஈரசைச்சீராய் உள்ளது. காண்க: நூ.எ. 4,26.

இணையியைபு முதலான ஏழுதொடைகளாவன:

இணையியைபு, பொழிப்பியைபு, ஒரூஉவியைபு, கூழையியைபு, மேற்கதுவாயியைபு, கீழ்க்கதுவாயியைபு, முற்றியைபு.
இவைமுறையே 4,3; 4,2; 4,3,2; 4,2,1; 4,3,1; 4,3,2,1; எனக்கொள்க.

11. மிஞ்சு -இவை எஞ்சிய பிற நாற்சீரின் மேற்பட்ட செய்யுட்குரிய தொடைவிகற்பங்களை அடுத்த நூற்பாவில் கூறுகின்றார்.

12. மேற்சீரடிகள் -ஐஞ்சீர்க்கு மேற்பட்ட அடிகள்; நடு-இடைமோனை; வீறு-சிறப்பு; வாச்சது-வாய்ந்தது என்பதன் திரிந்த வடிவம், சிறந்தது; 'வாச்ச தனிச் சொலிடை வந்தெய்தி' (இலக்.சூ.17). துன்னும்-அடையும்; 'வழிமோனை துன்னும் எனச்சொல்' எனமுடிக்க.

கடைமோனையாவது அடிதோறும் கடைச்சீர்க்கண் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது; இடைமோனையாவது வாய்பாட்டிற்கேற்ப ஓசை மறித்து வரும் சீர்களில் மோனை வருவது. இடைவருதல்-மறித்து வருதல்.

| | |
|---|---|
| அறுசீர்க்கு | 1,4,இலும் 1,5,இலும் வரும் |
| எழுசீர்க்கு | 1,5,இல் வரும் |
| எண்சீர்க்கு | 1,5,இலும் 1,5,7,இலும் வரும். |

பதினொரு சீர்முதல் பதினாறுசீரளவும் வரும் வழிமோனையைப் பிள்ளைத்தமிழ் நூல்களுள் காணலாம்.

13. அடுத்தும்-தொடர்ந்தும்; வழி-வழிமோனை; 'செய்யுள் முழுதும் பயின்று வந்து சுவைமைப்படாதாகலின் வழி மோனை' (பேரா.தொல்.பொருள்.405). அவர், வழிமோனையை அனுமோனை என்பார். சொற்காரணமாகிய இன்பமாவது வழிமோனை முதலாயின வரத்தொடுப்பது' (தண்டி. பழைய. பொது. 19). வழிமோனை-ஒவ்வோரடியிலும் சீர்கள் இடையிட்டு மோனைத்தொடை கொண்டு வருவது (தண்டி. பொது. 19 குறிப்புரை).

'துனைவருநீர்'-இப்பாடல், பொருளினாற் சுவைபடத் தொடுத்தற்கு மேற்கோளாகும் (தண்டி).

'முன்னைத்தஞ்சிற்றில்' -இப்பாடல் சொல்லினாற் சுவைபடத்தொடுத்தற்கு மேற்கோளாகும் (தண்டி).

13 ஆம் நூற்பாவின் உரைமுடிந்தவுடன் 'முற்றும்' என்றும் 14 ஆம் நூற்பாவின் தொடக்கம் 'வெண்பா' என்றும் பெயரிடப்பட்டுள்ளது.

'என்னே பொழிப்பு' என்னும் இவ்வுதாரணச் சூத்திரக்காரிகை இவ்வுரையாசிரியரால் இயற்றப்பெற்றதாகும்.

14. சொல்லும்படிக்கு - சொல்லுதற்கு; அளவேது-அளவில்லை என்றவாறு; 'உள்ளத்தின் பண்பே அளவு' என அளவை இங்கும் சேர்த்துப் பொருள் கொள்க.

வஞ்சிப்பாவிற்கு மூன்றடியே சிறுமையென யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை போன்ற நூல்கள் கூறவும் இந்நூல் இரண்டடி சிறுமையென இலக்கணம் வகுத்துள்ளது.

'வஞ்சிப்பா இரண்டடியானும் வரும்' என உம்மையை இரண்டடியின் மேல் வைத்துக் கூறினார் இலக்கண விளக்க ஆசிரியர் (நூ.746 உரை).

15. சதுக்கம்-ஒரு பாவகை, சதுஷ்கா என்னும் வடமொழிச் சொல்லின் திரிபு; நான்கு கூடியது என்று பொருள். ஒருசீரடியான் தனித்து வருகிற இப்பாவகை தமிழ் யாப்பு நெறியில் இல்லை.

சீர் என்பதை வெள்ளைக்கும் கூட்டுக.
அறிஞர்-யாப்பிலக்கண நூல்வல்லார்; ஊரறிய-ஊரிலுள்ளோர் உணரும்படி; ஊர் என்பது யாவரும் என எஞ்சாப்பொருட்டாய் வந்தது. உகந்து-விரும்பி, 'அறிஞர் உகந்து ஊரறியச் சொன்னார்' என்று முடிக்க.
'இருசீர் குறளடி' (இலக்.சூ.6) என்பது அடிகளுக்குச் சீர்வரையறை கூறியது; இந்நூற்பா, பாக்களுக்குச் சீர்வரையறை கூறியதாம்.

16. 'இறும் முச்சீரில்' என்பதனுள் 'இறும்' என்பதை பெயரெச்சமாகவும், 'அசைச்சீர் இறும்' என்பதனுள் 'இறும்' என்பதை முற்றாகவும் கொள்க.

'அதன் ஈறும் உவ்விறுதி மேவும்' என மொழிமாற்றிப்பொருள் கொள்க.

செப்பலொலி - செப்பலோசை; குலம் - இனம், வகை; 'வெண்பாக்குலம்' என்பதை எழுவாயாகக்கொண்டு முற்றி.... இறும்.....மேவும் என வினை முடிவுகளைக் கொள்க. பிற பாக்களுக்குரிய ஓசை இலக்கணங்களை அவ்வப் பாவிலக்கணத்தில் கூறியுள்ளார்.

வாச்ச-வாய்த்த; எதுகைக்கேற்ப வழக்குச்சொல் பெற்றது; வல்லின எதுகை. ஓச்சம்-சிறப்பு.

'தானாறும்' என்பதில் 'னா' என்பது ஓராசு; 'றும்' என்பது ஓராசு.

18. நந்தல்-கெடுதல்; சந்தம்-ஓசை; ஈண்டுச் செப்பலோசையைக் குறித்தது. 'இது' என்பது வெண்பாவிற்குரிய இலக்கணத்தைக் குறித்தது. மெலிவு-குறைவு; ஏல்-காரணப் பொருட்டாய் நின்றது. சவலை-சவலைவெண்பா. மூன்று சுவடிகளிலும் பல இடங்களிலும் பசலை என்றே குறிக்கப்பெற்றுள்ளது.

'நந்தலிலா' என்ற மிகைத் தொடருக்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தை அடியொற்றியே முத்துவீரிய ஆசிரியர் நூற்பா யாத்துள்ளார்.

"தனிச்சொல் இன்றி ஒருவிகற் பானும்
தனிச்சொல் இன்றி இருவிகற் பானும்
தனிச்சொல் இன்றிப் பலவிகற் பானும்
தனிச்சொல் பெற்றுப் பலவிகற் பானும்
தனிச்சொல் மூன்றாம் அடியில் தழுவி
இருவிகற் பானும் வருவதின் னிசையே" (முத்துவீ. 904)

அடிதோறும் தனிச்சொல் பெற்றுப் பலவிகற்பத்தான் வரும் இன்னிசை வெண்பாவை 'விதப்பினால் உடன்பட்டார் காக்கை பாடினியார்' என்பார் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் (நூ. 91). பலவடியாய் நடப்பது பஃறொடையென்பது 'பாதம் பலவரின் பஃறொடை வெண்பா' எனும் யாப்பருங்கல நூற்பாவை (92) நோக்கியதாம். ஒத்த விகற்பப் பஃறொடை வெண்பா, ஒவ்வா விகற்பப் பஃறொடை வெண்பா என இதனை இரண்டாகக் குறிப்பர் யாப்பருங்கல விருத்தியாசிரியர். காரிகையாசிரியரும் 'அடிபலவாய்ச் சென்று நிகழ்வ பஃறொடை' (நூ. 27) என்றார்.

எட்டடிப் பஃறொடை வெண்பாவிற்கு 'மலைமேல் மரங்கொணர்ந்து' என்பதையும், பன்னீரடிப் பஃறொடை வெண்பாவிற்குச் 'சிற்றியாறு பாய்ந்தோடும்' என்பதையும் காட்டுவர் யாப்பருங்கல விருத்தி ஆசிரியர் (நூ. 92).

தேசிகமாலை என்னும் நூல் இப்பொழுது கிடைத்திலது.

'பன்மணிமாலையும், மும்மணிக்கோவையும், உதயணன் கதையும் தேசிகமாலையும் முதலாஉடைய தொடர்நிலைச் செய்யுள்களும் அந்தாதியாய் வந்தவாறு கண்டுகொள்க' (யாப்.வி.52) என்றதனால் இந்நூல் அந்தாதியாய் அமைந்த தொடர்நிலைச் செய்யுளால் ஆனது என்பது பெறுதும்.

19. ஈரசைச்சீர்-தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்; இவை ஆசிரியப்பாவுக்கு உரியசீர்கள். ஆசு-குற்றம்.

ஆசிரியப்பாவின் ஈற்றெழுத்து வரையறையை இந்நூலாசிரியர் உணர்த்தவில்லை; இந்நூலின் உரையாசிரியரே இதற்குரிய வரையறையை 20 ஆம் நூற்பா உரையுள் கூறியுள்ளார்.

தொல்காப்பியத்துள்ளும் இவ்வரையறை கூறப்படவில்லை யாதலால், அதன் உரையுள், "இப்பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத்துணர்த்தாமையின் எல்லா வீறுமாம்" (செய். 113) என்று கூறுவார் இளம்பூரணர். அதனை அவருரையான் காண்க.

20. 'அச்சீர்' என்பது நாற்சீரைக்குறித்தது. அற்று-குறைந்து. நிச்சம்-உண்மையாக.'மற்றவடியெல்லாம் நாற்சீராம்' என்பது முதலடியையும் ஈற்றடியையும் குறித்துநின்றது.

இவ்வுரையாசிரியர் கூறும் இணைக்குறளாசிரியப் பாவின் இலக்கணம் யாப்பருங்கலவிருத்திகாரர் 'இயல்பே' என்னும் விதப்பிற்குக் கொண்டதாகும் (காண்க.யாப்.வி. 72 உரை).

21. ஒப்புமை கருதி நிலைமண்டிலஆசிரியப்பாவையும் அடிமறி மண்டில ஆசிரியப்பாவையும் சேர்த்து இலக்கணம் கூறினார். எல்லாம்-எல்லா அடிகளும்; அல்லா-நின்றவாறே அல்லாமல்; வழக்குச்சொல்; நடு ஆதி அந்தம்-இடைமுதல் இறுதி; வகுத்து -(வேறு வேறு வகையாகப்) பிரித்து; அஃதாவது நடு ஆதி அந்தம் அன்றியும் அந்தம் ஆதி நடு எனப் பிறவகையினும் பகுத்துரைத்தல்.

"நிலைமண்டில ஆசிரியப்பா'என்'என்னும் அசைச்சொல்லான் இறுவது சிறப்புடைத்து. மற்றொரு சார் ஒற்றினானும் உயரினானும் ஈறாய் வரவும் பெறும் என்றார்" (யாப்.கா. 34) இவ்விலக்கணம் இல-சூ-யுள் கூறப்பெறவில்லை. யாப்பருங்கலம்

"ஒத்த அடியின ஆகியும் ஒற்றிற
நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே" (யாப்.74)

என்று கூறும்

அடிமறிமண்டிலமாவது விரும்பிய யாதானும் ஓரடியை முதலாகக் கொண்டு பிற அடிகளை இடையும் கடையுமாகக்கொண்டு உரைப்பின் ஓசையும் பொருளும் பிழையாது வருவதாகும். இதனையே 'மனப்படும் அடிமுதலா யிறின் மண்டிலம்' (யாப்.கா.73) என்று யாப்பருங்கலம் கூறும்.

'நேரிசை, இணைக்குறள், நிலைமண்டில ஆசிரியங்கள் முதலும் இறுதியும் ஒன்றிவந்தால் அவற்றை நேரிசை மண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் மண்டில ஆசிரியப்பா, நிலைமண்டில மண்டில ஆசிரியப்பா என ஒரு சார் ஆசிரியர் பெயரிட்டு வழங்குவர்" என்பர் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் (யாப்.வி.73).

22. நேரீற்றுவெண்சீர்: தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய்; நிரையீற்றகவற்சீர்: கருவிளம், கூவிளம்; நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீர்: தேமாங்கனி, புளிமாங்கனி.

பயின்று வருகின்ற சீர்களைக்கூறி இலக்கணம் கூறுகின்றது இந்நூல்; பயின்று வராத சீர்களையும் கூறி இலக்கணம் கூறுகின்றது யாப்பருங்கலவிருத்தி. "துள்ளல் ஓசைத்தாய் நேரீற்றியற்சீரும் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வாராது நிரைமுதலாகிய வெண்பாஉரிச்சீர் மிக்கு நேரடித்தாய் தன்றளையும் அயற்றளையும் தட்டு வரும்" (யாப்.வி.79).

23. ஆசிரியச்சுரிதகம், வெள்ளைச்சுரிதகம் எனச் சுரிதகம் இருவகைப்படும்

இதனை,

"துள்ளல் இசையன கலிப்பா, மற்றவை
வெள்ளையும் அகவலு மாய்விளைந் திறுமே" (யாப். 78)

என்பதனால் அறிக.

நிரல்முந்து-கலிப்பாக்களுள் முன்வைத்து எண்ணுதற்குரிய; நியமித்தல்-பெயரிடுதல்; ஆரியத்தார்-கற்றறிந்தோர்.

காண்க: "எல்லா உறுப்பின் பொருளையும்

தொகுத்துக்கொண்டு தந்துமுன்னிற்றலின் 'தரவு' என்பதூஉம் காரணக்குறி. ஒத்த ஒருபொருள் முடிவினால் ஒத்த தாழ்ச்சியால் இசைத்தலானும், தரவிற்குறைந்து இசைத்தலானும், 'ஒத்தாழிசை' என்பதூஉம் 'தாழிசை' என்பதூஉம் காரணக்குறி.

ஒரு சொல்லாய்ப் பொருள் நிரம்பித் தனியே நிற்றலின் தனிநிலை என்பதூஉம் காரணக்குறி.

ஒரிடத்து ஓடாநின்ற நீர், குழியானும் திடரானும் சார்ந்தவிடத்துச் சுரிந்தோடும் அதனைச் 'சுரிந்து' என்றும் 'சுழி' என்றும் வழங்குவதுபோலத் தான் கலியோசையாய் வாராநின்றது வெள்ளையானும் ஆசிரியமானுமாய்த் தக்கதொரு பொருளை உட்கொண்டு நிற்றலான் 'சுரிதகம்' என்பதூஉம் காரணக்குறி" (யாப்.வி.82).

வெள்ளைச் சுரிதகத்தால் முற்றிய நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவை யாப்.வி.யுள் கண்டுகொள்க (யாப்.வி.82).

24. மூன்று-நாற்சீரடி, முச்சீரடி, இருசீரடியாகிய மூவகை அசையடிகள்; தம்பேருறுப்பு -அம்போதரங்கம்.

அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பாவைத் தலையளவு அம்போதரங்கம், இடையளவு அம்போதரங்கம், கடையளவு அம்போதரங்கம் என மூவகையாக யாப்பருங்கல விருத்தியுரைக்கும் (யாப்.வி.83).

அம்போதரங்கம் தாழிசைக்குப்பின் ஈரடியாய் இரண்டும், அதன் பின் நாற்சீரடியால் நான்கும், அதன்பின் முச்சீரடியால் எட்டும், அதன்பின் இருசீரடியால் பதினாறுமாய் வரும்.

நாற்சீரடி இரண்டாய் அவை இரண்டு வருவது பேரெண்; நாற்சீரடி ஓரடியாய் நான்கு வருவது அளவெண்; முச்சீரடி ஓரடியாய் எட்டு வருவது இடையெண்; இருசீரடி ஓரடியாய்ப் பதினாறு வருவது சிற்றெண்.

25. கோது -குற்றம். கூறு- உறுப்பு.
தேவரது விழுப்பமும் வேந்தரது புகழும் வண்ணித்து வருதலின் வண்ணகம் எனப்படும் (யாப்.வி.84). அராகம் என்பது குறிலிணை பயின்ற அடிகளான் வருவது.

26. தன்றளை - கலித்தளை.

பிறஇலக்கண நூல்கள் கூறிய வெண்கலிப்பா, கலிவெண்பா ஆகியவற்றின் இலக்கணங்களைத் தொகுத்து அவற்றையெல்லாம் ஒன்றாக்கி வெண்கலிப்பா என உரைத்தார் இவ்வாசிரியர்; இதனால் வெண்கலிப்பா, கலிவெண்பாவிற்கு மயக்க மறுத்தாராயிற்று.

இவர் கூறும் வெண்கலிப்பாக்கள் வெண்டளையானும் கலித்தளையானும் வந்து ஈற்றடி முச்சீராய் வருவது, வெண்டளை தட்டு ஒருபொருள் மேல் மூன்றடுக்கி ஈற்றடி முச்சீராய் வருவது, கலித்தளையானும் ஆசிரியத்தளையானும் ஈற்றடி முச்சீராய் வருவது என மூவகைப்படும்.

"வெண்கலிப்பா எனினும் கலிவெண்பா எனினும் ஒக்கும்' (யாப்.வி.85 மேற்) எனக் கலிவெண்பாவாக இலக்கணம் சொன்னார்; தொல்காப்பியர் கலிவெண்பா என இலக்கணம் கூறினார்.

27. 'தனிச்சொல் சுரிதகமுற் றெய்தலும்' என்பது யாப்பருங்கல விருத்தியுள் 'தாமும்' என்ற விதப்புக் கிளவியால் கொள்ளப்பட்டதாம். "தாமும்" என்று மிகுத்துச் சொல்லியவதனால் தனிச்சொல் இடையிடையே வரவும் அமையும். அம்போதரங்க உறுப்பும் அருகிவரும். சுரிதகமும் அருகிவரப்பெறும் எனக்கொள்க' (யாப். வி. 86); இவர் மயங்கிசையைப் பிரித்துணர்த்தினர்.

28. 'தரவுமுதல் ஆறுறுப்பும்...மயங்கி' என்பது "தரவு முதலாகிய ஆறுறுப்பும்தம்முள் மயங்கியும்" என்ற யாப்பருங்கல விருத்தியை அடியொற்றியதாம் (யாப்.வி.86).

இதனை இயல்மயங்கிசைக் கொச்சகம் என்றும் அயல் மயங்கிசைக்கொச்சகம் என்றும் யாப்பருங்கல விருத்தி இருவகைப்படுத்தியுரைக்கும். கலிக்கு ஓதப்பட்ட உறுப்புகளோடு மயங்கி வருவதுஇயல்மயங்கிசைக் கொச்சகம்; பிறபாவினோடு மயங்கி வருவது அயல்மயங்கிசைக் கொச்சகம்.

29. ஈற்றின் என்பது ஒற்று இரட்டிக்காது ஈறின் என நின்றது. ஒற்று இரட்டிக்குமாறு,

"நெட்டெழுத் திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான" (தொல்.எழுத்து. 196)

என்பதனான் அறிக.

முசிவுஇல்-முறிதல் இல்லாத; மிகுந்த நாற்சீராய் நடந்து முச்சீர் பெற்றுப் பின் நாற்சீராய் முடிவது ஆசிரியமாதலால் 'முசிவில்' என்றார்.

இருவகை வஞ்சிப்பாக்களுள் குறளடி வஞ்சிப்பாச் சிறப்புடைத்து என்பதைத் தந்திரவுத்தியால் கொள்வார் யாப்பருங்கலவிருத்திகாரர் (யாப்.வி. 26).

நாலசைப் பொதுச்சீர் வஞ்சிப்பாவிற்குரித்தென்பதை இந்நூல் 4 ஆம் நூற்பாவானும் உரையானும் அறிக.

30. உறு பொருள்-நேர்ந்த பொருள். விதியகவல்-இரண்டாவதெனப் பாமுறையில் விதிக்கப்பட்ட ஆசிரியப்பா. விதி-சூத்திரம்; சூத்திரம் செய்தற்குரிய பா எனினும் அமையும்.

இது வெண்பாவோ ஆசிரியமோ எனத்துணிதற் கிடனின்றி மருட்கையைத் தரும் பாவாதலால் மருட்பா என்றாயிற்று. "புறநிலை வாழ்த்து முதலாகிய பொருட்கண் மேல் யாப்புற்று மருட்சியுடைத்ததாகப் பாவி நடத்தலின் மருட்பா என்று வழங்கப்படும்" (யாப்.வி. 55) என்பதனானும் அறிக.

இது வெண்பாவும் ஆசிரியமும் ஒத்துவருமெனின் சமமருட்பா என்றும் ஒவ்வாது வருமெனின் வியன் மருட்பா என்றும் வழங்கப்படும் (யாப்.வி. 55).

31. பிறழ்தல்-வேறாதல்; சிந்தியல்-சிந்தியல்வெண்பா; இஃது ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருவது வெள்ளொத் தாழிசையாகும்.

'குறட்டாழிசை' 'தாழிசைக்குறள்' என்பன ஒரு பொருள் குறித்த சொற்கள். "இரண்டடியாம் நேரடித்தாய்த் தாழ்ந்திசைத்தலானும், ஒழுகலோசையினும் செப்பலோசை யினும் வழுவித் தாழ்ந்த ஓசைத்தாகலானும், விழுப்பமின்றித் திண்ணிதாகிய பொருளைச் சொல்லுதலானும் 'குறட்டாழிசை' என்பதூஉம் 'தாழிசைக்குறள்' என்பதூ உம் காரணக்குறி (யாப். வி.65.).

பிறர் தனித்துக்கூறிய குறள்வெண்பாவிற்கு இனமாகிய குறட்டாழிசையையும் வெண்செந்துறையையும் வெண்பாவின் இனம் கூறுமிடத்துக் கூறினார்; இலக்கணத்தைத் தொகுத்துக் கூறுதல் இவர் மரபாதலின் அவ்வாறு கூறினார் என்க.

வெண்டாழிசையையும் வெள்ளொத்தாழிசையையும் வேறுபட வழங்காது வெள்ளொத்தாழிசை என வழங்கவும் பெறும். நோக்குக:

"அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவன மூன்றே வெள்ளொத் தாழிசை" (சிறுகாக்கை
பாடினியார்)

"அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவ தாயின் வெள்ளொத் தாழிசை" (யாப்.வி.66 மேற்.,
அவிநயனார்)

வெண்செந்துறை என்பது செந்துறை எனவும் வழங்கப்பெறும். "வெண்பாவிற்கு இனமாய் செவ்விதாய், ஒழுகிய ஓசைத்தாய், விழுமியபொருளை உள்புக்குத் துறைபோய நெறிப்பாடு உடைத்தாய்க் கிடத்தலின் 'வெண்செந்துறை' என்பதூஉம்', 'செந்துறை வெள்ளை' என்பதூஉம் காரணக்குறி" (யாப்.வி. 65).

காண்க: "வெண்டுறையாவது மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமையாக வந்து இறுதியடிகளில் சிலசீர் குறைந்துவரும்" (இளம். தொல். பொருள். 484).

33. குடிகொள் அளி-(சூடிய மலரின் மேலுள்ள விருப்பால் அதனுள்) தங்கியிருக்கும் வண்டு. அணங்கும்-விரும்பும், தழுவும், நெருங்கும். வெண்சீர் மிகுந்து வரவேண்டும் என்பது இந்நூலார் கொள்கை. மூன்றடியான் வெளிவிருத்தம் வரப்பெறும் என்பதை யாப்பருங்கல விருத்திகாரரும் (யாப். வி. 68), நான்கடியான் வரப்பெறும் என்பதை யாப்பருங்கலக் காரிகையுரையாசிரியரும் (யாப்.கா. 32) உம்மையால் கொண்டனர். காண்க: "வெளிவிருத்தமாவது நான்கடியானாயினும் மூன்றடியானாயினும் அடிதொறும் தனிச்சொற் பெற்றுவரும்"(இளம். தொல். பொருள். 484)

வெளிவிருத்தத்துள் பயின்றுவரும் தனிச்சொல் அடியுட்படாதே பிரித்து அலகிட்டு வழங்கப்படும். மூன்றடியால் வரும் வெளிவிருத்தம் சிந்தியல் வெண்பாவின் இனம் என்றும், நான்கடியான் வரும் வெளிவிருத்தம் இன்னிசை வெண்பாவின் இனம் என்றும் கூறுப (யாப். வி. 68). அதனை அவருரையான் அறிக.

34. சான்றது-முழுமையுடையது, மேன்மையுடையது. தன்சீர்-ஆசிரியவுரிச்சீர்.

தனித்து வரும் ஆசிரியத்தாழிசைக்கு யாப்பருங்கலமும் யாப்பருங்கலக் காரிகையும் முதன்மை கொடுத்தன; இந்நூலார் மூன்றடுக்கி வருவதற்கு முதன்மை கொடுத்தார். ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வருதலை ஆசிரிய ஒத்தாழிசை என்றார் (யாப். வி. 75). "ஆசிரியத்தாழிசையாவது மூன்றடி ஒத்துவருவது" என்றார் இளம்பூரணர் (தொல். பொருள். 484).

35. தேய்ந்தும்-குறைந்தும். நான்கடியாய் என்பதனை எல்லாவற்றோடும் கூட்டியுரைக்க. மடக்கு-வந்த மொழியே மீண்டும் மடங்கி வருவது.

"ஆசிரியத்துறையாவது நான்கடியாய் இடையிடை சீர்குறைந்து வருவது" என்றார் இளம்பூரணர் (தொல். பொருள். 481).

36. நெடில்-நெடிலடி, ஐஞ்சீரடி. 'நெடில் முதல் ஒவ்வொரு சீர்நேர்பெற்று' என்பது அறுசீர் எழுசீர் என எண்ணுதலைக் குறித்தது. பரவுதல்-(ஓசை) பாவுதல், பெருகுதல்.

ஆசிரியவிருத்தமாவது அறுசீரடி முதலாகிய மிக்க அடியினான் நான்கடியும் ஒத்துவரும் என்றார் இளம்பூரணர் (தொல்.பொருள். 484)

"தொடை பாவி நடத்தலின் பாவே" (யாப். கா. பாயிரவுரை) என்றதனால் 'பரவி' என்பது 'பாவி' என்று கொள்ளுதற் கிடமுண்டேனும் 'பாவி' என 'மங்கலமின்மை கருதிப்' பரவி எனக் கொள்ளப்பெற்றது.

சந்தப்பாவின் இலக்கணத்தைப் பின்னர்க் கூறுகிறார். (இலக். சூ. 45).

பன்னிருசீர் விருத்தத்திற்கு எடுத்துக்காட்டு:

"விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழ தலறியுன்
மென்குரல் கம்மாமே
கரைவுறு மஞ்சன நுண்டுளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடன்
கருவடி வுண்ணாமே
உருவ மணிச்சிறு தொட்டி லுதைத்திறி
னொண்பத நோவாமே
ஒருதா ளுந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை" (முத்துக். பிள். செங். 8)

37. இடைநிலை-தாழிசை. ஈற்றடிமிக்கு ஏனையடி ஒத்து வருவனவற்றை எல்லாம் 'சிறப்புடைக் கலித்தாழிசை' என்றும், ஒவ்வாது வருவனவற்றைச்'சிறப்பில் கலித்தாழிசை' என்றும் வழங்குவர் (யாப். வி. 87).

"கலித்தாழிசையாவது அடிவரையின்றி ஒத்து வந்து, ஈற்றடி சிலசீர் மிக்கும் குறைந்தும் வருவது" என்பர் (இளம்.தொல்.பொருள். 484).

கலித்துறைக்குரிய பொதுஇலக்கணத்தை இந்நூற்பாவில் கூறி அதன் விரிவை அடுத்த நூற்பாவில் கூறுகிறார். இதனைக் கலிமண்டிலத்துறை என்றும், கலி நிலைத்துறை என்றும் இருவகைப்படுத்துவர். அடிமறியாய் ஐஞ்சீர் நாலடியால் வருவது கலிமண்டிலத்துறை; அடிமறியாது ஐஞ்சீர் நாலடியால் வருவது கலிநிலைத்துறை (யாப். வி. 88).

கலிநிலைத்துறையை இந்நூலார் 'நெடிலடி' என்றும்'காப்பியக் கலித்துறை' என்றும் கூறுவார் (இலக். சூ. 38).

"கலித்துறையாவது நெடிலடி நான்கினான்வருவது; அஃதாவது ஐஞ்சீரான் வருவதும், பதினாறும் பதினேழும்

ALAGAPPA UNIVERSITY, KARAIKUDI
CENTRAL LIBRARY,
Accession No. 16308
Date of purchase:
Call Number: 494.8

எழுத்துப்பெற்று நான்கடியான் வருவனவுமாம்" என்றார் இளம்பூரணர் (தொல். பொருள். 484).

38. கதிபெறும் நிலைபெறும், 'மோனை கடையாய்' என்பதைக் 'கடைமோனையாய்' என மொழிமாற்றிக்கொள்க. எழுத்தெண்ணிப் பாடப்பெறும் கட்டளைக் கலித்துறை யாப்பையே இவர் கட்டளை என்ற பெயரின்றிக் கூறினார். சுவாமிநாதமும் இம்முறையிலேயே இதற்கு இலக்கணம் கூறுகின்றது.

"நான்கடி நெடிலும் அதிற்பன்னேழ் பன்னாறு
எண்முடிவும் களவற்ற கலித்துறை" (சுவாமி. 160)

இதன் இலக்கணத்தை வீரசோழியம்(123), தென்னூல் விளக்கம் (241) முதலானவற்றுள் காண்க.

(கட்டளைக்) கலித்துறையின் இறுதிச்சீர் கடைமோனையாய் இயலும்.

"........ ..... இறுதிச்சீர் மோனையாய்க்
கடையே கொண்டிறும் கட்டளைக்கலித்துறை"
(தொன். வி. 241)

கலித்துறை கட்டளைக்கலித்துறையெனவும், காப்பியக் கலித்துறையெனவும் இருவகைப்படும். அவற்றுள் கட்டளைக் கலித்துறை கோவைக்கலித்துறை எனவும், திலதக்கலித்துறை எனவும் இருவகைப்படும் (வீரசோ. 22).

நேரசைக்கலித்துறைக்கு எடுத்துக்காட்டு:

"மாற்றேன் எனவந்த காலனை ஓல மிடவடர்த்த
கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றின் நீள்குடுமி
மேற்றேன் விரும்பும் முடவனைப் போல மெலியுநெஞ்சே
ஆற்றேன் அரிய அரிவைக்கு நீவைத்த அன்பினுக்கே"
(திருக்கோ. 150)

நிரையசைக் கலித்துறைக்கு எடுத்துக்காட்டு:

"முயங்கிய நூபுரப் பங்கயத் தாளு முலைசுமந்து
தயங்கிய நூலிடை தானுமென் போலத் தளர்வுறுமிங்
கியங்கிய வாறென் மனத்திரு ணீக்கவென் றேதுணிந்தோ
வயங்கிய சீருடை யான்வாணன் மாறை மணிவிளக்கே"
(தஞ்சை.கோவை. 133)

*39.* பொலிவு-மிகுதி; பொலிவிருக்கும் கலிவிருத்தம் எனக்கூட்டுக. இலக்கியங்கள் பலவற்றுள்ளும் கலிவிருத்தத் தாலான செய்யுட்கள் மிகுதியுண்மை கருதிப் பொலிவிருக்கும் எனக் கூறினார்.

கதித்து-மிகுந்து. கட்டளை-கட்டளைக்கலிப்பா. முன்னும்-பொருந்தும். விருத்திப்பாவியலாரும் "காத லிக்குங் கலிவிருத்தத் தொருபாதம்" (கலிவிருத்தம்-1) என்றார்."கலிவிருத்தமாவது நாற்சீரடி நான்கினால் வரும்" என்றார் இளம்பூரணர் (தொல். பொருள். 484).

ஈரசைச்சொற்கள் ஓரடிக்கு ஐந்து கொண்டதாய் வருவது கலிவிருத்தம் எனப்படும் என்பர் தண்டபாணி சுவாமிகள். காண்க:

"ஈரசைச் சொற்கள் ஐந்துஓ ரடியாய்
வரும்கலி விருத்தமும் மாநிலத் துளவே" (அறுவகை. யாப்பு. 39)

கட்டளைக்கலிப்பாவிற்குத் தொன்னூல் விளக்கமும் (நூ. 236), அறுவகை இலக்கணமும் (யாப்பு. 40) இலக்கணம் கூறுகின்றன. தொன்னூல் விளக்க ஆசிரியர் இதற்கு எழுத்து வரையறை கூறியுள்ளார். இவ்வாசிரியரும் அறுவகை இலக்கண ஆசிரியரும் கூறாது விடுத்தனர்.

*40.* ஒரு என்பதை மூன்றேல் என்பதனோடு கூட்டி 'ஒருமூன்றேல் தாழிசை' எனப்பொருள்கொள்க. செரு-போர். 'செருமோதி வந்த வடிவேற்கண்' என்பது செவ்வரி படர்ந்த கண்ணைக் குறித்து நின்றது. 'மாவீழ்த்துப் பறித்த பகழி யன்ன சேயரி மழைக்கண்' (நற். 13) என்பதும் அது.

வஞ்சித்தாழிசை ஒருபொருள்மேல் மூன்றடுக்கியல்லது வாராதென்பதைக் 'கோதில்' என்னும் மிகைச்சொல்லால் கொண்டார் யாப்பருங்கலக் காரிகையுரையாசிரியர் (யாப். கா. 46). "வஞ்சித் தாழிசையாவது குறளடி நான்கினால் ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவரும்..... இவை மூன்றடுக்கி வருதலிற் கொச்சகவொருபோகாதல் வேண்டுமெனின் அளவடி யான் வாராமையான் ஆகாதென்க" என்பார் இளம்பூரணர் (தொல். பொருள். 484).

*41.* ஓசை தொனித்து-மிக்கு ஒலித்து. செனிக்கும்-உருவாகும்; பிரபந்தங்கள் பலப்பலவாகப் புதிது புதிதாகத் தோன்றும்

நிலையுண்மையால் 'செனிக்கும் உலா மடல் தூது' என்றார். செனிக்கும் என்பதை எச்சமாகவன்றி முற்றாகக் கொண்டும் பொருளுணர்க. கலாபம்-மாறுபடுதல். 'வெள்ளைக் கலாபவகை எய்தல் கலி' என்பது வெள்ளைக்கலி கலிவெள்ளை என மாறுபட்டு நிற்கவேண்டுவதைக் குறித்தது. கலிவெள்ளை-கலிவெண்பா.

இவரும் உலா, மடல், தூது போன்ற பிரபந்தங்களுக்குக் கலிவெண்பாவையே யாப்பாகக் கூறினார். இவ்வாசிரியர் வெண்கலிப்பா, கலிவெண்பா இரண்டினும் வெண்கலியையே கூறினாரேனும் (இலக். சூ. 26) இவருக்கு முன்னின்ற இலக்கண ஆசிரியர்கள் உலா முதலாகிய பிரபந்தங்களுக்குக் கலிவெண் பாவை யாப்பாகக் கூறினமையின் இவரும் கூறினார்.

தம் மதம் நிறுவுதல் காரணத்தான் கலிவெண்பாவை 'வெள்ளைக் கலாபவகை எய்தல் கலி' எனச் சுட்டினார்.

உலா, கலிவெண்பாவால் பாடப்பெறுதலை,

'காதல் செய்தலின் வரும் கலிவெண்பாட்டே"
(பன். பாட். இன. 47),

"அறைந்த கலிவெண்பா உலாவாம்"
(வெண். பாட். செய். 27)

"கலிவெண்பாவாற் கூறி" (சிதம்.பாட்.மர.10)

என்பவற்றான் உணர்க.

"புயல்வண்ணன் பொற்பதுமப் போதிற் புவனச்
செயல் வண்ணங் காட்டிய சேயோன்-உயிரனைத்தும்
காட்டும் பதின்மரினும் காசிப னேழ்புரவி
பூட்டும் தனியாழிப் பொற்றேரோன்-ஒட்டி
அறவாழி மைந்தன்மே லூர்ந்தோன் அவனி
புறவாழி முட்டப் புரந்தோன்"

என்னும் இராசராச சோழனுலாவால் உலா நடக்கின்ற முறைமை யறிக.

தூது என்னும் பிரபந்தம் கலிவெண்பாவால் பாடப்பெறும் என்பதை

"பயில்தரும் கலிவெண் பாவி னாலே
... ... ... ... .... ... ... ....
... ... ... .. .... ... தூதெனப்
பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே"
பா' (இலக்.பாட்.114)

என்பதால் அறிக.

'கலிவெண்பா மடல்' (வெண். பாட். செய். 28)
'கலிவெண்பாத்தனை மடலாக வகுத்தனர்'
(நவ.பாட்.செய்.22),

போன்றவற்றால் மடலின் இலக்கணம் அறிக. இவற்றிற்கிலக்கியம் மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடுதூது போன்ற தூது நூல்களிலும், தாசிகாளிமுத்துவின் வருணகுலாதித்தன் மடல் ஆகிய நூல்களிலும் காண்க.

மஞ்சரி என்னும் பிரபந்தம் காதலை முதன்மைப் பொருளாக வைத்துத் தலைவன் ஒருவனின் புகழ்பேசுகின்ற முறையில் அமைவது. பாட்டியல் நூல்களில் இலக்கண விளக்கப்பாட்டியல் (நூ. எண். 855), பிரபந்தத்திரட்டு (நூ. எண். 34) ஆகியவை இதற்கு இலக்கணம் கூறுகின்றன.

"காரை நிகரக் கறுத்து வனம்செறிந்து
வாரி விரவிமுல்லை வந்தடைந்து-தாரணியைத்
தாங்கி அகிலம் தனைஉண்டு மாஅரவத்து
ஓங்கி ஒருதிருவை உற்றணிந்து-வாங்கரிய
நெய்த்தடவி நேர்ந்து சுருங்கி நெடும்திகிரி
வைத்தபகல் கங்குல் வருவித்து- ....."

என்பது அந்தாலந்திர்த்த செழியதரையன் மஞ்சரி (22-24).

மன்மதசாரம் என்னும் பிரபந்தவகையைப் பாட்டியல் நூல்கள் கூறவில்லை. கலிவெண்பாவால் பாடப்பெறும் மதனசிங்காரம் என்னும் பிரபந்த வகையொன்றைப் பிரபந்தத்திரட்டு (நூ. எண். 48, 102) கூறுகின்றது. இவ்வுரையாசிரியர் கூறும் மன்மதசாரம் என்னும் வகை, பிரபந்தத்திரட்டு கூறுகின்ற மதனசிங்காரமாக இருக்கலாம்.

42. பரணிக்குரிய யாப்பாகக், "கொச்சகத்து ஈரடி" என்று பன்னிருபாட்டியலும் (இனவியல் 58) 'நேரடி ஆதியா நீண்ட

கலித்தாழிசை' என்று வெண்பாப்பாட்டியலும் (செய்யுளியல் 38) கூறும்; இந்நூலார்'ஈரடித் தாழிசை' என்றார்.

'இன்சந்தம்' என்பது பரணிக்குரிய இனிய ஓசையைக் குறித்தது. 'ஓரடிபோல் ஈரடியும் ஒத்து' என்பது தாழிசையின் இரண்டடிகளும் சீராலும் ஓசையாலும் அளவொத்திருக்க வேண்டுமென்பதாம்.

'ஈரசைச்சீரானும்' என்பது உரையாற் கொள்ளப்பட்டது.

நாற்சீரின் மேற்பட்ட சீர்களால் வரும் என்று பிற இலக்கண நூல்கள் கூறவும் எண்சீரடி எல்லையென இவ்வுரையாசிரியர் வரையறுத்தாரென்றறிக.

உயிர்த்தொடைச்சொல் என்பது உயிர்வருக்கமோனை.

"சூதள வளவெனு மிளமுலைத்
துடியள வளவெனு நுண்ணிடைச்
காதள வளவெனும் மதர்விழிக்
கடலமு தனையவர் திறமினோ" (கலிங். 21)

இஃது ஈரசைச்சீரான் வந்த அறுசீரடித்தாழிசை.

"அணிகொண்ட குரங்கினங்கள்
அலைகடலுக் கப்பாலை
மணலொன்று காணாமல்
வரையெடுத்து மயங்கினவே" (கலிங். 39)

இது மூவசைச்சீரான் வந்த நாற்சீரடித்தாழிசை.

"அவசமுற் றுளம்நெகத் துயில்நெகப் பவளவாய்
அடிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகை கனிவரக் களிவரும்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ
(கலிங். 33)

இஃது ஈரசைச்சீரான் வந்த எண்சீரடித் தாழிசை.

43. மூண்டு-நேர்ந்து. கழிநெடில்-ஐஞ்சீரடிக்கு மேற்பட்ட அடிவகை, இதுவே பின் ஒரு பிரபந்தவகையாக உருவெடுத்தது. 'நான்முதல்' என்றது நான்கு நாற்சீரடிகளின் முதலெழுத்துகளைக் குறித்தது. 'பேசியவெண் சீரகவல் பெற்று ..... நடக்கும்' என முடிக்க.

குறிக்கத்தக்க பல பிள்ளைத்தமிழ் நூல்கள் இருப்பினும், இவ்வுரையாசிரியர் அழகர் பிள்ளைத்தமிழை எடுத்துக் காட்டியமை இவரை வைணவர் என்று கருத இடம் தருகின்றது.

"நீரறா மானதப் பெருவாவி பூத்ததுணை
நெடுநாற் முளரி ஏறி
நீறுபடு பொற்சுண்ணம் ஆடிமது வுண்டுமகிழ்
நிலவுத் தூவ லன்ன
மாரறால் உகளவும் புனலறு கருஞ்சேற்றில்
அடைவாடு புல்லி தழ்ப்பூ
ஆம்பலின் மணந்து கடுக்குமறை யொருநான்
காற்று நெடுமா லாயிரம்
பேரறா தோதுநா வீறுபெரு குகைமுனி
பிரமன் பராச ரன்முதற்
பெற்றமுனி முதலாம் வரத்தினர் முகத்தினர்
பெருவிளை கொண்டி ருக்கும்
வாரறா தண்ணாந் தெழுந்ததுணை முலைவாணி
மதிதவள அமுது பாயும்
மாவிருஞ் சோலைமலை மாலலங்காரனை
வழுத்து மென்னா வாழ்ந்ததே"

(அழகர் பிள்ளைத்தமிழ் 1)

44. இவர் வண்ணம் என்பதை ஒரு பிரபந்தவகையாகக் கொண்டார். கலை-வண்ணத்தின் ஓர் உறுப்பு; மூன்று குழிப்பும் ஒரு தொங்கலும் சேர்ந்தது. கலை இரண்டுகொண்டது ஓர் அடி இடையிட்டெதுகை-ஒன்றுவிட்டு ஒன்று எதுகையுடைத்தாதல்; 1, 3, 5, 7! என இவற்றுள் எதுகை அமைதல. அடிக்கு நான்கு கலையாகவும், எட்டுக்கலையாகவும், பதினாறு கலையாகவும் வண்ணம் கட்டப்படுதலால் 'கட்டுக்கலை' என்றார். கண்ணி-குழிப்பு; குழிப்பாவது சந்தங்களில் சிலபல சேர்ந்தது; அவ்வாறு கண்ணி மூன்று கொண்டது, ஒரு கலை. பிறர் குழிப்பு என்று கொண்டதை இந்நூலாசிரியர் 'கண்ணி' என்றார்.

தொங்கலாவது ஒரு குழிப்பிற்குரிய சந்தத்தை முடித்து நிற்கும் சந்தங்களின் சேர்க்கையாகும். இது மூன்று குழிப்புகளுக்குப் பின் அமையும்.

'தொடைமூன்று நான்கு ஆறாய்' என்றது ஒவ்வோர் அடியிலும் மூன்று நான்கு ஆறாம் கண்ணிகள் முதற்கண்ணிக்கேற்ற மோனைத் தொடை பெற்று வரவேண்டுமென்பதாம்.

இவ்வாறு எட்டுக்கலை கொண்டது ஒரு வண்ணம்.

"சில்வகைச் சந்தப் புணர்ப்போர் துள்ளலே"
"பல்வகைத் துள்ளற் புணர்ப்போர் குழிப்பே"
"குழிப்பொரு மூன்று கூடிய பின்னர்
தொங்கல் தாழிசைத் துள்ளலொன் றிசைக்கிற்
கலையொன் றாமெனக் கழறுவர் புலவோர்"
"எண்கலைப் புணர்ப்போர் வண்ணப் பாவே"
(வண்ணத்தியல்பு 85-88)

என்றார் தண்டபாணி சுவாமிகள்.

ஒவ்வொருகலைக்கும் ஒருதொங்கலாக அமையும் எட்டுத் தொங்கலையும் சேர்த்து ஒரு தாழிசையாக அமைப்பதும் உண்டு.

வண்ணத்திற்கு எடுத்துக்காட்டு:

(குழிப்பு)

தானதனந்தனனா தன தானதந்தனனா
தன தானதந்தன தானதந்தன
தானதந்தன தந்தனந்தான

(தொங்கல்)

தனனதனதான தன்னதானனா

சோதிமிகுஞ்சடையார் திரு நீலகண்டமுளார்
சிவகாமசுந்தரி பாகமொன்றிய
சோமசுந்தரர் தம்பதந்தேடி
நாடியருந்தவமே செய லால்வரம்பெறுநாள்
மலர்வேதனிந்திர னாதியந்தரர்
வாழ்விழந்துவ ருந்தவுஞ்சீறு
சூரன்மடிந்திடவே தனி வேல்விடுங்குகவே
ளிருபாதபங்கய மீதுநெஞ்சக
லாதுநின்றுத வஞ்செயுஞ்தீரர்-
அருண்முருகதாச ரென்னையாளுவார்.

தூலவும்பினிலே முழு நீறணிந்திடுவா
ருயர்வானகண்டிகை யோடுவெண்கவு
பீனமொன்று டனைந்திடுஞ்சிலர்
மேலொருசெந்துகிலார் கவு மாரவிஞ்சையுளார்
கவிவாணரென்பவ ரியாவரும்புக
ழோதுசந்தமி குந்தசந்தோடர்
குதுபுரிந்தறியார் கொலை யாதியுஞ்சகியா
ருயிர்மீதுமிஞ்சரு ளேதிரண்டுரு
வாகிவந்துவி ளங்குபண்பாளர்-
அடியவர்கள்சேர வுன்னுகாதலார்

ஆதியிலன்புடனெ யரு ணாசலந்தனிலே
ிளியாயெழுந்தயி ராவதன்பதி
யூடுசென்றுவ ருந்திறந்தோய்வர்
வேணுவனந்தனிலே யொரு காரணம்பெறவே
வடிவாள்பதந்தொழு வார்தவந்தனி
லேபிறந்துவ ளர்ந்தசிங்கார
ராலினிடந்துயில்லோன் முத லோர்வியந்திடவே
பலகோடிவிந்தைக ளாடவென்றுச
தாவருந்திமு யன்றிடும்போதர் -

சருவபிரசாத நண்ணுபான்மையார்.

ஆரணமும்பலவா கிய வாகமங்களும்வே
றுள நூல்களுந்தெளி வாருடன்சிவ
யோகருந்திகழ் கின்றபைங்காவில்
வானுயர்கங்கையுலா விய சிருமஞ்சுகமா
மயில்கோகிலம்பயில் ஓசையும்பல
வாரங்கண்மு ழங்க லுஞ்சாரும்
ஆள்கட லுண்டுமுனாள் விடு மேலவன்றவமே
வடிவானசெந்தமிழ் வாரியுங்கமழ்
சீர்பெருங்குளிர் தென்றலுந்தோய்கை-
தகுபொதிகைமீது மன்னுதோழியே.

பாதியிளம்பிறைநேர் நுத லார்பெரும்படையூ
டுறுமாரன்என்பவ னேவிடுங்கணை
யால்வருந்தலெ தும்பொருந்தாது
வாழுமிளந்தையிலே யின மானவெண்களினோ

டுறவாழமுன்றலில் வீதியின்புடை
யாடல்கொண்டு மகிழ்ந்திடும்போது
பார்வையில்வந்தொருநா ளென தாவல்மிஞ்சிடவே
யினிதாயணைந்தொரு காலமும்பிரி
யேனெனுஞ்சொன்மொ ழிந்தங்கேள்வர்
இருமையினுமேவு மன்னராகினார்.

பாழ்விதியென்றலைமேன் முன மேயமைந்ததுவோ
வினையானதின்றிற லால்விளைந்தது
வோகுனிந்துபொய் வஞ்சகம்பேசி
யாவர்செய் தந்திரமோ வனுவேனுமன்பிலர்போ
னுலகோர்தொழும்பல சீர்தகும்பொரு
ளாடியன்றும னந்துணிந்தேகல்
பாதகமென்றவர்தா முறை யார்தெரிந்திலரோ
வுயிரோடுடம்பென வேகலந்துற
வானபண்பைம றந்தெனெஞ்சொடும்
ஏனைவிலகினாரி தென்னநீதமோ.

ஏதிலருஞ்சகியார் மிக வேபடுந்துயரா
னதையான்விளம்புவ தால்வரும்பல
னேதெனுங்குறி கண்டுகொண்டேன்மெய்
வேணவிதங்களெலா முனை நாள்பகர்ந்தனரே
யவரால்அடைந்தவி னோதவின்பமே
லாறினைந்துவ ருந்துகின்றேனு
ளீதொருதுன்பமதோ மதி யானதுஞ்சுடுதே
யதுபோகவுங்கட லோசையுங்குயி
லானதும்பிற வுந்தருஞ்சோகம்
ஒருமைமனதாகி யின்னம்வாழ்வமோ.

ஏலநறுங்குழலார் பெறு நாண் அழிந்ததுவே
கயலானகண்களி னீர்மலிந்தது
வேமணந்தவர் தம்புயந்தேடி
வாடுவதொன்றையலால் மறு வேலையொன்றறியேன்
மடமானெனுஞ்சகி யேபசுங்கிளி
யேபிரிந்தவர் வந்திணங்கார்கொல்

யானினியென்செய்குவே னிதை யாருடன்சொலலா
மெனையாள்பெருந்தகை தோள்புணர்ந்துகு
லாவிடுஞ்சுக மொன்றுநன் றாக-
உரியதொருபாய வுண்மைகூறிடே.

தொங்கல்கள

"அருண்முருகதாச ரென்னையாளுவா
ரடியவர்கள்சேர வுன்னுகாதலார்
சருவபிரசாத நண்ணுபான்மையார்
தருபொதியைமீது மன்னுதோழியே
இருமையினுமேவு மன்னராகினா
ரெனைவிலகினாரி தென்னநீதமோ
பொருமைமனதாகி யின்னம்வாழ்வமோ
வுரியதொருபாய உண்மைகூறிடே"
(தண்டபாணி சுவாமிகள் பிரிவுழி இரங்கற்றுறை வண்ணம்)

இதனுள் தொங்கல்கள் இறுதியில் ஒரு தாழிசையாகக் தொடுக்கப்பட்டுள்ளமை காண்க.

45. இதனுள் மேற்கூறிய வண்ணம் பாடுதற்குரிய சந்தத்தின் இலக்கணம் கூறுகின்றார்.

ஏய்ந்த-பொருந்திய. ஏனும் என்பது எஞ்சாப் பொருட்டாகத் தழுவுதல் பொருண்மையின் வந்தது.

'எழுத்தளவின்' என்பது வல்லினத்துக்கு வல்லினமும் மெல்லினத்துக்கு மெல்லினமும் என்றமுறையில் ஏற்ற எழுத்தான் அமைதலைக் குறித்தது.

இந்நூலாசிரியர் கூறிய சந்தங்களையும் அவற்றிற்குரிய எடுத்துக்காட்டுகளையும் வண்ணத்தியல்பு எனும் தம் நூலுள் தண்டபாணிசுவாமிகள் விளக்கியுரைத்தார்.

'எந்தப்பாவேனும்' என்றதால் வண்ணயாப்பன்றி ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம் போன்ற பாவினங்களும் சந்தயாப்பால் பாடத்தகும் என்றவாறு. 'அளவு' என்பதற்கு 'மாத்திரை' என்று பொருளுரைத்து 'எழுத்தளவின்' என்பது 'எழுத்துகளுக்குரிய மாத்திரை வகையான்' என்று கொண்டு

மாத்திரை எண்ணிப் பாடப் பெறுதலும் சந்தயாப்பு என்று கொள்க.

இதனால் விருத்தப்பாவியலார் தம் நூலுள் 'சந்தவுறுப்பியல்' என்றே ஓர் இயல் அமைத்தார் என்க.

அறுசீர்ச்சந்த விருத்தத்திற்கு எடுத்துக்காட்டு:

தான தந்தன தான தந்தன தான தந்தனனா

"தான வெங்களி றோடு மிந்திரன் சாப முந்தொலையா
மேனி தந்தகல் யான சுந்தரர் மேவு வண்பதியாம்
வானி மிர்ந்திட வாடு மொண்கொடி வால சுந்திரனும்
கூனி மிர்ந்திட வேறி மிர்ந்திடு கூட லம்பதியே"
(மதுரைக்கலம்பகம். 44)

"சந்த விருத்தம் தம்முள்ஒத்து எழுத்துஅசை
வந்து ஒலிபற்றி வரும்உள பிறவே (தொன்.வி. 249)

என்றார் தொன்னூல் விளக்க ஆசிரியர்.

46. காரியம்-செய்யத்தக்கது, நோக்கம். மேவுதல்-அமைதல். ஏற்றக்குறைச்சல்-மிகுதியும் குறைவும்; இரண்டடிகளில் முதலடி மிகுதியான சீர்களாலும் இரண்டாமடி அதனினும் குறைந்த சீர்களாலும் அமைதல். பல்லவம்-கீர்த்தனத்தில் திரும்பத்திரும்பப் பாடப்படும் முதலுறுப்பு. அனுபல்லவம்-கீர்த்தனத்தில் இரண்டாம் உறுப்பு.

சிந்து என்பது ஓர் இசைப்பாடல்வகை. இது பிறகு ஒரு பிரபந்தவகையாகவும் வளர்ந்தது.

இந் நூலாசிரியர் இதனை ஓர் இசைப்பாடல் வகையாகக் கொண்டாரேனும் இதன் உரையாசிரியர் பல்லவம், அனுபல்லவம் வகுத்து இதற்குக் கீர்த்தனை வடிவம் தந்தார்.

இசைப்பாடல் வகையாகவும், பிரபந்தவகையாகவும் இருத்தல் கருதிப் பிரபந்தவியலின் ஈற்றிலும், ஒழிபியல் நோக்கியும் இதனை இவ்வாசிரியர் வைத்தார் என்க.

சிந்துயாப்புடைய பாடல்களின் மிகுதிநோக்கி இதன் உரையாசிரியர் 'அளவில்லை ஆதலின்' என்றார்.

'இப்பொழுதுள்ளாரைப் பாடுவதே' என்பதை 'இப்பொழுதுள் ளார் பாடுவதே' என்று கொள்ளுதல் பொருந்துவதாகும்.

சிந்தைச் சமநிலைச் சிந்தென்றும், வியனிலைச் சிந்தென்றும் இருவகைப்படுத்துவர்.

"முதலடிச் சீர்களும் தனிச்சொல் அன்றி
மறியடிச் சீர்களும் எண்ஒத்து இருப்பின்
சமநிலைச் சிந்தாம்; ஒன்றின் மற்றொன்றுசீர்
மிகுநிலை யாயின் வியனிலைச் சிந்தாம்"

என்பது யாப்புநூல் (சரவணத்தமிழன், 1981).

சிந்திற்கு இலக்கணம் கூறும் முதல்நூல் இலக்கணச் சூடாமணியென்க.

கடுவெளிச்சித்தரின் ஆனந்தக்களிப்பு, தாயுமானசுவாமிகளின் பாடல்கள், பாரதியாரின் கிளிவிடுதூது போன்றவை இதற்கு இலக்கியங்களாம்.

பல்லவி

சொல்ல வல்லாயோ - கிளியே
சொல்லநீ வல்லாயோ

அனுபல்லவி

வல்லவேல்முரு கன்தனை - இங்கு
வந்து கலந்து மகிழ்ந்து குலாவென்று (சொல்ல)

சரணங்கள்

1. தில்லை யம்பலத்தே - நடனம்
செய்யும் அமரர்பிரான் - அவன்

செல்வத் திருமகனை - இங்குவந்து
சேர்ந்து கலந்து மகிழ்ந்திடு வாயென்று (சொல்ல)

2. அல்லிக் குளத்தருகே - ஒருநாள்
அந்திப் பொழுதினிலே - அங்கோர்

முல்லைச் செடியதன்பாற் - செய்தவினை
முற்றும் மறந்திடக் கற்றதென்னேயென்று
(சொல்ல)

3. பாலை வனத்திடையே - தனைக்கைப்
பற்றி நடக்கையிலே - தன்கை
வேலின் மிசையாணை - வைத்துச்சொன்ன
விந்தை மொழிகளைச் சிந்தைசெய் வாமென்று
(சொல்ல)

என்ற பாரதியார் பாடல் இவ்விலக்கணத்திற்குப் பொருந்துமாறு அறிக.

அண்ணாமலை ரெட்டியாரின் சுப்பிரமணியர் காவடிச்சிந்து, கிருஷ்ணசாமி கோனாரின் ஸ்ரீமத் ராமாயண காவடிச்சிந்து, சி.இராமசாமி ஐயங்காரின் ரெங்கூன் பர்மா டாப்பு நொண்டிச்சிந்து போன்றவை சிந்து இலக்கிய நூல்களாகும்.

47. பரவிய - வழக்கினுள் மிகுந்த தரவுக்கு மூன்றடி சிறுமை என்பது அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவும், வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவும் ஒழித்து அல்லாத கலிப்பாவைக் குறித்தது; பெருமை பாடுவோனது பொருண் முடிவுக் குறிப்பாகும். எனினும், இந்நூலார் பெருமை ஐந்தென்றார்.

அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவிற்கும் வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவிற்கும் தரவு ஆறடியே என்பதை 'நிகழ்வது' என்னும் விதப்புக் கிளவியால் கொண்டார் யாப்பருங்கல விருத்திகாரர் (நூ.82).

தரவு கொச்சகக் கலிப்பாவிற்கு நான்கடியே சிறுமை என்பார் யாப்பருங்கலக் காரிகையுரை யாசிரியர்; அதனை அவருரையான் அறிக.

யாப்பருங்கலவிருத்திகாரர் அம்போதரங்கத்திற்கு ஆறடியே தரவு என்று கொண்டாரேனும், இடையளவு அம்போ தரங்கத்திற்கு ஐந்தடித் தரவு கொண்டமையான் இந் நூலாசிரியரும் தரவுக்குரிய பெருமையை ஐந்தடியாகக் கொண்டார் போலும்.

"சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவிரு மூன்றடியே
தரங்குக்கும் வண்ணகக் குந்தர வாவது தாழிசைப்பா
சுருங்கிற் றிரண்டடி யோக்க மிரட்டி சுரும்பிமிரும்
தரங்கக் குழலாய் சுருங்கும் தரவினிற் றாழிசையே"

என்பது யாப்பருங்கலக்காரிகை.

'பாவாய்' என்பது மகடூஉ முன்னிலை.

இவ் வெண்பாவின் ஈற்றுச்சீர் 'தாழ்வு' என முற்றிய உகரவீறாய் முடிந்தமை அறிக. வெண்பா 51, 58 என்பனவும் அவ்வாறே அமைந்தமை காண்க.

48. அராகஅடியும் நாற்சீரடியே அளவாக நடக்கும் என்று தேற்றவேகாரம் கொடுத்துக் கூறினார் இவ்வாசிரியர். இஃது அளவடி முதலாகிய எல்லா அடியானும் வரப்பெறும் என்று யாப்பருங்கலவிருத்தி கூறும் (யாப்.வி. 84).

"அளவடி முதலா அனைத்தினும் நான்கடி
முதலா இரட்டியும் முடுகியல் நடக்கும்" (யாப்.கா. 31மேற்.)

என்பது யாப்பருங்கலக்காரிகை உரைமேற்கோள்.

ஒரு சீரடியான் அம்போதரங்கம் நடக்கும் என்று இவ்வாசிரியர் கூறினாரேனும் அதற்குரிய எடுத்துக்காட்டைத் தரவில்லை.

"வண்ணகவொத்தாழிசையினுள் இருசீரோரடிச் சின்னம் பதினாறு ஒருசீரோரடியான் வருவனவும் உள" எனக் கூறி அவ்வாறு வந்த சிற்றெண்ணுக்கு, "தறுகணான் மத்தமடவன்" என்பதை எடுத்துக்காட்டகத் தருகின்றது மாறன் பாப்பாவினம் (பரிபாடல். 2); அதனைக்காண்க.

49. பாதம்-அடி; பேராறு-மலையில் பிறந்து நேரே கடலில் கலக்கும் நதி; அலைவரல்-(பெருகிப் பின் கரையை நோக்கி வரவரச் சிறுகிவரும்) அலையின் வருகைத்தன்மை.

எட்டுமே என்பதில் ஏகாரம் அசைநிலை. 'பேராற்றலைவரல் போல் பெற்று அம்போதரங்கம் சேரும்' என முடிக்க.

'கரைசாரக் கரைசார ஒருகாலைக் கொருகால் சுருங்கி வருகின்ற நீர்த்தரங்கம் போல' (யாப். கா. 31 உரை) என்றும், 'நீர்த்திரை போல வரவரச் சுருங்கி வருதலின்' (பேரா. தொல். பொருள். 452) என்றும் பிறரும் கூறினர்.

அம்போதரங்கம் வினைமுற்றாய வரும் என்று உரையிற்கோடலால் கொண்டு நூற்பாவிற்குச்சிறப்பு சேர்த்தார் இவ்வுரையாசிரியர் என்க.

**50.** நிரையீற்றின் ஈரசைச்சீர் என்பது கருவிளம் கூவிளம் என்பன. இச் சீர்கள் இணைந்துவரத் துள்ளலோசை தோன்றும் என்பதாம். நேரீற்று இயற்சீர்கள் (தேமா, புளிமா) ஒத்தாழிசைக்கலிப்பாவினுள் வாரா (யாப். வி. 15).

பிறர் இன்னின்ன சீர்கள் கலிப்பாவினுள் வாராவென்று கூறவும் இவ்வாசிரியர் வருஞ்சீர்களைக் கூறிலார் என்க.

"நிரைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
கலியினோ டகவலிற் கடிவரை இலவே" (யாப். 16)

"மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவின் விளங்கனிவந்
தாஞ்சீர் அடை யா.... ...... ...... ......" (யாப். கா. 40).

என்றார் பிறர்.

**51 .** காரிகையாசிரியரும் பிறரும் இரண்டு மற்றும் அதற்கு மேற்பட்ட நூற்பக்களில் கூறிய கருத்தை இவர் ஒரே நூற்பாவில் கூறியுள்ளார்.

'தானளபோடு' என்பதில் தான் அசைநிலை; அளபு-உயிரளபெடை. ஒவ்வாதேல்-(சீரமைதிக்குப்) பொருந்தா தெனில்; பெற்ற முறையகற்றி-(குற்றியலுகரம் முதலாகக் கூறப்பட்ட ஏழும் அவ்விலக்கணம்) பெற்றதற்கான தன்மையை நீக்கி; காட்டாக, நீடு என்றதனுள் ஈற்றெழுத்து குற்றிய லுகரமாகிச் சீரமைதிக்குப் பொருந்தாதெனின் அது குற்றியலுகரவிலக்கணம் பெற்றதற்கான தன்மை (உ) யை நீக்கவேண்டுமென்பதாம்.

எனவே இவற்றை வேண்டுழிச் சேர்த்தும் வேண்டாத வழி நீக்கியும் அலகிடவேண்டும் என்று கொள்க.

விருத்தப்பாவியலாரும் சந்தத்தில் வல்லொலியை வேண்டுழி நிலைநிறுத்தியும் வேண்டாதவழி நீக்கியும் கொள்ள வேண்டு மென்பதை, ஏழைகளை நீக்குவதும் வேண்டுழிக் கொள்வதும் 'உலகுவழக்கு' என்ற உவமையால் விளக்குவார்.

"வறியா ரெனவல் லொலியோங கலிலாக்
குறியே யெறியப் படுகொள் கையதே
நெறிவேண டுழியே நிலையா மதுவே
வறிய ரொருகால் வகையா குவபோல்"
(விருத்தப்பாவியல்,ஒழிபியல்,6)

அதுபோலக்கொள்க.

இவ்வொழிபியில் கருத்துகளை உறுப்பியலுள் கூறினார் யாப்பருங்கல ஆசிரியர்.

"தளைசீர் வஃண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே"

என்பது நூற்பா (யாப். 4).

விட்டிசையாவது குறிப்பு, ஏவல், தற்சுட்டு, சுட்டு, வினா என்னும் பொருண்மையின்கண் தனிக்குறில் மொழிமுதற்கண் விட்டிசைத்து நிற்பதாகும். இவ்வாறு விட்டிசைக்கும்பொழுது அத் தனிக்குறில் நேரசையாகும். அல்லாத வழி நேரசையாகக் கொள்ளப்பெறாது.

"ஏவல் குறிப்பே தற்சுட் டல்வழி
யாவையும் தனிக்குறில் முதலசை யாகா
சுட்டினும் வினாவினும் உயிர்வரு காலை
ஒட்டி வருஉம் ஒருசாரும் உளவே"

என்றார் மயேச்சுரர் (யாப். கா. 7 மேற்.).

யாப்பருங்கலக்காரிகை ஆசிரியரும் 'சீரும் தளையும்' (யாப்.கா. 51), 'விட்டிசைத்தல்லால்' (யாப்.கா. 52) என்னும் காரிகைகளில் கூறினார்.

52. மேல் (இலக்.சூ. 50), கலிப்பாவிற்குரிய சீர்வரையறை கூறினார்; இதனுள் ஒவ்வொரு பாவினுள்ளும் மயங்கும் பிற சீர்களைக் கூறுகிறார்.

"அல்லாதவெல்லாம் தாஞ்சீர் மயங்கும்" (யாப.கா. 40)

என்பதை இவர் விரித்துக் கூறினார் என்க.

பண்-இசை; சேர்-பொருந்திய; அகவற்சீர் பிற்பாதி-ஆசிரியவுரிச்சீரின் பிற்பகுதிச்சீர்கள் கருவிளம் கூவிளம் என்பன. பொலிவு-அழகு. எடுத்தசீர்-பொருந்தியசீர்.

திருவள்ளுவப்பயன் என்பது திருக்குறள். 'அறம்பற்றி வருதல் திருவள்ளுவப்பயன் முதலிய சான்றோர் செய்யுட்களுள் அறப்பகுதியிற் கூறப்பட்டன' (இளம்.தொல்.பொருள். 152) என்றும், 'திருவள்ளுவப் பயனில் வான்சிறப் பென்னும் அதிகாரத்துள்ளும் கண்டுகொள்க' (தக்கயாகப்பரணியுரை, க. வா. 9) என்றும் பிறரும் உரைத்தல் காண்க.

"இந் நூலுடையார்க்கும் உடன்பாடு" என்றமையால் நூலாசிரியர் வேறு உரையாசிரியர் வேறு என்பது புலனாம்.

53. அயற்பா-ஆசிரியப்பாவல்லாத வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா. பாக்களுள் பிறவடிகள் மயங்குமாற்றை,

'வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே' (யாப். 30)

'வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்' (யாப். 31)

என்றார் யாப்பருங்கல ஆசிரியர்.

அடிமயக்கம் கூறும் இவ்வெண்பா யாப்பருங்கலவிருத்தி யாசிரியரால் மேற்கோளாகக் காட்டப்பெற்றதாகும். இதனை அவர் நாலடி நாற்பது என்பார். அவ்வெண்பாவை,

"ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்
ஆசிரியம் வெண்பாக் கலிக்கணாம் - ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா அடிவிரவா உற்று"

என்றார் நாலடி நாற்பது உடையார் எனக்கொள்க" (யாப்.வி. 31). காரிகையாசிரியரும் இவ் வெண்பாவைப் போற்றிக்கொண்டார் (யாப்.கா. 39).

54. மிஞ்சாது-மிகாது; இடை-ஏழன் உருபு; மருவுதல்-கலத்தல்; வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி என்னும் நான்கு பாக்களுள் முதலிலும் ஈற்றிலும் நின்ற வெண்பா, வஞ்சி நீங்கலாக இடையில் நின்ற ஆசிரியம் கலி, இரண்டனுள்ளும் ஐஞ்சீரடி மயங்கும் என்றார். பயவுணர்வுடையார் முன்னும் செல்லாது பின்னும் செல்லாது இடையில் செல்வாராதலைப் போல இவ்வைஞ்சீரடி

முதலும் இறுதியும் நின்ற பாக்களில் கலவாமல் இடையில் நின்ற பாக்களில் கலக்கின்றது என்று நயம்படவுரைத்தார். இதனையே "அஞ்சினர் பின் போவதென ஆம்" என்றார் ஆசிரியர்.

ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீரடிவரும் என்பது,

"வெள்ளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப"
(தொல்.பொருள். 375)

என்னும் தொல்காப்பியத்தால் பெறும்.

"தொல்காப்பியனாரும் கீரனாரும் முதலாக உள்ளார் ஒருசார் ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவரப்பெறும் என்றார்" என்பர் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் (யாப்.வி.95 மேற்).

'மிஞ்சாது அடையும்' என்ற விகற்பத்தினால் இலக்கணச் சூடாமணி உரையாசிரியர் கொண்டது யாப்பருங்கலக் காரிகையை நோக்கியதாம்.

"அருகிக் கலியோ டகவல் மருங்கினைஞ் சீரடியும்
வருதற் குரித்தென்பர் வான்றமிழ் நாவலர் . . ."
(யாப்.கா. 42)

'நெடுவேற் கண்ணாய்' என்பது மகடூஉ முன்னிலை.

55. யாப்பருங்கலக்காரிகை 42, 43 ஆகிய இரு காரிகைகளின் கருத்துகளையும் தொகுத்துக் கூறியது இவ்வெண்பா.

காண்க:

"கருதிற் கடையே கடையிணை பின்கடைக் கூழையுமென்
றிரணத் தொடைக்கு மொழிவர் இடைப்புணர்
வென்பதுவே" (யாப்.கா. 42)

"வருக்க நெடிலினம் வந்தால் எதுகையும் மோனையுமென்
றொருக்கப் பெயரான் உரைக்கப் படுமுயி ராசிடையிட்
டிருக்கு மொருசா ரிரண்டடி மூன்றா மெழுத்துமொன்றி
நிரக்கு மெதுகையென் றாலும் சிறப்பில நேரிழையே"
(யாப்.கா. 43)

56. முறையே என்றது பாக்களின் வைப்புமுறையைக் குறித்தது. வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என. பின்னும்-மேலும்.

"முதலொருசீர் கூனாம்" என்றதனால் நானகு பாவிலும் முதற்கண் கூன்வரப்பெறும்.

"நான்கு பாவின் அடிமுதற்கண்ணும் சீர் கூனாய் வரப்பெறும் என்பாராயினும், வஞ்சியடியின் முதற்கண் அசை கூனாய் வருவதும், உகர ஈறாகிய நேரீற்று இயற்சீர் கூனாய் வருவதும் சிறப்புடைய; வஞ்சியடியின் இடையும் இறுதியும் அசை கூனாய் வருவதின்றிச் சீர் கூனாய் வாராது; ஆண்டு உகர ஈறாகிய நேரீற்று இயற்சீர் அருகிக் கூனாய் வரவும் பெறும்; அச்சீர் அல்லாப் பாவில் அடி முதற்கண் அருகி அல்லது கூனாய் வாராது. கொச்சகக் கலியின் ஓரடி கூனாய் வருமாயினும் சிறப்பில்லை; வெண்பா ஆசிரியம், கலி என்னும் இவற்றின் அடியுள் இடையும் இறுதியும் கூன் வரப்பெறாது என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது" (யாப்.வி. 94) என்பது யாப்பருங்கல விருத்தி.

ஆசிரியம் கலி ஆகிய இரு பாக்களில் இடையிலும் இறுதியிலும் கூன்வரப் பெறாது எனப் பிறர் கூறவும், கலிக்கு இடையிலும் வஞ்சிக்கு இடையிலும் இறுதியிலும் கூன்வரப்பெறும் என்று இவ்வுரையாசிரியர், அவற்றிற்குரிய எடுத்துக்காட்டுகள் காட்டாது கூறினார்.

விகாரம் என்பது சொல்வேறுபாடு; வழக்காலும் செய்யுள் செய் மரபாலும் உண்டாகிற சொற்றிரிவுகள் விகாரம் எனப்படும்.

வகையுளி என்பது சொல்லின் முடிவையே சீர்முடிவாக்கித் தளை கொள்ளாமல் வேண்டியவிடத்துச் சீர்முடிவு செய்து தளை கோடல். வகையாவது வேண்டியவழி வகுத்துக்கொள்ளல்.

உளி என்பது பகுதிப்பொருள் விகுதி. 'முறையுளி'; (பெரும்பா.462), 'பழுதுளி' (மலைபடு.153), என்றாற்போல, சீர்நோக்கி அலகிடாமல் ஓசை நோக்கி அலகிட்டுரைத்தல் வகையுளியாம்.

> வாழ்த்தாவது-புகழ்ந்து கூறுதல்;வசையாவது
> "வெளிப்படக்கூறக்கேட்டார்க்கும் தனக்கும் இன்பம்
> பயத்தலிற் குறிப்பினாதற் கூறல் வேண்டுவது"
> (இளம்.தொல்.செய்.172). இது "புகழ்போன்று
> வசையாதலும், வசைபோன்று புகழாதலும் படவரும்"
> (நச்.தொல்.செய்.124).

வனப்பாவது பலஉறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகு. இது செய்யுட்குரித்து, எண்வகை வனப்புகள் தொல்காப்பியத்துள் விளங்கக் கூறப்பட்டுள்ளமை காண்க.

பொருள்கோளாவது புலவன் பாடல்வழிக் கூறக்கருதின பொருளை நுகர்வார் கொள்ளவைக்கும் முறையாகும். இது நால்வகைப்படும் என்பது தொல்காப்பியம்.

"நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே"

(தொல்.சொல்.இளம்.398)

யாப்பருங்கல விருத்தியாசிரியரும், யாப்பருங்கலக் காரிகை யாசிரியரும் கொண்ட ஒன்பது வகைப்பொருள் கோளையே இந்நூலாசிரியரும் கொண்டுள்ளார்.

நிரல்நிறைப்பொருள் கோளுக்கு யாப்பருங்கலவிருத்தி யாசிரியர் கூறிய வகைகள் பலவற்றையும் இவர் தொகுத்துக் கூறியுள்ளார்.

எழுத்தல் ஓசையாவது வரிவடிவம் பெறுதற்கியலாத ஓசை; இது குறிப்பிசை எனப்படும்.

57. ஒப்பு என்பது ஒன்றை ஒப்பநிற்கும் பிறிதொன்றையும் அதற்கொப்ப எண்ணுதல்.

"மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவும் கொளலே"

என்பது யாப்பருங்கலம் (93).

இவ்வுரையின் விரிவைத் தொல்காப்பியம் மற்றும் யாப்பங்கல விருத்தியுள் காண்க.

58. தழுவாமல்-கலவாமல்.விழுமிய-சிறந்த. ஒர்-அசைநிலை. அறிவு-கல்வி. சுரக்கும் அறிவு என்பதைக் கற்றனைத்து ஊறும் அறிவு என்றாற் போலக் கொள்க. பொற்புடையோர்-தகுதியுடையோர்; புலவர். பொலிவு-அழகு.

எழுவகை வழுவைத் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தி னுள்ளும், குற்றவகை ஆறனை யாப்பருங்கல விருத்தி யுள்ளும் விளங்கக் காண்க. பொலிவு என்பது முற்றிய லுகரவீறு.

# 1. நூற்செய்யுள் முதற்குறிப்பு அகரநிரல்

(எண் - நூற்பாஎண்)

## 2. உதாரண முதனினைப்புக் காரிகை அகரநிரல்

(எண் - நூற்பா எண்)

## 3. நூற்செய்யுள் சொல்லகரநிரல்

## உரைச்சொல் - தொடர் அகரநிரல்

அ

ஆ

ஈ



உ

ஏ



ஐ



ஒ

த

ந

ப

ம

ய



ல



வ

## 5. இலக்கணமேற்கோள் அகரநிரல்

## 6. இலக்கியமேற்கோள் அகரநிரல்

Alagappa university
Central Library
36308
அழகப்பா பல்கலைக்கழகம் வளர் தமிழ் நூலகம் காரைக்குடி